தைக் கொள்ளை கொண்டன." எனவும், காருண்யம் "இப்படித்தான் அம்மா உளம் ஒன்றுபடுவதும். ஓசை மட்டுமான இவை நம்மனதில் இவ்வளவு பற்றுளதாகச் செய்யும் வலிமையுளவேல், குழந்தைப் பருவம் தொட்டு ஒருவரோடொருவர் இணை பிரியாது பழகி, நேயம் இன்னதென்று ஆராய்ந்தறியும் முன் நிலையான நேயம் பாராட்டி, ஒரு தனித்த உள்ளம் இல்லையென்று சொல்லும்படியாக, இரண்டும் இயைந்து ஒன்று பட்டபின், அந்த ஒருமை எக்காரணத்தையும்கொண்டு மாறும் தன்மைய தன்று." என்று சொல்லித் தனக்கும் விஜயத்துக்கும் உள்ள ஒருமையை உள்ளத்தின்கண் வியந்து அன்பு மேலு மேலும் கரை காணாது பெருகக் களிப்பில் தன்னையே மறந்து நின்றாள்.

இதைக்கேட்ட கண்ணகி "சரிதான் காருண்யம். வாணியைப் பார்த்து,

'பாக்கியசாலி நீ பழகியும் உளையேல்.'

என்ற மனோன்மணியின் உட்கருத்தை இப்போதுதான் அறிந்தேன்." என்று தனக்குள் சிந்தித்துக்கொண்டிருந்தாள்.

அப்போது காருண்யம், "ஆனால் எனக்கு ஒன்று விளங்க வில்லை. தான் நேரே பார்க்காததும் கேட்காததுமான கனவில் கண்ட உருவத்திற்காக ஊனையும் உயிரையும் உருக்கும் காதல் கொண்டு, பிறகு எஞ்ஞான்றும் பற்று மேலு மேலும் மிகும் மனோன்மணியின் அன்புதான் என்னால் அறியக்கூடவில்லை.

'போதங் கரைந்து மேற் பொங்கிடும் அன்பை
பூத யாக்கையோ தடுத்திடும்?'

என்பது நன்றாய்ப் புரியவில்லை. மேலும் மனோன்மணி கடைசியில் தன் தந்தையிடமுள்ள அன்பு காரணமாகப் பரமசண்டாளனான பலதேவனையும் மணக்க இசைந்தனளே. அதென்ன புதுமை!" என்று அயர்ந்தாள். மறுபடியும் காருண்யம், கண்ணகியை நோக்கி, "காதலைத் தவிர்த்து வேறு பொருள் ஒன்றல்லவோ அவளை அவ்விதம் உட்படச் செய்கிறது. அதை அத்தான் அவர்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும். அதுவுந்தவிர, இன்னொன்று:

'கண்டவர்க் கெல்லாம் பண்டைய வடிவாய்
நீ இவணிருக்க, நின்னுளம் வாரி
வெள்ளிலா மெள்ள விழுங்கி, இங்ஙனம்
வேதகஞ் செய்த போதக யூதபம்,
பேரிலா ஊரிலாப் பெரியோன், அவன்றான்
யாரே யாயினு மாகுக. அவனொடு நீ
அணையுநாள் அடியேன் மணநாள். அன்றேல்
இணையிலா உன்னடிக் கின்றுபோ லென்றும்
பணிசெயப் பெறுவதே பாக்கியம் எனக்கு.'

என்று வாணி சொல்லும் சூளும் என்னால் அறியக்கூடவில்லை. இன்னும் அரைநாழிகையில் பாழ் மகனான பல தேவனுக்கு மணக்கப்படும் மனோன்மணியிடம் இவ்வளவு அன்புசெலுத்தும் மனநிலையின் தன்மை என்ன? அவள், தன் நடராஜனிடம் வைத்த அளவற்ற காதலையும் விட இது பெரிதாகத் தோன்றுகிறதே. ஆதலால் அன்பு என்பது வேறுபட்ட பாலார் இருவர்க்குள்ளேயே நிகழும் காதலையும் தன்னுட்கொண்ட தனிப்பெரும் பொருளாய் இருக்கவேண்டும்." என, தனிமுதலான கந்தழியின் அன்புருவத்தைக் காதலான அடிப்படியிலிருந்து, சேய்மையில் செறிந்து சிறிதே விளங்கும் கடமை வழியாய், எட்டிப்பார்க்க முயன்றனள்.

சிறிதுநேரம் இருவரும் மௌனமாயிருந்தபிறகு கண்ணகி, "இப்போது படித்தன யாவும் என்மனதிற்குச் சாந்தத்தைக் கொடுத்தன." என்று சொல்லிப் பிறகு "கொஞ்சநேரம் ஏதாவது விளையாடலாம் வருகிறாயா?" என்று கேட்டாள்.

"இன்னும் கொஞ்சம் படித்துப் பின் விளையாடலாம்." என்றாள் காருண்யம்.

"படித்தது போதும். மற்றவை பிறகு படிக்கலாம். இப்போது சற்றுநேரம் விளையாடின பிறகுதான் என்னால் படிக்க முடியும்." என்றாள் விளையாட்டில் ஆசைகொண்ட கண்ணகி.

அப்படியானால் கழலாடலாமா?" என்றாள் காருண்யம்.

"நிரம்ப சரி! கழல்தான். எனக்கு அதிலுள்ள விருப்பம் வேறு எதிலும் இல்லை." என்றாள் கண்ணகி.

"அப்படியானால், மனோன்மணியும் வாணியும் கழலாடுகிற பாட்டுப்பாடி ஆடுவோமா?" என்றாள் காருண்யம்.

"ஓகோ நான் சொல்ல மறந்துவிட்டேன்! மனோன்மணீயத்தை முதலில் படித்தபோதே நான் அந்தக் கழற்பாட்டை வரப்படுத்திக்கொண்டேன். அதன் அழகே அழகு! எனக்கு முன்னே அதுதான் வரும்!!" என்று பரவசப்பட்டாள் கண்ணகி.

சரி என்றிருவரும் விரித்த கம்பளத்தில் எதிருக்கெதிராக உட்கார்ந்து கழலாட ஆரம்பித்தனர். உடனே யார் ஆரம்பிக்கிறதென்று கண்ணகி அவசரப்பட்டாள். "நான்தான் முன்னமே சொன்னேனே, எனக்கு வாணிதான் விருப்பம்." என்றாள் கண்ணகி.

உடனே காருண்யம் "இல்லை கண்ணகி! எனக்கு வாணியின் பாட்டுத்தான் செவ்வையாய்த் தெரியும். மனோன்மணி பாடுவது எனக்கு அவ்வளவு ஞாபகமில்லை. உனக்குத்தான் முழுமையும் தெரியுமே!" என்றாள்.

"ஆனால் சரி. நீ எப்படியாவது சாக்குப்போக்குகள் சொல்லிவிட்டு மறுபடியும் படிக்கலாமென்று பார்க்கிறாய். நான்தான் மனோன்மணியோடு பாடுகிறேன்." என்று இருவரும் வெகு சந்தோஷத்தோடு விளையாடினர்.

முடிவில் கண்ணகி காருண்யத்தை நோக்கிச் சிரித்தவண்ணம் "என்ன, காருண்யம நீயும் இங்ஙனம் கடைசியில் பெருமூச் செறிகின்றனையே! வாணிதான் தன் அன்பன் பெயர் நாணி அயர்ந்தனள். உனக்கேனோ இவ்வளவு அயர்வு?" என்றனள்.

காருண்யம் ' எனக்கு அயர்வென்ன? பாட்டின் கடைசியில் இங்ஙனம் உயிர்ப்பெழுந்து சோருவது பாடுபவர் யாவருக்கும் இயல்புதான்." என்று சொல்லிக் கீழ்நோக்கினள்.

நோக்கலும், கண்ணகி "ஓ நானறிவேன்! நன்று! நன்று!!" என்று தன் பரந்த கண்கள் தவழ நோக்கி, இதழ்விரியும் மலரே போல் புன்சிரிப்புப் பூத்தனள்.

## ரு. கனவு.

கல்லாதான் கண்ட கழிநுட்பம் கற்றார்முன்
சொல்லுங்கால் சோர்வுபடுதலால்—நல்லாய்!
வினை முந்துறுத உரையில்லை, இல்லை
கனை முந்துறுத வினை.—மூன்றுறை அரையர்.

காலையில் ஷண்முக நாதருக்குத் திடஞ் சொல்லி வெளிப் போந்த பெரியார் நேராகத் தம் இல்லஞ்சென்று, ஸ்நானஞ் செய்து, பூஜைமுடித்து, உண்டிகொண்டபின் சிறிது தூக்கங் கொள்வான் தனது பள்ளியறைக்குள் பிரவேசித்துப் பஞ்சணையில் படுத்திருந்தனர். நேற்றிரவெல்லாம் விழித் திருந்தனராதலின் நித்திரை அவரறியாமலே அவர் கண்களைத் தன் வயம் ஆக்கிற்று. வெளியிலுள்ள பொறிகள் அவர் கொண்ட கருத்தை அறிய முடியாது அயர்ந்திருப்பினும், மனம் ஒரு க்ஷணமாயினும் அவர் மேற்கொண்ட எண்ணத்தை மறக்கவில்லை. அவ்விஷயத்தை எவ்வெவ்விதம் ஆராய முடியுமோ, அவ்விதமெல்லாம் ஆராய்ந்தும் ஒரு முடிவுக்கு வராததால் அவர்மனம் ஓயாது பேயாய் அலைந்தது. ஆகவே அவர் அயர்ந்த தூக்கத்தை அநுபவித்தாரல்லர்.

படுத்த இரு நிமிஷங்களுக்கெல்லாம் அவர் ஒரு பெரிய நகர்ப் புறத்தினில் இருந்ததாகத் தோன்றியது. மாலை வெளிச்சமுடைய அப்பிரதேசத்தில் அநேகமைல் தூரம் செந்நெல் வயல்களும், ஓடுகால்வாய்களும், இளம்பயிர்களும், இடைவீடின்றித் தெரிந்தன. மற்றுமோர்புறம் காடுமுரடான நிலம் புல்செறிந்து, கல் மிகுந்திருந்தது. மத்தியில் பெரிய குளம் ஒன்றில் சுற்றிலுங் கட்டிய பாறைகளுஞ் சிறுகற்களும் இடிந்து சரிந்து ஜலத்தில் மூழ்கியிருந்தன. மேலும் அதன் ஈசானிய திசையில் முதிர்ந்து பருத்த ஓர் ஆலவிருட்சம், அடியில் கொஞ்சந்தவிர மற்றவை பலமற்றுப் பெரும் விழுதுகளைத் தூணென எல்லாத்திசையிலும் நாட்டித் தன்னிடத்து இலை ஒன்றுமே யில்லாமல் மொரோவென்று நின்றது. அதன் மேல் எங்குந் தங்கியிருந்த கருங்குரங்குகள் கணக்கற்றன. இவ்வாலமரத்தின் அடிப்பொந்திலிருந்து கூட்டங் கூட்டமாய்க் கருங்குரங்குகளைப் போன்று வால்மாத்திரமின்றி வெளிவந்தனர் பலமனிதர். அவர்களுடைய கறுத்துக் குறுகிச்

சுருண்ட தலைமயிரும், பருத்துப் படர்ந்த பெரிய மூக்கும், அகன்ற முகமும், மெலிந்து வளைவுள்ள கால்களுங் கைகளும் பயங்கரத் தோற்றமுடையன. இடுப்பில் ஒரே கருந்துணி ஒவ்வொருவரும் உடுத்திருந்தனர். இவர்களில் எவரும் பெண்பாலர் இல்லை.

முதியரும், இளையரும், வயதினரும் ஒருங்குகூடி இடிந்திருந்த மேற்சொன்ன குளத்தில் வீழ்ந்தனர். திடீரென்று இவர்கள் யாவரும் வெளியில் வருமுன்னமே குளத் திற்கெதிரில் வெகு தூரத்தில், பக்கத்தூரிலுள்ள பிள்ளைகளும், சிறுமிகளும், பெரியவரும் வேடிக்கை பார்ப்பதற்கென வரிசையாய் நின்று, சத்தம் இடாது இருந்தனர். மகாதேவரும் அக்கும்பலின்கண் சென்று உற்று நோக்கினர். வெளியில் வந்த காட்டுமனிதரில் சிலர் கையில் கட்டாரியேந்தி, ஓர் இடத்தில் நின்றனர். மற்றுஞ் சிலர் பெரிய தேங்காய்களைச் சிலர் தலை மேலும் மார்புமேலும் முதுகுமேலும் உடைத்து நாற்புறமும் எறிந்தனர். பிறகு பலவித பெருங்கூச்சலிட்டனர். உடனே கட்டாரியேந்தி நின்றவரில் ஒருவன் ஜனங்கள் நிற்கும் பக்கம் ஓடோடியும் வந்தான். அங்கு நின்ற ஜனங்கள யாவரும் ஓட வகையறியாது தயங்க, தங்களைச் சுற்றிலும் வெளுத்துப் பட்டுப்போன மரங்கள் அநேகம் அப்போது இருப்பனபோல் அவர்களுக்குத் தோன்றின. இதுவரையில் தெரியாது இப் போது எழும்பிய இலை உதிர்ந்து பட்ட பலமரங்களின் மீது யாவரும் ஏறி நின்று, ஒருவித கூச்சலும் இடாதிருந்தனர்.

ஆகிலும் ஓடிவந்தவன் ஓர் அழகிய பெண்ணையும் அவளோடு நின்ற ஓர் ஆடவனையும் தூக்கிக்கொண்டு ஓடோடியும் போனான். இவர்களை அவர்கள் இடையில் கொண்டுபோன தும் இவர்களைக் கட்டாரியால் குத்த அவன் தன் கையை ஓங்கினன். உடனே மகாதேவர் ஓகோவென்று பேரிரைச்சல் இட்டனர். அப்பெண்ணையும் பிள்ளையையும் இவரறிவர். அவர்களை இழுத்துச்சென்று பிறகு அவர்களைக் குத்தினவனையும் இன்னனெனத் தெரிவதாக இவர் நினைத்தார். அவர்கள் பெயரைச் சொல்ல முயன்றனர். "ஓ ஓ. விஜயம்! விஜயம்!! காருண்யம்!" என்றிரைந்து மூர்ச்சையாய்விட்டனர். பிறகெழுந்து பார்க்க எல்லாம் மறைந்திருந்தது; பச்சை வயலும் ஓடு ஜலமுந் தெரிந்தன. கும்பலும் இல்லை. காட்டு

மனிதரும் இல்லை. ஆனால் கட்டாரியை ஓங்கிக் குத்தியவன் அவ் ஆலமரம் ஏறி அதினின்றும் அப்பாழ்ங்குளத்தில் பேரிரைச்சலிட்டு விழுந்தனன். உடனே மகாதேவர் விஜயா! என்று கூப்பிட்டவாறே தனது பள்ளியறைப் பஞ்சணையினின்றும் எழுந்தனர்.

மகாதேவருடைய வீட்டின் முழுவிவரமும் பின்னொரு பிரிவில் பெரிதும் கூறப்படுமாதலால் இப்போது நமக்கு வேண்டுவதை மாத்திரம் சற்றுக் கவனிப்போம்.

மகாதேவருக்கு மேல் மாடியில் வேறு பள்ளியறை இருப்பினும், இப்போது படுத்திருந்த அறை அவரது பெரிய கட்டடத்தின் பின்புறம் தோட்டவாயிலுக்கு இடது புறமாக அமைந்திருந்தது. இரண்டு பெரிய ஜன்னல்கள் தோட்டத்தை நோக்கியிருந்தன. இதைச்சார்ந்த தோட்டம், முன்னே கூறியுள்ளபடி, பின்னால் ஷண்முக நாதர் தோட்டம் வரையிலும் பரந்திருக்கிறது. இதன் மேற்பாதியில் சில மாமரங்களும், எலுமிச்சைகளும், நாரத்தை முதலியவைகளும் இருக்கின்றன. கீழ்ப்பாதி முழுவதும் பலவித பூஞ் செடிகளால் நிறைந்திருக்கிறது. ஆகவே இப்பள்ளியறையில் பகலிலும் வெயிலின் வெப்பம் சிறிதுமின்றி. நல்ல காற்று வீசி, எப்போதும் ஆரோக்கியமான தூக்கம் உண்டுபண்ணுகிறது.

அயர்ந்த அரைநாழிகைக்கெல்லாம் அப்பெரியவர் எழுந்து கைகால்களை உதறிக்கொண்டும், கண்களைத் துடைத்துக் கொண்டும், உள்ளங்கைகளை ஒன்றோடொன்று தேய்த்தும் 'நான் இன்னும் தூங்குகிறேனா?' என்று தனக்குள் பேசிப் பிறகெழுந்து, கதவண்டைபோய்த் தாழ்ப்பாளிட்டுத் திரும்பிப் பலகணி ஒன்றினிடம் போய் நின்று "என்னே நான் கண்ட கனவு! என்னகோரம்! என்ன விந்தை! என்ன மாயம்! எவ்வளவு பயங்கரம்! கனவு என்றால், இந்திரியங்கள், மனோபாவம் இவைகளின் வழியாய்த் தெரிந்தன, மனத்தில் ஞாபகப்படுத்தப்பட்டு வேறுபட்ட விதங்களாய்த் தோன்றும் என்பரேயொழிய, நாம் இதற்குமுன் பார்க்காததும், கேட்காததும் ஒன்று சேர்ந்து நம்மை மயக்கித் திகைக்கச் செய்வது அன்றே. எனினும், சற்று முன் நான் கண்டகனவை என் மனம் ஒருபோதும் நினைத்த தில்லையே! இறைவனே! எல்லாம் உன் செயல் தான் ஒருகால், வருவன உணர்த்தும் கனவோ இது? ஐயோ!

அப்படியெனில் இது எவ்வளவு பயங்கரமானது! ஒரு தனி முதல்வனே உன்னருள்தான். நான் என்ன செய்வேன்." என்று இரங்கினர்.

சிறிதுநேரம் சென்று பூந்தோட்டத்தை நோக்கிய படியே சிந்தித்தார். இப்போது இவருக்கெதிரில் ஓர் ஆள் வரினும் அவனைப் பார்த்தறியார். "யாரோ தெரிந்தவனன்றோ இக்கொடுந்தொழில் புரிந்தனன். இருவிநாடிக்கு முன் நானறிந்தேனென நினைத்த அவன் இப்போது இன்னனெனத் தெரியவில்லையே. இதென்ன கெட்ட காலம்! எது எனக்கு அவசியமாய்த் தெரியவேண்டுமோ அதை மறந்து விட்டேனே! கனவில் கண்டதெனினும் இவ்வளவு சீக்கிரமாய் மறத்தல் முடியுமோ? இது எனக்கு எவ்வளவு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. குத்துஞ் சமயத்தில்தான் அவன் எனக்கு நன்றாய்த் தெரிந்தவன்போல் இருந்தான். நானும் அவன் பெயரைச்சொல்லிக் கூவமுயன்றேன். ஆ ஆ எனக்குத் தெரிந்த அவன் யாராயிருப்பான்? கனவாயின் என்ன? விஜயத்திற்கும், அவனுக்கும் என்ன சம்பந்தம்? அல்லது காருண்யத்திற்கும் அவனுக்குந்தான் என்ன சம்பந்தம்? அந்தோ! நான் ஏனோ இக்கனவு கண்டேன்? ஒருகால் இக்கனவு இக்கடிதச் சார்பான குறிப்புடையதோ? ஆமாம், அப்படியிருத்தல் கூடும்; அப்படியானல் நான் பார்த்த அவன் காளிதானோ? அவனோ இத்தீத்தொழில் புரிந்தவன்? அவன் நல்லவன் என்றல்லவோ நான் எண்ணினேன். என்னிடம் உண்மை உரைத்தான் என்றேதான் நான் இதுவரையில் நம்பியிருந்தேன். அப்படியானல் அவன் சொன்னதெல்லாம் பொய்யோ? ஐயோ! இழந்த மணியைப் பெற்றேனென நினைத்த நான் உண்மையில் ஏமாறியேபோனேனோ?

"இது இப்படியானல் எனக்குத் தீங்கு செய்யவே வந்தனன் போலும்; இவன் கொடியவனகில் என்ன தான் செய்யமாட்டான்! ஐயோ என்விஜயத்திற்கு நானே ஆபத்துத் தேடினேனே. ஐயோ! விஜயம்! விஜயம்!! புலிவாய்க்கே இரையை அனுப்பினேனே பாவி! ஓகோ எனக்கெல்லாம் இப்போது விளங்குகிறது: காளி கடுந்திருடனே. ஷண்முகநாதருக்கும் தீங்கியற்ற முன்வந்தானே இப்பாவி! நான் இவ்விதம் சற்று முன் நினைத்தேனில்லையே. ஐயோ! அப்பா!!" என்று பாதி

நினைத்தும் பாதி தனக்குத்தானே பேசிக்கொண்டும் நின்றனர். இரண்டு மூன்று விநாடிக்கெல்லாம் நாரத்தம் பழங்கள் காய்ந்த சருகுகளின்மேல் விழுதல் ஒப்பத் தோட்டத்தில் அரவங் கேட்டது. என்ன வென்று தோட்ட வாயிலால் வந்து பூந் தோட்டத்தில் நின்று, மேற்புறம் எலுமிச்சைகளின் பக்கமா கப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, ஷண்முகநாதர் தோட்ட வாயிலில் ஏதோ வெளுப்பாய்த் தெரிகிறது என்று திரும்புவதற் குள் அந்த உருவம் மறைந்தது. ஆனால் அது ஓர் ஆடவன் என்று மாத்திரம் இம்முதியோரின் கண்களுக்கு விளங் கிற்று. இவன் எவனாயிருப்பான் என்று எண்ணும் வேளையில் 'விஜயம் வந்தான்.' என்று உள்ளே குரல்கேட்க உட்சென்றனர்.

## ௬. தலைவன் தலைவி.

And if we find but one to whom we can speak out of our heart freely, with whom we can walk in love and simplicity without dissimulation, we have no ground of quarrel with the world or God.—*Robert Louis Stevenson.*

இதே நாள் பிற்பகல் சுமார் ஐந்து மணிக்கு ஜமீன் அரண்மனைப் பூந்தோட்டத்தில் இருவர் இனிய வார்த்தை பேசி மகிழ்ந்தனர். இப்பூவனம் அரண்மனைப் பெரிய கட்ட டத்தின் வடபுறமுள்ளது. இதைச்சுற்றி மூன்றுபுறமும் உய ர்ந்த கற்சுவர்கள் எழுப்பி இருந்தன. இவையோ கோட்டை மதில்கள் என்று கூறப்படும். முன் சொல்லியபடி இம்மதில் களைச் சுற்றி ஜமீன் சிப்பாய்களும் சேவகர்களும் இருந்தனர். ஆனால் வடபுறம் மாத்திரம் மதிலை அடுத்து ஒரு பெருமரத் தோப்பு பல காணி தூரம் பாவி இருந்தது. அத்தோப்பில் மதிலைச் சார்ந்த தென்னை, வாழை, எலுமிச்சை முதலியன வளர்க்கப்பட்ட முன் பகுதிக்கும், மற்ற மரங்களடர்ந்த பின் பகுதிக்கும் மத்தியில், குறுகிய புல் மிகுந்து நீண்டு அகன்ற ஒரு வெளியுண்டு. அதன்கண்ணே மயில் மான் முதலிய பல இல்லுறைப் பறவைகளும் மிருகங்களும் தங்கி விளையாடும். ஜமீன்வீட்டை அடுத்திருப்பதுதான் பலவித பூஞ்செடிகள் நிறைந்த பூங்கா. இதைச் சுற்றிலும் மதிலோரமாய்த் தென்னை மரங்கள் வரிசையாய் வளர்ந்து மதிலை மறைத்தேயிருந்தன. மேற்சொன்ன இருவரில் ஆடவர் மணிமங்கலம் ஜமீனின் இளவரசர். இவர் பெயர் சந்திரவர்மா. மற்றவர் இவர்தம்

மனைவி கோகிலம் என்பாள். இருவரும் யௌவன பருவத்தினரே. பூந்தோட்டத்தில் பலவிடங்களிலும் உலாவி, கண்ணுக்கு இனிய வாசனை வீசும் மலர்களைக் கைகள் நிறைய எடுத்து, சிறிதுநேரம் ஓரிடத்தில் அவ்விருவரும் எதிர்க்கெதிராய் நின்றனர்.

புன்முறுவல்பூத்த அம்மங்கை, சற்றே தன் நாயகனை ஆர்வத்தோடு நோக்கியபின், மேற்புறம் திரும்பி, களிப்புடைய வதனத்தோடு, "அந்த மலைச்சிகரத்தின்பின் சூரியன் ஒளிக்கிறான். சாயந்திரம் அவனுக்கேன் இவ்வளவு சிவப்பு! அதோ பாருங்களேன். மரமில்லாதிருக்கிற அந்த உச்சி எவ்வளவு அலங்காரமாயிருக்கிறது! பொன் மூடி யிட்ட அவ்வுச்சியை நான் சாயந்திரம் பார்க்கும்போதெல்லாம் எவ்விஷயமுமறந்து சந்தோஷமே வருகிறது. அத்தான்!" என்று சொல்லிய வண்ணம் படும் பரிதியைப் பார்த்து மகிழ்ந்தாள்.

"சூரியனுக்கு இவ்வழகிய தோற்றத்தைச் சீக்கிரம் விட்டுச் செல்ல மனமேயில்லை. அதோ பார் கோகிலம்! அந்தக் கம்பீரமான பெரிய மலைகள், பரந்து பச்சென இருக்கும் காடு, நம்மூர், இந்நந்தவனம், இதிலுள்ள நாமிருவர் இவை ஒன்றையும் விட்டுப்போக அவனுக்குத் திடமேயில்லை. இவைகளும் அவனுடைய மனத்தளர்ச்சியை உணர்ந்து நகைக்கின்றன." என்றார் சந்திரவர்மா.

"என்ன அத்தான்! மலைகாடுகளோடு நாமிருவர் என்கிறீர்கள்? அவைகள்கூட நம்மைப்போல் சூரியன் வருவதும் போவதும் தெரிந்து சந்தோஷமும் விசனமும் கொள்கின்றனவா?" என்று கேட்டாள் கோகிலம்.

"பின் இல்லையோ? இல்லாவிட்டால் இவைகள் இவ்வளவு மகிழ்ச்சியாய்த் தோன்றுவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டுச் சிரித்துக் கோகிலத்தைப் பார்த்து "கோகிலம்! அந்தக் குரல் கேட்டனையா? அதோ அந்தப்பக்கம்" என்று சுட்டிக் காட்டினார் சந்திரவர்மா.

"குயில்! அத்தான்! அது குயில்தான். அதன் ஒய்யாரக் குரலும் விட்டுவிட்டுக் கூவும் இனிமையும்! இளவேனிற் காலம் அல்லவா இது!" என்று பரவசப்பட்டனள் கோகிலம்.

இளநங்கையின் மெய்ம்மறந்த ஆச்சரியத்தை வியந்து வர்மாவும் இளநகை நகைத்துக் "கோகிலத்தின் குரல்தான் எல்

லாப் பறவைகளின் குரலைவிட இனிமையானது. என்கண் கோகிலந்தான் எவற்றினும் இனிமை" என்று அவள் மெல்லிய சிவந்த கையை எடுத்துத் தன் கையொடு சேர்த்தனர்.

"என்ன அத்தான் இது! பரிகாசம் செய்கிறீர்கள். அதோ கேளுங்களேன். 'குவ்-வூஉ--க்குவ்-வூஉ—குவ்-வூஉ' இது சரியல்ல. மறுபடியும் கேளுங்கள். அத்தான்! நான் கூவுவதைக் கேட்டு அது எவ்வளவு விரைவாய் அடுத்தடுத்துக் கூவுகின்றது! அதென்ன இசை! அவ்வளவு தெளிவாய் நமக்குச் சாரீரம் வருமோ அத்தான்?" என்றாள் மாசற்ற மனத்தினள்.

"இதோ இதோ இப்போது கேள். வேறுவிதமாய்ப் பாடுகிறது. எத்தனை விதமாய்க் குயில் பாடுகிறது! கோகிலம் எத்தனை விதமாய்ப் பாடும்?" என்று முழுமகிழ்ச்சியோடு அவளைப் பார்த்தார் மலர்ந்த கண்களையுடைய சந்திரவர்மா.

"அது பலவிதமாய்ப்பாடும். நீங்கள் எத்தனை விதமாய் என்னைப் பரிகாசம் செய்வீர்கள்? அதைச் சொல்லுங்கள் அத்தான்!" என்று கோகிலம் மிக்க பரிவோடு நோக்கினாள்.

"கோகிலம்! நீ குயிலைப்பற்றிப் பாடுவதுண்டே அதைக் கொஞ்சம்பாடு. உன் குரலைவிட அதற்கு அதிக இனிய குரல் இல்லை. நீ பாடு சொல்லுகிறேன்." என, இருவரும் அங்குள்ள ஒருமேடையில் உட்கார்ந்தனர். உடனே கோகிலமும் தனது இனிய குரலால் பின் வருவனவற்றைப் பாடினாள்.

"மந்த மாருதம் வந்து தவழ்மலர்க்
கந்தம் வீசு நற்காவினின் மாமரம்
சொந்தமாகத் துணையொடும் வாழிசை
அந்தமாங் குயில்! அன்புடன் பாடுவாய்.

"மன்னியோங்கும் வசந்தமும் வந்தது;
மின்னியெங்கு மலர்கள் விரிந்தன;
இன்னிசைக்குயிலே! இனிக்காட்டுவாய்
பொன்ன நாடுடையார் புகழ் கீதமே.

"மாமரக் கிளை தன்னின் மகிழ்ந்து வாழ்
கோமளக்குயிலே! இசை கூவுவாய்;
சாமிதந்த தனிக்குரல் காட்டினல்
தீமை யொன்றுமஃதோ இனிச் செப்புவாய்"*

* தாமரை நாண்மலர்.

இப்பாக்களின் இடையிடையே அடக்கொணு மகிழ்ச்சி அடையப்பெற்ற வர்மா "இவைகளை அமுதமென இயற்றி உலகத்திற்குப் பரிந்தளித்த உத்தமருக்குக் கைம்மாறும் உண்டுகொல்!" எனப் பெருங் களிப்பெய்தி, இவை முடிந்தவுடன் தமது மனைவியின் கைகளைத் தன் இருகரங்களாலும் பற்றி, "பொன்னே! என்ன இனிமை உன்குரல்!" என்று தளர்ந்து அசைவுற்ற குரலோடு மொழிந்தார். கோகிலம் சிறிது வேற்றுமை அடைந்தனளாக, தலை யெடுத்த நாணம் செக்கச் சிவந்து, அவள் கன்னத்தை விரிந்த ரோஜா மலர்களாகிற்று. அவளும் ஒன்றுஞ் சொல்லவராமல் அத்தான்! என்ருள்.

'உன் கண்கள் எப்படித் தளம்புகின்றன கோகிலம்!" என்று தனது நீண்ட செங்கையால் அவள் கண்களினின்று பெருகும் ஆநந்தக் கண்ணீரைத் துடைத்தார் வர்மா.

"அத்தான் உங்கள் அழகைப்பற்றி எனக்கு ஒன்றுஞ் சொல்லத்தெரிகிறதேயில்லை. உங்கள் முகமலர்ச்சியும், பரந்த நெற்றியும், கமலக் கைகளும், அழகையெல்லாம் ஒருங்கே திரட்டிவைத்திருக்கின்றனவே. எனக்கு இவைகளை இவ் வண்ணம் பார்த்திருப்பதே தான் பெருங்களிப்பு." என்ருள் கோகிலம்.

சந்திரவர்மா இவ்வகைப் பேச்சினின்றும் வேறுவிதம் திரும்ப மனமில்லாதவராஞலும், எப்படியும் தன் மனத்தி லுள்ளதைக் கோகிலத்தினிடம் சொல்லி, அவளைத் திடப்படுத் தவேண்டும் என்ற எண்ணத்தினுலே இங்குவந்தனர் ஆதலால், சற்றிருந்து கோகிலத்தை நோக்கி "கோகிலம்! நாளைக்கு நான் இங்கே இருக்கமாட்டேன்." என்ருர். உடனே கோகிலத்தின் கண்கள் ஜலத்தில் அமிழ்ந்தன.

"என்ன, அத்தான்! எப்போதும் எங்கெங்கேயோ போய்க் கொண்டிருக்கிறீர்களே?" என்று பரிவாய்ச் சொல்லி, "கொஞ்ச நேரத்துக்கு முன், நீங்கள் என்கண்ணீரைத் துடைத்தபோது, எனக்கு ஒரு பாட்டு ஞாபகம்வந்தது. ஆனல் அந்தப்படி இப்போதே நேரும் என்று நான் நினைக்கவே இல்லை, அத் தான்." என்று வருந்தினுள் கோகிலம். "என்னபாட்டு. அதைக் கொஞ்சம் சொல்." என்ருர் வர்மா.

"சொன்னல் இன்னும் அதிக வருத்தம்தான். அதில் என்ன பயன்?" என்று மேலு மேலும் வருந்தினுள் கோகிலம்.

"சொல் கோகிலம். இல்லாவிட்டால் நானும் வருந்து வேன். சொன்னால் நான் சீக்கிரம் வந்துவிடுகிறேன். சொல்." என்றார் வர்மா. கோகிலத்தின் இசையென்றால் அவருக்கு ஓரே களிப்புதான்.

உடனே "இதோ சொல்லுகிறேன் அத்தான்." என்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு

"வேறு புலம் படர்ந்து
பொருள்வயின் பிரிதல் வேண்டுமென்னும்
அருளில் சொல்லும் நீ சொல்லினையே;
நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி,
நின்னிற் பிரியலென், அஞ்சல் ஓம்பென்னும்
நன்னர் மொழியும் நீ மொழிந்தனையே:
அவற்றுள் யாம்வா ஆயின மாஅன் மகனே!
கிழவர் இன்னோர் என்னாது, பொருள்தான்
பழவினை மருங்கில் பெயர்பு பெயர் புறையும்.
அன்ன பொருள்வயின் பிரிவோய்! நின்னின்
றிமைப்புவரை வாழாண் மடவோள்
அமைக் கவின் கொண்ட தோளிணை மறந்தே."*

என்று பெரிதும் அசைவுற்ற குரலில் மெதுவாகவும் இனிமையாகவும் இசைத்தனள் கோகிலம்.

இதை அளவற்ற அன்போடு கேட்ட சந்திரவர்மா, சிறிது தனக்குள் நாணி, என்ன சொல்வதென்று தெரியாது "கோகிலம்! உன் குரலின் இனிமையும் பாட்டின் பண்பும் என் உள்ளத்தை உருக்கிவிட்டன." என்றார்.

கோகிலம் அப்போது "நீங்கள் நாளைக்கே போகவேண்டுமோ? அத்தான்." என்று கேட்டாள்.

"ஆமாம் கோகிலம் நீ வருத்தப்படாமல் இரு. நான் சீக்கிரம் வந்துவிடுகிறேன். உனக்குத் தெரியும்: நான் அதிகநாள் வெளியே போயிருக்கமாட்டே னல்லவா?" என்றார் வர்மா.

'அப்படியானால் எத்தனை நாளைக்கு அத்தான்?" என்று பெருங் கவலையோடு கேட்டாள் கணவனையே கடவுளென நினைக்கும் நங்கை.

''நான் சென்னைக்குப் போகிறேன். போய் இருவாரத்தில் திரும்பி வரலாமென்றிருக்கிறேன். நீ வருத்தப்படாதிருந்

* கலித்தொகை.

தால் சீக்கிரம் வந்துவிடுகிறேன்." என்று சொன்னார் சந்திர வர்மா.

"நான் வருத்தப்படவில்லை அத்தான். நீங்கள் சீக்கிரம் வந்து விடுங்கள். முன் இப்படித்தான் சொல்லி அதிகநாள் எங்கேயோ போயிருந்தீர்கள்." என்று மனம் வருந்தி வருத்தப்படாமலிருக்க வேண்டும் என்று முயன்றாள்.

பிறகவர் "இந்தத் தடவை சீக்கிரம்வந்துவிடுகிறேன் கோகிலம்." என்று மெள்ளச்சொல்லித் தன் மனைவியின் மாசில்லாத மனத்தின் தன்மைக்காகப் பேரானந்தம் உற்றனர்.

"நீங்கள் நாளைக்குப் போகிறதானல் இன்றைக்குப் பூச்செண்டு விளையாடவேண்டும்." என்று தன் கையிலுள்ள பூக்களை வெகு சீக்கிரமாய்க் கட்டினள். வர்மா சிரித்தனரேனும் அது இகழ்ச்சிச் சிரிப்பன்று; தன் நாயகியின் மன நெகிழ்ச்சியை வியந்த சிரிப்பே. "ஆம். ஆம்." என்றார் இவரும். ஏன்னே இவ் இருவர்தம் அன்பு!

## எ. காரியதரிசி.

It is an unweeded garden
That grows to seed; things rank and gross in nature
Possess it merely.—*Shakespeare.*

மணிமங்கலத்தில் சிப்பந்தி வீதியின் மேற்கோடியில் ஒரு புதிய எண்கோணக் கட்டடம் மிக அழகாய் அமைந்திருக்கிறது. நேற்றுத்தான் வேலைசெய்து முடிந்ததெ்ன எண்ணும்படி அவ்வளவு பளபளப்பாயும் சுத்தமாயும் இருக்கும் அவ் வீடு. இன்று இரவில் நாம் அங்கே செல்வதால் அதின் விவரத்தை மற்றொரு பகலிற் பார்த்து ஆநந்திக்குமாறு விடுத்து, விரைவாய் உட்புகுந்து, பலசேவகர்களைப் பணங் கொடுத்து மயக்கி, உள்மேல்மாடியில் இருண்ட ஒரு சிற்றறையில் சென்று, இருவர் மெதுவாகப் பேசுவதைஒன்றும் விடாது கேட்போம். அவ்வறையில் ஒரு சின்னஞ் சிறு விளக்கு மின்மினியென மின்னிற்று. மங்கிய அவ்வெளிச்சத்தில் எதிர்க்கெதிரிட்ட இரு சிறு நாற்காலிகளில் இருவர் அமர்ந்து ஏதோ இரகசியம் பேசினர். பிறகு மௌனஞ் சாதித்து ஒருவர் யோசிப்பதேபோல் தோன்றினர். இந்த நிமிஷத்தில் அவர்கள் உடல் நிலைமையை உற்றுநோக்குவோம்.

பெரிதுங் கறுத்த உருவம் அமைந்து, வயிறுமிகவும்கனத்து முன்வந்து, கால்களும் கைகளும் குறுகியனவாயினும் பருத்துச் சாயாது நேராக நிமிர்ந்து உட்கார்ந்திருக்கும் இவரே மணிமங்கலம் ஜமீன் அரசாட்சியின் காரியதரிசியாவர். இவர் உடை, வெளுத்த மல் வஸ்திரமாயினும் இருண்ட வெளிச்சத்தில மஞ்சளெனத் தோன்றியது. இருகைவிரல்கள், அவ் இருட்டறையில பளிச்சென்று மின்னும் வைர முதலிய கற்கள் வைத்திழைத்த பொன் மோதிரங்கள் நிரம்பி இருந்தன. படர்ந்திருந்த இவரது முகம் ஜீவகாருண்யம் படர வழியில்லாது செய்ததுபோலும். பெரிய கண்களாயினும் அவை நீண்டு செல்வதற்கு மனமில்லாமல் உருண்டு பெரிதும் குழிந்து ஆழ்ந்த யோசனை செய்பவர் என அறிவித்தன. இவருடைய நெற்றி அதிக அதிர்ஷ்டத்தை அறிவித்தது. வைரக்கடுக்கன் மின்னும் இவர் காதிற்கு இரகசியம் இன்றியமையாதது எனத்தோன்றிற்று. அடர்ந்து, கொஞ்சம் வெள்ளிய மயிரும் தோன்றி, வளைந்த இவருடைய கனத்த மீசையும், பருத்த உதடுகளும், பிடித்த பிடி விடாதவர் இவரென்று எண்ணச் செய்தன. அவர் எதிரில உட்கார்ந்திருந்த மெலிந்தமனிதனும் அவரை இப்படியே கருதுவதுண்டு. இவரே இன்று பகலில் காருண்யத்திடம் பேசிய சுந்தர நாதம் என்பவர். இவர் காரியதரிசிக்கு இவ்வருஷத்திலதான் உதவிகர்த்தாவாக நியமிக்கப்பட்டார். ஆகையினாற்குருவை வணங்கும் சிஷனைப் போல் ஆடம்பரமின்றி உட்கார்ந்திருக்கின்றனர். அந்த மங்கிய வெளிச்சத்திலும் இச்சுந்தரநாதத்தை அவருக்கு முன் வீற்றிருக்கும் சாக்ஷாத் விநாயக மூர்த்திக்குத் தகுந்த தொண்டன் எனச் சொல்லுவது அறியாமையே. இவர் முகம் அதிகமும் இங்கிதமானது. காரியதரிசியே, சிலவேளை இவர் முகத்தைச் சற்று உற்றுப்பார்த்தால் 'என்னங்காணும்! மதுரையில் உள்ளாரெல்லாம் அதிக அழகோ?' என்று வேறுவிதமாய்க் கேட்பார். அழகு மிகுந்தும் அறிவு மிகாதும் இருந்த இவர் முகம் இப்போது அச்சமுடையதாய்க் காணப்பட்டது. இவர் உடை அதிக ஆடம்பரமின்றி இருந்ததேனும் ஒழுங்கின்றியில்லை. இவர் விரல்கள் இரண்டுமோதிரத்திற்குமேல் அதிகம் அடையவில்லை. 'எல்லாம் நம் காரிய தரிசி தயவு இருந்தால் தாமே வந்து சேரும்.' என்று இவர் மொழிவதும் உண்டு.

காரியதரிசி சற்று அசைந்து "என்னங்காணும், கடிதம் அவர்களிடம் சென்றதைப்பற்றி ஏதாயினும் தெரிந்ததா?" என்று கேட்டார்.

"கடிதம் அவர்களிடம் நேற்றே சேர்ந்தது. ஆனால் அவர்கள் இதனால் ஒன்றும் இடர் எய்தியதாய்க் காணப்படவில்லை!" என்றார் மதுரைச் சுந்தரநாதம்

பிறகு காரியதரிசி "நீர் ஷண்முகநாதரைப் பார்த்திரோ?" என்றுகேட்டார்.

நான் ஷண்முகநாதரைப் பார்க்கவில்லை." என்றார். "சுந்தரநாதம்

"அவர் வீட்டிற்குப் போயிருந்தீரோ?" என்று வினவினார் காரியதரிசி.

"வீட்டிற்குப் போயிருந்தேன், ஆனால் நான் மகாதேவரைப் பார்த்தேன்." என்று சொன்னார் சுந்தரநாதம்.

உடனே காரியதரிசி தேள்கொட்டியதுபோல் "என்ன! மகாதேவரிடம் எதற்காகப் போயிருந்தீர்?" என்றார்.

"நீங்கள் அச்சப்படவேண்டியதில்லை. நான் மகாதேவரிடம் நேரிற் போகவில்லை. அவரும் என்னைப் பார்த்தாரில்லை." என்றார் சுந்தர நாதம்.

"என்னத்திற்குங் காணும் அச்சப்படுகிறது? அவரிடம் உமக்கென்ன விசேஷ மிருக்கப் போகிறதென்று கேட்டேன்." என்றார் உண்மையைக் கசப்பாகப் பாவிக்கும் பழைய காரியதரிசி.

"நான் இதனால் ஒரு செய்தி தெரிந்துகொண்டேன்." என்று தொடங்கினார் சுந்தரநாதம்.

'என்ன அதைச் சொல்லுங்காணும் முன்னே. இவ்வளவுநேரம் ஏன் தாமதஞ் செய்கிறீர்? நமக்கு எப்போதும் செய்திதானே வேண்டியது." என்று மிக்க விருப்பங்காட்டினர் பெரியவர்.

"நான் அவர் வீட்டுத்தோட்டம் பக்கம் போய்ச் சிறிது செவிகொடுத்தேன். காளி என்று மகாதேவர் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்; மேலும் என்னென்னமோ சொல்லிக்கொண்டிருந்தார். எனக்கு அவசரத்திலும் அச்சத்திலும் ஒன்றும் கேட்கவில்லை. நானும் அவர் அறியாதவாறு ஷண்முகநாதர் வீட்

டால் வந்துசேர்ந்தேன்." என்று தன் விஷயத்தை விரித்தார் சுந்தரநாதம்.

"ஆ பார்த்திரா! உம் விஷயத்தை! மகாதேவர் காளி என்று சொன்னால் அதிலிருந்து எவ்வளவு தெரியலாம் பாரும்!" என்று குறுநகை நகைத்தார் காரியதரிசி. ஆனால் சுந்தரநாதம் அதைப் பெரிய யானையின் சிரிப்பு என்று நினைத்தார்.

"நீங்கள் எதைவேண்டுமென்றாலும் தெரிந்துகொள்ளுங்கள் அந்தக் கடிதத்தின் உண்மையைமட்டும் அவர்கள் அறியவில்லை; காளி என்றேதான் நினைக்கிறார்கள்." என்றார் சுந்தரநாதமும்.

மறுபடியும் காரியதரிசியார் "அவர்கள் வேறு என்ன நினைக்கமுடியும்? பயப்படுவதைத் தவிர அவர்கள் வேறே என்ன செய்வார்கள்? மகாதேவராயிருந்தாலும் வேறு என்ன தெரிந்துகொள்வார்! அவர் சாமர்த்தியமே சாமர்த்தியம்! அது போகட்டும். ஷண்முகநாதர் என் அந்தக் கடிதத்தை வெளியில் காட்டவில்லை? அக்கடிதத்தில் சொல்லியிருப்பது போல் இருக்கிறார் போலும். சித்திரைமாதம் உருவ உமக்கு நீர் கோரியபடி வேலை ஒன்றும் தரமாட்டார் போலும்." என்று தன்விஷயத்தில் அதிக சந்தோஷங்கொண்டு பேசிச் சிறிது சிந்திக்க ஆரம்பித்தனர்.

பிறகு சுந்தரநாதம் "உண்மையில் இவ்வளவு அச்சப்பட்டுக்கொண்டிருக்கும் இவர் இது என்னால் தவிர்க்கப்பட்ட போது எவ்வளவு நன்றி பாராட்டுவர்! என்னிடம் எவ்வளவு நேயம் பாராட்டுவர்!" என்று உவகையில் உழன்றான்.

சந்தேகமென்ன என்றார் காரியதரிசி. "ஷண்முகநாதர்வீடு மிகவும் பந்தோபஸ்தானதோ? நீர்தான் அதிக பழக்க முடைய வராயிற்றே, அவ்வீட்டின் விவரத்தை எனக்கொரு காகிதத்தில் வரைந்துகாட்டும் பார்ப்போம். என் வீடு புதியதேயாயினும் அவர்வீடு அழகாய் அமைந்திருக்கிற தெனச் சொல்லுகின்றனர். நான் ஒரு புதுவீடு கட்டலாமென நினைக்கிறேன். இதோ இக்காகிதத்தில் தெளிவாய்க் கோடிட்டுக் காட்டும்." என்று சுந்தரநாதத்திடம் ஒரு காகிதத்தையும் எழுதுகோலையும் கொடுத்தனர்.

சுந்தரநாதம் அப்படியே வரைகிறேன் என்று சொல்லி, "இத்தன்மையான கடிதம் எழுதுவது தப்புதானே?" என்று காரியதரிசியின் முகநோக்காது சந்தேகித்தான்.

"என்ன தப்பு? எல்லாம் இன்னும் இருபது நாளைக்குள் தெரிகிறது. அதில் உண்மையில் அவர்களுக்குக் கெடுதி ஒன்றும் இல்லையே! இதை ஒருகால் நேராகவே விளையாட்டாக மாற்றினாலும் மாற்றலாம். ஆனால் நீர்மாத்திரம் இதைப்பற்றி ஒன்றும் உமது மதுரைத் தமிழில் உரையாதீர். அப்புறம் உமக்குப் பெண்ணாவது பொருளாவது கிடைப்பது அரிது." என்று மிகவும் மெல்லப் பேசினார் காரியதரிசியார்.

"உண்மையில் கெடுதியொன்றுமில்லை; இருந்தாலும், அச் சுறுத்தலும் நேர்மையற்றதுதானே." என்றார் சுந்தரநாதம்.

"என்னவானாலும் நீர்சொல்லுவது சரியாயில்லையே. கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை. பெண்ணும் வேண்டும், அது சுலபமாயும் கிடைக்கவேண்டு மென்கிறீரே எனக்கென்ன எப்படியாயினும் செய்யும். விஜயம் இருக்கிறான். அவனுக்கு உம்மைவிட சரியானவழி இன்னதென்று தெரியும்." என்று சுந்தரநாதத்தின் குருட்டு இச்சைக்குக் கோல் கொடுத்தனர் மற்றவர்.

"நீங்கள் சொல்லுவது சரியே." என்றான் சுந்தர நாதம்.

"எல்லாவிஷயமும் என்னுடைய பொறுப்பே; உமக்குத் தெரியுமோ இல்லையோ!" என்றார் காரியதரிசி. காரியதரிசிக்குத்தான்பேசுவது இன்னதென்று செவ்வையாய்த் தெரியும்.

## அ. காதலர்.

The influence of the senses has, in most men, overpowered the mind to that degree, that the walls of time and space have come to look real and insurmountable; and to speak with levity of these is, in the world, the sign of insanity.—*Emerson.*

இரண்டாம் நாள் காலையில் தனது அறையில் இருந்து காருண்யம் சித்தம் சிதைந்து சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தாள். ஏதேதோ நினைத்து மனங்கசிந்தாள். தான் குழந்தையாயிருந்த நாள்முதல் இதுவரையில் செய்த எல்லாவற்றையும்பற்றி நினைத்து ஆத்திரப்பட்டாள். மேலும் அப்பா விசனமாயிருக்கிறார், தன்னிடம் ஒன்றும் சொல்லவில்லை என்பது மற்றொரு பக்கம் வாதித்தது. இதெல்லாம்போக, அத்தான் என்று நினைத்தபோது கண்களில் நீர் துளித்தது. தன்னைச்

சுற்றி அவ் அறையிலுள்ள ஒவ்வொரு பொருளும் விஜயத்தின் அன்பைக் குறித்துப் பேசுவதாக எண்ணினள்:

"அத்தான் ஏன் முன்போல் இப்போது எனக்கு ஒன்றும் கற்பிக்கிறதில்லை? முன்னே எப்போதும் இங்கேயே இருந்து எனக்கு ஏதாவது சொல்லிக்கொடுத்த வண்ணம் இருப்பார்களே. 'இந்தப்பக்கம் மிகவும் நன்றாயிருக்கிறது: இதைப் படி காருண்யம்!' 'இதோ ஒரு புதிய நூல் நீ இதைப் பார்க்கவில்லையே? காருண்யம்!' என்று அடிக்கடி எனக்கு அறிவிக்கும் அவர் இனிய குரல் ஏனோ எனக்கு இப்போது மறுக்கப்பட்டது. அத்தான் எவ்வளவு கல்விமான்; எவ்வளவு பெருமையாய் சந்திரவர்மா முதலியவர்களால் கொண்டாடப் படுகிறார்கள். அவர்களுக்கு எத்தனையோ வேலைகள் இருக்கின்றன. இருந்தாலும், அவர்கள் இங்கு ஒரு நிமிஷமிருப்பினும் அது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியைக் கொடுக்கும். முன்னெல்லாம் கண்ணகியோடு கலந்து மனமகிழ்ந்து வேறு நினைவின்றி விளையாடுவேன். இப்போது அது இனிமையாய் இல்லை. அவள் என்ன பேசினாலும் இன்னும் குழந்தை தானே. அவர்களைத்தவிர வேறெவ்வித நினைப்பும் எனக்கு மகிழ்ச்சி தருகின்றதில்லையே? இதென்ன அழுகையில் மகிழ்ச்சி? அவர்களைப் பற்றி நினைத்து வருந்துவதுகூட எனக்கு ஒருவகை உள்ளக் கிளர்ச்சியை உண்டுபண்ணுகிறது. அத்தான் அவர்களே அன்றோ எனக்கு அறிவை ஊட்டியவர்கள்? நல்லது கெட்டது என்று தெரிவிக்கும் பகுத்தறிவு, அவர்கள் எனக்குக் கற்பிக்காவிட்டால், எனக்கெப்படி உண்டாகும்? ஜீவகாருண்யம் கடவுள் வழிபாடு முதலிய அரிய குணங்களை என்னிடம் எப்படி நாளுக்குநாள் வளரச் செய்தார்கள் அவர்கள்! சிறு வயதுமுதல் என்னிடம் எவ்வளவு அன்பு காட்டி வந்தார்கள்! இப்போது அங்ஙனம் காட்டக்கூடாது போலும்! உலகினர் வெறுமறைப்பு எவ்வளவு உண்மையற்றது! இந்த உலகக் கட்டுத்தான் எனக்குப் புரியவில்லை. உளம் ஒன்றாய் இயைவதை தடுக்க முடியவில்லை இயைந்த பின்னர்த் தான் எத்தனையோ தடங்கல்." என்று பலவாறு காருண்யம் தான் இப்போதுள்ள நிலைமையைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தனள்.

இவள் இவ்வாறு சிந்தித்து முடிகையில் 'காருண்யம்!' என்ற குரல் கேட்டது. உடனே காருண்யத்தின் முகம் சிந்தனை ஒழிந்து மகிழ்ச்சியேற்றது. முன் பெருகிய நீர் இன்னும் கண்களில் பெருகிற்றேனும் அது அக்கணத்தில் உண்டான களிப்பினாலன்றி விசனத்தாலன்று. அவள் செங்கனி உதடுகள் சிறிது துடிக்கக் காணப்படுமாயினும், உடலம் ஒடுகாற்றில் இலையென நடுங்கிற்றேனும், அவை ஒரு நிமிஷத்திற்கு முன்னிருந்த துன்ப நிலைமை மாறி அதற்குமாறாக இப்போது அவளுக்குள்ள மனமகிழ்ச்சியைத் தெரிவித்தன. காருண்யம் இவ்விதமான தன் நிலைமையை அறிந்தனளேனும் அதைத் தவிர்க்க ஒரு சிறிதும் முயற்சி செய்யவில்லை. 'இதோ அத்தான் வந்தார்கள்.' என்றறிந்த மனம் விஜயத்தைக் கண்டதும், அவ் எண்ணத்தை விட்டு ஓடி வேறு விஷயங்களில் பாயும் வலிவின்றி அதையே பற்றி நின்று பெருகித் ததும்பிற்று. விஜயத்தின் கமலமுகத்தில் புன்சிரிப்புப் பூத்தது என்று அவளுணரும்போதே, அவர்களே எனக்கெல்லாம் என்று தெரிந்துந் தெரியாத நினைப்பு அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது.

"என்ன காருண்யம்! மாமா இல்லையா?' என்று விஜயம் வந்ததும் கேட்டான்.

காருண்யம் உடனே "நீங்கள் என் அத்தான் இப்போது உங்கள் மாமாவையே விசாரிக்கிறீர்கள்?" என்று தனக்கு முதற்றோன்றிய கேள்வியைக் கேட்டாள். பிறகு அது சரியல்லவென்று நினைத்து "அப்பா வெளியே எங்கேயோ போயிருக்கிறார்கள்." என்று சொன்னாள் காருண்யம்.

"சரி. கண்ணில் தண்ணீர் நிறையவிருக்கிறது. என்ன விசனம் காருண்யம்?" என்றான் விஜயம்,

காருண்யம் சிறிது ஆத்திரப்பட்டவள் போல், "விசனம் என்ன அத்தான்? நீங்கள் ஒரு மாதமாய் இங்கு வாவேயில்லையே. இன்றைக்கு அப்பாவினிடம் காரியமில்லாவிடில் இன்னும் எத்தனை மாதங்கள் செல்லுமோ உங்களைப் பார்ப்பதற்கு?" என்று கேட்டு மகிழ்ந்தாள்.

"காருண்யம், நீ பொய் பேசக் கற்றுக்கொண்டது போல் இருக்கிறது! நான் இங்கு வந்து உன்னிடம் மனோன்மணியத்தைக் கொடுத்துப்போய் ஒரு வாரங்கூட சரியாய் ஆகவில்

லேயே! நீ இப்போது படிப்பதைக்கூட நிறுத்திவிட்டாற்போல் இருக்கிறது." என்று சிரித்தான் விஜயம். காருண்யமுஞ் சிரித்தாள். காருண்யத்திற்கு இஃதெவ்வளவு உள்ளக் களிப்பைக்கொடுத்தது! அப்போதவள் "அத்தான்." என்று ஆரம்பித்து மேலே ஒன்றுஞ் சொல்லமுடியாது தயங்கினுள்.

உடனே விஜயம் "காருண்யம், இதென்ன? உனக்குப் பேசத் தெரியாவிட்டால் எனக்கும் பேசத் தெரியாது. நான் போகிறேன்." என்ருன்.

காருண்யம். "போகலாம். இங்கு உட்காருங்கள். எனக்கு இந்தவாரம் ஒன்றுமே சொல்லிக்கொடுக்கவில்லை! நீங்கள் இல்லாமல் எனக்கு மனோன்மணீயம் செவ்வையாய்த் தெரியுமா? மனோன்மணியைப்போல் உங்களுக்கு..." என அவனைப் பார்த்து மேல் சொல்லாமல் நின்ருள்

இதற்குள் விஜயமும் போவதாகப் புகன்றனனேனும் போவதற்குக் கொஞ்சமும் இஷ்டமில்லாமல் அடுத்த சோபாவில் உட்கார்ந்து சுற்றிலுமுள்ள சாமான்களைப் பார்த்தபடியே, "அந்த மனோன்மணி கதையில் அன்ரே?" என்று சொன்ஞன். உடனே காருண்யத்தின் மகிழ்ச்சிக்கு வரம்பில்லை. புன்முறுவல் பூத்தாள் வெட்கினுள். வியர்த்தாள்.

கொஞ்சநேரம் கழித்துக் காருண்யம் "அத்தான். மனோன்மணியின் மனநிலை எனக்குச் செவ்வையாய் விளங்கவில்லை. தான் கனவிற்கண்ட வடிவத்தின்பால் காதல் கொண்டாளே. அதென்ன புதுமை!" என்ருள்.

அதைக் கேட்ட விஜயம் "அதில் என்ன புதுமை இருக்கிறது? வெளிப் புலன்களை நம்பிக் காதலிப்பர் பலராயினும் உட்புலன்களை நம்பிக் காதல் கொள்பவரும் சிலர் உண்டு." என்று முகமலர்ச்சியோடு மொழிந்தனன்.

"அதெப்படி அத்தான்? வெளியில் தோன்ருததும் தான் பழகாததுமான ஒரு வடிவம் கனவில் தோன்றினுலும் அதோடு கனவில் காதல் கொண்டாலும், நனவில் அதை ஒரு உள்ள பொருளாக நினைத்து அன்புகூர்ந்திருத்தல் கூடுமோ?" என்ருள் காருண்யம்.

"காருண்யம், ஆழ்ந்து உன்னிப்பார். ஏன் அப்படி நினைத்து அன்புகூர்ந்திருத்தல் கூடாது? வெளிப்புலன்கள் தெரிவிக்கும் பொருள்களில் ஈடுபடுகின்ற மனம், அப்புலன்களின்

வழியே பார்க்காது தன்னுள் விளங்கும் பொருளிடம் ஏன் ஈடுபடக் கூடாது? ஆனால் அதில் உனக்கு ஒரு சிக்கல் தோன்றலாம். நாம் இவ்வண்ணம் நனவு காணும்போது, கனவு என்கிற காட்சி உண்மையற்றது என்று தோன்றுகிறது. கனவு காணும்போதும் அப்படியே நனவு உண்மை அற்றது என்று உணராது உணர்கிறோம். இவை இரண்டிற்கும் ஒரு பெரிய வேற்றுமை என்னவென்றால், காலம் இடம் முதலிய முறைமைகள் ஒன்றில் இருப்பதும் மற்றொன்றில் இல்லாதிருப்பதும்தான்." என்று சொல்லிச் சற்றே நின்றான் விஜயம்.

இவற்றை மிகவும் கவனத்தோடு கேட்ட காருண்யம். "ஆமாம் அத்தான். ஆனால் காலம் இடம் முதலியன இல்லாத ஒரு உலகம் எத்தன்மையது? அதை உலகம் என்று கூட எப்படிச் சொல்லுவது? என்னால் அறியக் கூடவில்லையே." என்றாள்.

"காலம் இடம் முதலியன, வெளிப்புலன்கள் வழியாய் அறியும் இந்த நனவுலகத்திற்கு எத்துணை இன்றியமையாதன என்று தோன்றினாலும், கனவில் நிகழும் நிகழ்ச்சிகளுக்கும் இதேமாதிரியான முறைகள் இருந்தே தீரவேண்டும் என எப்படிச் சாதித்தல் கூடும்? வெளிப்புலன்களின் சம்பந்தம் அடைந்தபோது என்னென்ன வேண்டியிருக்கின்றனவோ அவைகள், அப்புலன்கள் சம்பந்தப்படாதபோதும் வேண்டியிருக்கும் என்பது எப்படி அறிவின் நிகழ்ச்சிக்கு வேண்டியதாகும்?" என்று மெதுவாகச் சொன்னான் விஜயம்.

"அறிவின் நிகழ்ச்சிக்கு வேண்டியதில்லை என்பது வெளிப்படைதான். விளங்குகிறது." என்றாள் காருண்யம்.

"காருண்யம், இது தெரிந்ததும், காலம் இடம் முதலியன கனவுலகத்தில் இல்லையென்றலுமே, கனவென்பது உலகமென்று சொல்லக்கூடிய ஒரு முறைமை உடையதல்லவென்றும், அதில் காணும் காட்சிகளும் அவற்றில் உதிக்கும் பற்றுக்களும் உண்மையற்றன என்றும், சாதித்தல் சரியல்ல என்று தெரியவில்லையா உனக்கு?" என்று விஜயம் கேட்டு விடையை எதிர்பார்த்தான்.

"தெரிகிறது அத்தான். இந்த நனவு உலகத்தினின்றும் அது பெரிதும் வேறுபட்டதென்றும், அப்படி வேறுபட்ட கன,

லேயே அது எல்லா உண்மையும் அற்றுப்போகவில்லை என்றும் தெரிகிறது. ஆனால் அதை நேரே இத்தன்மை உடையது என்று சொல்ல முடியுமோ?" என்று ஐயுற்றாள் காருண்யம்.

"வெளிப்புலன்கள் விளக்கும் இந்த நனவு உலகம் இயற்கையிலேயே அநுபவமாய் உள்ளது நமக்கு. இவ் அநுபவம் இல்லையேல் இதை இத்தன்மையது என்று நேராக அறியும் ஆற்றல் அறிவுக்கு இருந்திருக்கக்கூடுமோ? கூடாது. அப்படியே கனவு உலகின் தன்மையும் அநுபவம் இன்றி அறிவால்மட்டும் நேரே அறியக்கூடாதது ஆகும். நமக்கும் அக்கனவு உலகம் ஒவ்வோர் சமயம் வாய்த்தாலும், அதன் உண்மையை நாம் அறியாததால், அது எவ்வித உண்மையும் உள்ளதல்லவென்று, அதனிடம் நாம் பற்றுக்கொள்ளுகிறதில்லை. ஆனால் அக்கனவு உலகும் நாம் தொடர்ந்த முறைமை உடையதென்று சொல்லும்படியான ஓர் அநுபவமாக வாய்க்கலாம். உழுவலன்பு காரணமாக இப் டி வாய்ந்தவர்களில் மனோன்மணி ஒருத்தி." என்று மொழிந்தான் விஜயம்.

"புருஷோத்தமனும் இன்னொருவன் தானே?" என்றாள் காருண்யம்.

'ஆம். இன்னுங்கேள் காருண்யம். அக்கனவு உலகை செயற்கையான அநுபவமாக ஆக்கிக்கொண்டவர்கள் அநேகர் உண்டு." என்று தொடர்ந்து விளம்பினான் விஜயம்.

"அதெப்படி என்று நான் அறிதல் கூடுமா அத்தான்?" என்று அடக்கமுடியா விருப்போடு வினவினாள் காருண்யம்.

"அது ஒரு சிறந்த கல்வியின் பயன் காருண்பம். சுருக்கமாகச்சொன்னால், அது, ஐம்புலன்களைக்கொண்டு அறியும் இந்நனவு உலகத்தில், சீரிய ஒழுக்கத்தைப் படியாகக்கொண்டு தொடங்கும். இடுக்கண்செய்யும் ஐம்புலனுக்கும் அஞ்சி, அறிவு உட்சென்று, சாந்தவேலி கோலி அமர்ந்து, ஆராயும் உயரிய நிலைமை என்று அநுபவித்த ஆன்றோர் உரைப்பர். இன்னொரு சமயம் அதைப்பற்றி விரிவாய்ச் சொல்லுகிறேன்." என்று ஆழ்ந்த தெளிவான குரலில் உரைத்தனன் விஜயம். விஜயம் உரைக்கும் ஒவ்வொரு மொழியையும், உணவுப்பொருள்களை உட்கொள்ளும் கொடிய பசியாளனைப் போல், மனத்துட்கொண்டு, காருண்யம் அவற்றின் பொருளை உணர்ந்து உணர்ந்து அறிந்தாள்.

சற்றுப் பொறுத்து, "இன்னொரு சிக்கல் இருக்கிறது. அதையும் தவிர்க்க வேண்டுகிறேன்." என்று இரங்கினாள் காருண்யம்.

"என்ன சொல் காருண்யம்." என்று தனது காதலியின் கல்வி விருப்பத்தை மனத்துள் வியந்து மொழிந்தான்.

"கனவையும் நனவாகக்கொண்ட மனோன்மணி பிறகெப் படிக் கொடியனான பலதேவனை மணக்க உடன்பட்டாள். ஐயோ அத்தான்! அவள் அப்படி உடன்படுதலை நான் தெளிவாய்ப் படிக்க முடியவில்லை. எனக்கு ஆற்றமுடியாத துயரம் வந்து எனது குரலை மாற்றிவிட்டது. இளங்குழவியே என அழுதேன். அவற்றைப் படிக்காதிருக்கவும் முடியவில்லை. படிக்கவும் முடியவில்லை. அன்றிரவு நெடுநேரம் விம்மி விம்மி அழுதேன்." என்று காருண்யம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவள் அழகிய நீண்ட கண்களினின்றும் நீர்த்துளிகள் வீழ்ந்தன.

இவற்றைக் கேட்ட விஜயம் தன் காதலியின் மனத்தூய்மைக்குப் பெரிதும் மகிழ்ந்து "காருண்யம், ஒப்பற்ற ஆன்மாக்களின் பண்புச் சிறப்பை எப்படி நாம் போதுமானபடி சொல்ல முடியும்! மனோன்மணியே வாணிக்கு அதைப் பற்றி உண்மையாகவும் தெளிவாகவும் அழகாகவும் கூறுகின்றனளே. அதை நீ உணரவில்லை போலும்." என்று கருணை நிறைந்து ததும்பும் தனது கண்களிலும் எழுந்த துளிகளை, ஒரு பக்கம் திரும்பி, தனது சிவந்து நீண்ட விரல்களால் அகற்றினான். பிறகு அந்த அரிய நூலைத் தன்கையில் வாங்கி "இந்த நமது உலகையும் மெய்யென்று நம்பியிருக்கும் வரையில் இதற்கு இன்றியமையாததான கடமையை அன்போடு செய்தலே தகுதி" என்று கூறி,

"தந்தை தாய் ஆதியா வந்ததன் குடும்ப
பந்த பாரத்தினைப் பேணி, தனது
சொந்தமாம் இச்சைகள் துறந்து, மற்றவர்க்
கெந்நாளும் சுகம் இயைந்திடக் கடமையின்
முந்துகின்றவரே முதற்றவ முனிவர்."

என்று படித்து "நான் முன் சொன்ன சீரிய ஒழுக்கம்தான் இங்கே மனோன்மணி குறிப்பது. இதற்கு அடிப்படைகளாக

உள்ளவை மெய்யும், அன்பும், தன் இச்சை துறத்தலும். தரையினின்றும் போந்து, அடியில் பனையெனப் பருத்து, போகப் போகச் சிறுத்துச் சிறுத்து, ஊசிமுனையைக் காட்டினு, நுண்ணியதாய் முடிந்து, வான்முகட்டை மோதும் இந்த ஒப்பற்ற ஒழுக்கமாகிய வழுக்குக் கம்பத்தின் உச்சியை அடைவதே நனவை நம்பும் நமது முழுநோக்கமும்." என்று மொழிந்து ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான் விஜயம்.

"அத்தான், நான் சொல்வதை மன்னிக்க வேண்டுகிறேன். அச்சீரிய ஒழுக்கத்தின் தன்மையை இன்று அறிவித்ததற்கு நெடுநாள் முன்னரே யிருந்து, பரம ஏழையான என்னிடம் உயர்வொப்பிலாத அன்பு செலுத்தி, எனக்கு நடக்கையில் உணர்த்திய தங்களுக்கு அத்தான், எனக்கு எப்படி பேசுவது என்று தெரியவில்லை." என்று வாய்குளறப் பேசி, ஊற்றெழும் கண்ணீரால் உடம்பு மேலுமேலும் நனைந்து நிற்க, அன்புருவாய் விளங்கினாள் காருண்யம். விஜயத்திற்குப் பேச நா எழவில்லை. அது மட்டுமா? மனதில் நினைப்பு ஒன்றும் உதிக்கவில்லை. நினைப்பரிய அன்புருவமாகிய பரம்பொருள் தன்னை விழுங்கி இறக்கச் செய்ததுபோல் சிறிதுநேரம் தன்னை மறந்திருந்தான் அவன் இந்த நிலையில் அவர்கள் அதிகநேரம் இருக்கவில்லை. பேரின்ப விசும்பின் வரம்பை தொலைதூரமிருந்து எட்டிப்பார்த்து, ஓரணு அளவு ஒரு விநாடி உணர்ந்தனரேயன்றி, அந்நிலையில் நெடுநேரம் நிற்க அவர்களுக்குப் போதிய கல்வி கேள்வி சாதனம் இருத்தல் கூடுமா? கூடாது. ஒழுக்கமாகிய வழுக்குக்கம்பத்தின் அடிக்கு அடுத்த விநாடியே வந்துசேர்ந்தனர். அப்போது எப்போதும்போல விஜயமும் காருண்யமும், காதலனும் காதலியுமே.

ஆகவே சிறிது நேரங்கழித்து, "அத்தான், இந்தப் பட்டுத்துணி எப்படி யிருக்கிறது பாருங்கள். இதை இன்னும் பத்து நாளில் அலங்கரித்து முடிப்பேன்." என்று விஜயத்தின் கையில் பலவர்ணப் பட்டு நூல்களால் சித்தரித்த மெல்லிய சிறு வெண்பட்டுச் சவுக்கம் ஒன்றைக் கொடுத்தாள். விஜயம் சிரித்தனன். கன்னங்கள் சிவந்து குழிந்தன. இதை உற்று நோக்கி, இம்மலருக்கு அவ்வெண்பட்டு இணையில்லை என்று நினைத்தாள் காருண்யம்.

இவ்விருகாதலரும், ஒருவர் மற்றொருவர் அருகில் இருப்பதே பரமானந்தம் என்று களித்து, ஆர்வத்தோடும் அன்போடும் தம்மையும் மறந்து பேசி மகிழும்போது அவர்கள் குரல் எவ்வளவு இனிமையாயினும், அவர்கள் உருவமும், உருவப் பொலிவும், அமைப்பும், ஒருங்கே ஓவியப்புலவன் ஒருவனின் அழகமைந்த வர்ணத் தீட்டுக்கோலுக்கு எத்துணைப் பாத்திரமானது!

சோபாவில் சாய்ந்தபடியே சற்றுத் திரும்பிய வண்ணம் நோக்கும் சுந்தர வடிவமுள்ள அந்த யௌவன புருஷன் பக்கல், அடுத்துள்ள மேஜையின் மற்றொருபுறம் காருண்யம் நின்றாள். விஜயத்தின் வளைந்து நீண்ட குழலும், ஞானம் சிந்தனை மனோபாவனை வீற்றிருக்கும் அகன்ற நெற்றியும், சிறிதே கறுத்துக் கதித்த நீண்ட இளம்புருவமும், நீண்டு விசாலித்த கமலக் கண்களும், நேரிய மூக்கும், பவளவாயும், உயர்ந்த அறிவையும் சிறந்த கருணையையும் ஆழ்ந்த யோசனையையும் மனோகரமான தேஜஸையும் எடுத்துரையா நிற்கும். மெல்லிய வெண்பட்டுடுத்த இவன் தேகம் எங்ஙனம் தடையின்றி ஓடிச் செழித்து வலிவுள்ளதாய்க் காணப்படுகிறது! இவன் உயரிய உருவினன், ஒப்பற்ற மேனியன்; பருத்ததோளினன், பரந்த மார்பினன் இவனே. இவனே ஆண்தகை. இவன் அருகில் பச்சைப் பட்டுடுத்துக் கொடியெனத் துவண்டு நிற்கும் காருண்யம் முகத்தை நீவிர் அறியீர்? காருண்யம் குடிகொண்ட அவள் கமலநயனம் நீவிர் பார்த்ததுண்டா? அன்பு ததும்பி வெளியேகும் அவள் கரிய விழிகள் நேசத்தையும் அறிவையும் உணர்த்தின. சுருண்டுபடிந்த கூந்தலும், ஒன்றோடொன்று பாய்ந்து வேற்றுமையின்றி சகோதர உரிமை பாராட்டி ஒப்புரவு கற்பிக்கும் அவளது உருவங்களும் சித்திரத்திற்கே அன்றிக் கல்லில்தெரிப்பது கடினம். எனினும் அந்த வதனத்தில் தேற்றம் நிலவுகிறதோ? காருண்யத்திற்கு மனத்தேற்றம் அதிகமும் வேண்டுநாள் வருமே! அப்போதென் செய்வள்? பவழச்செல்வம் மிகுந்த அவ்வரிய வாயை நோக்கினொரெவரும் அதன் அமைப்பைக்கண்டு மன உறுதியுடைய மங்கை இவள், எனவே சொல்லுவர் என்று தோன்றுகிறது.

## ௬. அபாயம் இல்லை.

வல்லான் ஒருவன் கைம்முயன் றெழியினும்,
மாட்டா ஒருவன் வாளா எழியினும்,
மிலத்தின் வழாஅக் கல்லே போன்
நலத்தின் வழார் மின் நாம நவின்றோரே.—பட்டினத்தடிகள்.

மகாதேவர் படுக்கை அறையில் இன்று மத்தியானம் அவ ரும் ஷண்முகநாதரும் கடிதத்தைப்பற்றிப் பேசிக்கொண் டிருந்தனர்.

"இக்கடிதத்தால் உங்களுக்கொன்றும் அபாயம் இல்லை. ஆகையால் நீங்கள் எப்போதும்போல் இருங்கள். எல்லா விஷ யமும் நான் பார்த்துக் கொள்ளுகிறேன் இவ்விஷயம் வெளிப் படவேண்டாம்." என்றார் மகாதேவர்.

"அப்படியானால் சரி. தாங்கள் எப்போதும் என்னிடம் எவ்வளவு பிரியம் பாராட்டுகிறீர்கள்! ஆனால் இதன் உண்மை யைத் தாங்கள் உணரவில்லையே?" என்றார் ஷண்முகநாதர்.

"யாவும் பிறகே தெரியும். அதற்குத்தான் நாம் மௌன மாகவும் கலக்கமின்றியும் இருக்கவேண்டும்." என்று சொல் லிவிட்டு நேற்றுப் பகலில் தான் கண்டகனவை உரைத்தார். ஷண்முகநாதர் இயற்கையிலேயே தைரியமில்லாதவர், அவர் இப்பயங்கரமான கனவைக் கேட்டதும் மன நடுங்கிப் பேசா திருந்தனர்.

"இதெல்லாம் ஒன்று மில்லாவிடினும்? இவ்வளவு கொடி யவனென்று கனவு காட்டிய அவன் யார் என்று நேற்று முழு வதும் யோசித்தேன். ஒன்றும் தெரியவில்லை." என்று மெது வாய்ச் சொன்னார் மகாதேவர். இவர் காளியைப்பற்றி ஒன் றும் ஷண்முகநாதரிடம் உரைத்தாரில்லை. "காளியில்லாவிடில் எனக்கு மற்றியாவரே தீங்குசெய்வார்? எனக்கு ஒருவரும் பகைஞர் இல்லையே" என்றார் ஷண்முகநாதர்.

"உங்களுக்கு உலகமெலாம் உண்மைதான். எல்லாரையும் உண்மையென்று நினைப்பதாலும் கெடுதி நேரிடும். என்றாலும் இறைவன் இருக்கிறானென்று அவ்வண்ணம் நடப்பதும் சரியே. ஆகையால் யாவரிடமும் எப்போதும்போலவே இருங் கள். எதாயினும் உங்களுக்கு விசேஷமென ஏற்படில் என்னி டம் அவசியம் தெரிவிக்கவேண்டும். இதுதான் நான் உங்க ளைக் கேட்டுக்கொள்வது." என்றார் மகாதேவர்.

"அப்படியே செய்கிறேன். எனக்கு உண்மையில் எவ்வளவோ பருமனுன கல்லை என் முதுகினின்றும் கீழ்த் தள்ளியதுபோலிருக்கிறது! காருண்யத்திடம் மூன்றுநாளாய் நான் நன்ருய்ப் பேசவேயில்லை. அவளும் வருத்தமுற்ற முகத்தோடுதான் இருக்கிருள்." என்று கொஞ்சம் சாவகாசமாய்ப் பேசினர்.

"நீங்கள் இனிமேல் இதைப்பற்றி ஒன்றும் உரையாதீர்கள். இதன் உண்மையைக் கண்டபிறகு எல்லாம் பேசிக்கொள்ளலாம். உணர்தற்கரிய பெரிய விஷயங்களெல்லாம் இயற்றும் இறைவனுக்கு இது எவ்வளவு! நமக்கெவ்வளவோ ஆச்சரியமான காரியங்களெல்லாம் தெரியவிருக்கின்றன." என்று சொல்லிக்கொண்டிருந்தார் மகாதேவர். இவர் முகத்தில் இப்போது அச்சந்தோன்றி மறைந்தது.

இதை உணராது, "விஜயத்தை நான் பார்க்கவில்லை. அநேக நாளாய் விஜயம் என் கண்ணிற் படவில்லை" என்ருர் ஷண்முகநாதர். அவருக்கிப்போது காருண்யத்தைப் பற்றிய ஓர் எண்ணம் ஞாபகத்திற்கு வந்தது.

"விஜயம் உங்களைப் பார்க்க வருவதில்லையா?" என்று வேறுவித அர்த்தத்தோடு சொல்லி, "நேற்று நண்பகல் யாரோ உங்கள் தோட்டத்தில் இருந்தாற்போல் இருக்கிறது. யார் தெரியுமோ?" என்ருர் மகாதேவர்.

"சுந்தரநாதம் என்னைத் தேடி வந்தாராம். பிறகு தோட்டத்தில் சிறிதுநேரம் இருந்து வெளியே போனர் என்று காருண்யம் சொன்னுள்." என்ருர் ஷண்முகநாதர்.

"ஓ அப்படியா! சுந்தரநாதமா அவர்' ஒரு வருஷத்தில் சுந்தரநாதம் எவ்வளவு மாறி யிருக்கிருர், பார்த்தீர்களா? காரியதரிசியிடம் சென்ற பின்னர் இங்கு வருவதேயில்லை. எனக்கு அவர் செய்கைகள் அவ்வளவு சரியென்று தோற்றவில்லை. விஜயத்தையும் சந்திரவர்மாவையும்போல் இல்லை சுந்தரநாதம். இவர்கள் எவ்வளவு சிநேகமாக இருக்கின்றனர். எப்படி இருந்தாலுஞ் சுந்தரநாதம்" என்றவர் மேல் ஒன்றும் சொல்லாமல் மௌனமாயிருந்தார்.

இதைப் பெரிதும் கவனிக்காது "முன்னெருநாள் காருண்யமும் கண்ணகியும் விளையாடிக்கொண்டிருந்தனர். நான் அவர்களைச் சிறிதுநேரம் பார்த்திருந்தேன். இருவருக்கும் கல்யா

ணம் செய்வது தகுதியெனத் தோன்றியது." என்றார் ஷண்முகநாதர்.

'கண்ணகி வளர்ந்திருப்பினும், அவள் இன்னும் அறியாதவளே. காருண்யம் தக்க வயதுடையாள் தான்.' என்று சொன்னார் மகாதேவர்.

"விஜயமும் காருண்யமும் மிகவும் நேயம் பாராட்டுகிறார்களா?" என்று யோசித்தார் ஷண்முகநாதர்.

"நேயத்திற்கும் மிஞ்சிய அன்பு பாராட்டுகிறார்கள். எல்லாம் பிறகு பேசிக்கொள்ளலாம்; உங்களுக்கு நேரமாகிறது. அரண்மனை வேலையில் நோக்கமாயிருங்கள். எதற்கும் காரியதரிசி சுந்தரநாதம் ஆகிய இருவரிடமும் எச்சரிக்கையாயிருங்கள். அவர்களுக்குச் சந்திரவர்மா செய்வன சரிப்படவில்லை போலும்." என்று சொன்னார் மகாதேவர்.

மகாதேவரிடம் விடைபெற்றேகிய ஷண்முகநாதர் பல எண்ணங்களை எண்ணினர். மகாதேவருடைய கடவுள் பக்திக்கும் உலக அநுபவத்திற்கும், அரிய சாமர்த்தியத்திற்கும், ஆழ்ந்த யோசனைக்கும், அதிக நூற்பழக்கத்திற்கும் இவர் எப்போதும் ஆச்சரியப்படுவதுண்டு. அவர் சொல்வதை யாதொரு சந்தேகமுமின்றி நம்புவது இவரது வழக்கம். ஆனால் காரியதரிசியையும் மற்றவரையும் நம்பவேண்டாமென்பது இவருக்கு விளங்கவில்லை. இதுபரியந்தம் பழகியறிந்த சுந்தரநாதமிடமும் காரியதரிசியிடமும் எதற்கும் சந்தேகங்கொள்வது சரியன்று என்று நினைத்தார். இவர் தனக்குவந்த கடிதச் சார்பாக அவர்கள் பெயரை நினைத்தாரல்லர். ஆனால் மகாதேவர் சொல்வதற்குக் காரணம் இல்லாதிருக்காதென்று நம்பினர். எப்படியிருந்தாலும் காருண்யத்திற்கு இடரில்லை என்று நினைக்கவே அவர் மனதில் குடிகொண்டிருந்த பெருங்கவலை அகன்றது.

## ம. மூன்று வருஷத்திற்கு முன்.

இம்மைச் செய்தது மறுமைக் காம் எனும்
அறவிலை வாணிகன் ஆஅய் அல்லன்;
பிறரும் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்று அவன் கைவண்மையே.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

This chap. is an excellent production in everything.

நமது அருமைத் தமிழ் மகளை ஆதரித்து வளர்த்துச் சிறப்பித்து என்றும் அழியாப் புகழ் உடம்புபெற்ற பாண்டியர்களின்

தலை நகரான மதுரைக்கு இப்போது செல்வோமாக. ஆலவா யண்ணல் அடித்தாமரையின்கீழ் அரசுபுரிந்த பாண்டியர் யாவருக்கும் சிறப்புடைத்தாகிய இம்மாநகரில், இன்றைக் குப் பத்து வருஷங்களுக்குமுன்னர், படும் பரிதி செவ்வென ஒளிரும் தன்கதிர் வெள்ளத்தால் ஆங்கமர்ந்துள்ள, முப்புர மெரித்த நம் முதிர்சடைக் கடவுள்தம் மணிமுடிக் கோபு ரங்களை முழுகுவித்து, உயர்ந்து வானளாவிய பசுமரங்க ளின் பின்புறம் மறைந்து செல்லுகையில், ஆங்கு மேலைக் கோபுரத்தின் மேலைவாயிலின் சிறிது தூரத்தில் நின்று, உருத் திராக்க மாலையணிந்தவராய், இடையிற்சுற்றிய மெல்லிய ஆடையோடு மேலணிந்த வஸ்திரத்தைக் கைக்கொண்டு, அக் கோபுரத்தின் பொன் முடிகளினின்றும் ஆதவன் மங்கிச் சிறிது சிறிதாய் மறைவதை அண்ணாந்து கண்ணிமைக்காது கண்டபடியே, ஒரு பெரியார் "என்னே இறைவன் செயல்! என்னே உலக நேர்மை! என்னே இம்மானிடர்தம் மாட்சி! இவ்வரிய காட்சி இங்கே தோன்றி எத்தனைப் புண்பட்ட மனத்தை ஆற்றும் வல்லமையுள்ளது! இஃது உணரும் எவர் மனத்திலும், எத்தனை உண்மைக் கருத்துக்களை உபதேசிக்காது! எனினும் எத்தனை எண்ணமுடியா மனிதர்கள் இவ்வழிச்சென் றும் இவ்வற்புதத் தோற்றத்தைச் சிறிதுங் கவனியார்! தினந் தினம் இக்காட்சியைக் கண்ணுற்றால் இதன் பெருமை குறையுமோ? அஃதொருகாலுமில்லை. நிமிஷங்கழிவதற்குள் சந்தோஷம் சலிப்பாகவும், கோபம் பச்சாத்தாபமாகவும், செல்வம் ஆதரவற்ற எளிமையாகவும் மாறும் இயற்கை யமைந்த மனிதன் இக்காட்சியைக் கவனித்துச் சிந்திக்காதிருப் பது என்ன பாவம்! மனம் என்பதென்ன? அதன் தன்மை என்ன? அது எக்காலத்தும் ஒரே நிலைமை உடையதோ? இல்லை. எக்காலத்து மனம் ஒரே நிலைமையை அடைந்து ஓய்வற்று நிற்கிறது? எந்த நிமிஷமும் உறங்க வகையறியாது, யாதாயி னும் ஒன்றை நினைத்தும் வருந்தியும் இஷ்டப்பட்டும் ஓடு நீரின் தன்மையை ஒக்க ஒழிவற்றிருக்கின்றது. எனில், இக்காட்சி ஒவ்வொரு நாளும் மனத்திற்கு ஒரே மாதிரியாகத் தோற்றல் இயலாதே? மனம் வேறுபட்ட காலத்து மற்றெது வேறு படாது? மனிதர் தம் வாழ்நாள் தான் என்னே! இங்கே தோன்றி இக்கோபுரத்தின் உச்சியை அழகுசெய்து அரை

நிமிஷத்தில் அழிந்த இப்பரிதியின் கிரணத்தின் தன்மையை நன்கு ஒக்கும் ஒக்கும்." என்பனபோன்ற பல கருத்துக்களைப் பாதி தம்மனத்தில் நினைத்தும் பாதி தானறியாது பேசியும் நின்றார்.

இவர் இங்ஙனம் மேற் பார்த்துப் பாதையிற் செல்லும் ஒருவரையும் கவனியாது தன்னை மறந்து நிற்கும் ஆற்றலை, இதுகாறும் கோபுரத்துக் கடுத்த ஓர் பெருங்கல்லின்மேல் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபன் வியப்போடு பார்த்திருந்தனன். அவனுக்கு ஒருவித உற்சாகமும் தான் அறியாது தோன்றிய மரியாதையும் அவரிடம் உண்டாய், அவரை அணுகி, "தாங்கள் எவ்விடமோ?" என்றான். திரும்பிப்பார்த்த பெரியவர், இவ்வாலிபனைக் கண்டதும் பெரிதும் சந்தோஷமுற்றனர். அவன் கேள்விக்குப் பதில் சொல்வதன்முன் அவனைப் பார்த்தே நின்றார்.

அவன் பார்வைக்கு மிகவும் அழகிய வடிவினன். மிகவும் விசாலமின்றியும் குறுக்கம் இன்றியுமுள்ள நெற்றியின் மேற்புறம் விழுந்து சுருண்டு செறிகின்ற மயிர், காண்பவர் கண்களைக் காட்டிலும் கறுத்திருந்தது. நீண்டு அடர்ந்து கவிந்துள்ள புருவங்கள் நெற்றி அகலமுடையதோவெனச் சந்தேகிக்கச் செய்தன. உருகி ஒழுகுவதேபோல் தோன்றி அங்கு மிங்கும் அலையும் கண்கள் மனக்கிளர்ச்சியைப் பெரிதும் தெரிவிக்கும் தன்மையனவாய் இருந்தன. நீண்டு கூரிய மூக்கும், சிறுத்து அழகாயமர்ந்த வாயும், அதிகமும் பருத்திராது பக்கத்தே வாய்ந்த கன்னங்களும், இருந்தும் இல்லாதனபோல் நடித்துப் பார்ப்பவர் தம் பார்வையை நெற்றி, கண்கள், புருவம் இவைகள்பாலே திருப்பின. அகத்தின் அழகு முகத்தில் தெரிவதானால் இம்முகத்தில் உணர்ச்சி என்பது குடிகொண்டிருந்தது. எவ்வித நிலைமையில் இவன் இருந்தபோதிலும் அதற்கதற்கு ஒருவிதமாய்க் கனிவு என்பது தோன்றினது. சற்றுயர்ந்த அவன் தேக உறுப்புகள் யாவும் அவன் முகத்திற்குத் தக அழகமைந்தே விளங்கின. அவன் அணிந்திருந்த ஆடை ஒருகால் அவன் மெல்லிய தேகத்தைக் கொஞ்சம் பருத்திருப்பதுபோற் காட்டலாம். அவன் வயது இருபதுக்குமேல் இருக்கலாம். இவ்வணம்

அமைந்த வாலிபன் வதனத்தைப் பார்த்தபோதே நம் பெரிய வர்க்கு அவனிடம் பரிவு உண்டாயிற்று.

"நானிருப்பது மேற்றேயம். சொக்கலிங்கப் பெருமான் வீற்றிருக்கும் இவ் ஆலயத்தைக் கண்டுகளிக்க இம்மதுரை யை அடைந்தேன். இவ்வூர் என்ன ஆநந்தம்! இக்கோயிலின் பெருமை எவ்வளவு! இவ்வூர் வசிப்பவர்தம் ஜன்மம் எவ் வளவு புண்ணிய முடைத்து! மதுரை என்பது மானிடர் கைலையே." என்று சொல்லி, மேலும் "தாங்கள் இந்த ஊர் தானே?" என்றார் அப்பெரியர்.

"ஆமாம். என்வீடு மேலைத் தெருவிலுள்ளது; தாங்கள் அங்கு வருவதாயிருந்தால் எனக்கு அதிக விருப்பமே." என்று மரியாதையாய்ப் பேசினான் யௌவனன்.

"நான் இவ்வூர்க்குப் புதியவனாகையாலும், எனக்கொரு வருந் தெரிந்தவர் இவ்வூர்க்கண் இல்லை ஆதலாலும் தங் களது வரவேற்பு எனக்கு மிகவும் சந்தோஷமே. தங்க ளுக்குக் கடவுள் கருணை புரிவாராக." என்று அவனை ஆசீர் வதித்து, அன்பு முதிர்ந்து ஆநந்தம் குடிகொண்டிருக்கும் தனது பரந்த முகத்தில் மகிழ்ச்சியைக் காட்டி, விநயத் தோடு அழைத்து முன்செல்லும் அவ் இளையவன் பின் சென் றார் இவரும். மனம் அவனிடம் போனபோது தேகந்தானா அவன் பின் போகாது?

இவ்வாலிபன் மதுரையின்கண் ஓர் பெரிய வம்சத்தில் பிறந்தவன். ஆனால் இப்போது அவன் சகோதரன் ஒருவ னைத்தவிர அவனுக்கு வேறு நெருங்கிய உறவினரில்லை. சகோ தரன் அந்நகரிலுள்ள தமிழ்ச் சங்கத்துப்புலவர்களில் ஒருவர். இளையவனுக்குப் போதுமான கல்வியிருந்தும், கல்வியில் அதிக விருப்பமில்லாதவனாய்த் தன் வயதுக்கிசைந்த அந் நகர்ச் சிநேகிதர்களோடு அநேக விளையாட்டுகளிலும் வேடிக் கைகளிலும் காலங்கழித்தும், சிற்சில சமயங்களில் தன் தமையனுக்குக் கல்வி விஷயத்தில் ஏதாயினும் உதவி புரிந் தும் வந்தான். தாய்தந்தையர் இவர்களை இளமையிலேயே விட்டு இறந்தனர். ஆகவே தமயன், தங்களுக்கிருந்த சுதந்தர சொத்தைக் கொண்டு இவ்விருபது வருஷமாய்த் தம்பியைக் காப்பாற்றிப் போதுமான கல்வி கற்பித்ததுமல் லாமல், தானும் கூடியவரையில் கஷ்டப்பட்டுப் பெரியாரை

அடுத்துத் தமிழில் பாண்டித்தியம் அடைந்து இப்போதைய நிலைமையைப் பெற்ருர். இருவருக்கும் இன்னும் கல்யாண மாகவில்லை. தம்பிக்கு எங்கேயாயினும் யாதாயினும் ஒரு வேலை செய்விக்க எவ்வித முயற்சியும் செய்யா திருக்கவில்லை. இளையவன் அதிர்ஷ்டக் குறைவாலோ, அல்லது அதிர்ஷ்டத் தாலோ, இதுவரையில், அவனுக்கு யாதொரு தொழிலும் அவன் மனம் இசைய அகப்படவில்லை.

இவர்கள் குடும்பம் இவ்வித நிலைமையில் இருக்கும்போது, இளையானோடு அப்பெரியார் அன்றிரவு மேலை வீதியின் மேற் புறத்தில் அமைந்திருக்கும் ஒரு பழைய வீட்டின்கண், வாயி வில் வைத்திருந்த ஒரு சிறு விளக்கு வழிகாட்ட உள் நுழைந்தனர். அன்றிரவு சகோதரர்கள் இருவரும் இவருக்கு மிக்க உபசாரத்தோடு விருந்தளித்து, தங்கள் நிலைமையை விருப்புற்றுக் கேட்ட அவருக்கு அதை உரைத்தது மல்லா மல், அவர் தம் ஊர் முதலிய பல விஷயங்களையும் அவரைக் கேட்டு மகிழ்ந்தனர். இவர்கள் சரித்திரங் கேட்ட பெரியார் இளையவனுக்கு ஏதாவது உபகாரஞ் செய்யலாமென்று நினைத் தார். தமது ஊருக்கு இவனை அழைத்துப் போகலாமென்றும் எண்ணினர். நன்மார்க்கமும் நற்குணமுமுள்ள இவருக்கு உதவிசெய்வது சிறந்த தர்மமென்றும் நினைத்தார். சிறிதுநே மிருந்து தமயனைப் பார்த்து "எங்களூருக்குத் தாங்கள் வரமாட்டீர்களா?" என்ருர்.

"தங்கள் வேண்டுகோளுக்காக மிக வந்தனம். முன் சொல்லியபடி எனக்கு ஒழிவு கிடையாது." என்று தம்பியை நோக்கினர்.

"ஆனல் சுந்தரநாதம் வருவதில் என்ன ஆட்சேபம்? எங்கள் ஜமீனில் நான் சொல்லியபடி அவருக்குத் தகுந்த உத்தியோகம் சில இருக்கின்றன. அவருக்கும் இஷ்டமிருந்து தாங்கள் அவரை அனுப்பும் பட்சத்தில் எனக்கு மிகச் சந் தோஷமே." என்ருர் பெரியவர்.

இதைக் கேட்டதும் சுந்தரநாதம் "ஆம் அண்ணு! எனக்கு இங்கு வேலை கிடைக்காது. இங்கே இருந்தால் இப்படித்தான் காலம் போக்குவேன். போக எனக்கு விருப்பந்தான்." என்று, மதுரையைவிட்டு வெளிப்போக இதுகாறும் பொருள்

இல்லாதிருந்த தடை இப்போதொழியவே யோசனை சிறிது மில்லாமலே சந்தோஷமாய் உரைத்தான்.

ஆனால் அது அவ்வளவு சீக்கிரம் அவன் தமயனுக்குச் சரி யென்று படவில்லை. இன்றைக்குத்தான் நமக்குத் தெரிந்த இப்பெரியார் ஏதோ அவருக்குத் தோன்றியதைச் சொன்னால் உடனே அதற்கிணங்குவது சரியல்ல என்றெண்ணினன். ஆனால் தங்கள் வறுமையும், தன் சகோதரன் வீண்காலங் கழிப்பதும், அப்பெரியவரின் சரித்திரமும் நிலைமையும் அவர் தம் அன்புகூர்ந்த வார்த்தையும், அவர் கருணை மழையெனத் தாமே தம்பியை அழைப்பதும், இவையெல்லாம் தன் சகோ தரனை அனுப்பினால் கெடுதி யொன்றும் உண்டாகாதென்று நினைக்கும்படி செய்தன. பிறகு அவ்வளவு தூரம் தம்பி யை அனுப்புவது சரியா என்று எண்ணினன். இவ்விதமா கத் தனக்குள் முடிவு பெறாத எண்ணத்தால் ஒன்றும் தோன ருது, பெரியவரை நோக்கி "எனக்கு ஒன்றும் தோன்ற வில்லை." என்றான்.

"ஆனால் எனக்கு எல்லாம் தோன்றுகிறது; நான் போகப் போகிற ஊர் மலையுடனும் காடுடனும், பள்ளத்தாக்குகளுட னும், பாய்ந்தோடும் பல ஆறுகளுடனும் முழுதும் செவ் வையாய்த் தோன்றுகிறது." என்று நினைத்துத் தனக்குத் தானே சிரித்தான் சுந்தரநாதம். சுந்தரநாதத்திற்குப் பெரியவர் இருக்கும் வடமேற்குத் தேசம்போல் மற்றெதுவும் சரிப்பட வில்லை. தான் இவரை அழைத்து வந்தது எவ்வளவு நல்ல காலம் என்று மகிழ்ந்தான். மேலும் இந்த ஊரைவிட்டுப் போனால்தான் சுகம் அடையலாம். இது என்ன ஊர்? முதாதைகள் இருந்த வீட்டில் ஒருவர் இருந்தாற்போதும். நான் அங்கே போய்ப் பணஞ்சம்பாதித்து, அண்ணாவின் சுமை யைக் குறைக்கலாம்." என்று இங்ஙனம் பற்பல நினைத்தான்.

என்றிப்படிச் சகோதரர்களிருவரும் நினைத்துக்கொண் டிருக்கும்போது, பெரியவருக்கு இன்னும் முக்கியமான பல விஷயங்கள் தோன்றின. தன் இளங் குமாரத்திக்கு ஒரு கால் இவர் ஏற்ற புருஷனாகலாம் எனவும் நினைத்தார். அவன் நிலைமையை அறிந்து நல்லெண்ணம் கல்வி முதலியன அவ னிட மிருப்பதால், அவனைத் தன்னிடங்கொண்டு சென் றால் அதிகமும் சீர்திருத்தலாமென்றும் உன்னினர். அவன்

தமையனது குணம் ஒழுக்கம் முதலியவைகளும் அவருக்கு மிகச் சிறந்தவைகளாக விளங்கின. ஆனால், அவர் இப்படி நினைத்தாலும் அதை உடனே சொல்ல இசைந்தாரல்லர். சுந்தரநாதத்திற்கு ஏற்றவேலை செய்விப்பதாகவே மேலுமேலும் தமையனிடம் சொன்னார். தெய்வத்தாலாவது தவிர, மற்றெல்லா விஷயங்களிலும் சுந்தரநாதத்தைத் தன் மகன் போலவே பார்த்துக்கொள்ளுகிறேன் என்றார் பின்னும் அவர்களிடம் தன் குமாரனைப்பற்றிச் சொல்லி, அவனோடு சுந்தரநாதம் மிகவும் சகோதர உரிமை பாராட்டலாமென்று அன்றிரவு முழுவதும் பேசி, சகோதரர்களை உடன்படச் செய்தார்.

பெரியவருக்கு மறுபடியும் அவர்கள் சரித்திரம் ஞாபகத்திற்கு வந்து, "உங்கள் பாட்டனார் தமிழ்ச் சங்கத் தலைமைப் புலவர் என்றீர்களே, அவர்கள் பெயரென்ன?" என்றார்

"திருத்தக்கதேவர்." என்றார் தமயன்.

பெரியவருக்குச் சற்றே மனம் திடுக்கிட்டது. சற்றுநேரம் ஒன்றும் பேசவில்லை. இது என்ன ஆச்சரியம் என்று அதிசயப்பட்டார். பிறகு "திருத்தக்கதேவரா?" என்றார்.

"ஆம். உங்களுக்குத் தெரியுமா? என்றார் தமையன்.

"நான் கேள்விப்பட்டிருக்கிறேன்..."என்று முழு உண்மையில் பாதியை மறைத்துப் பாதியைச் சொன்னார். மறுபடியும் பெரியவருக்குச் சந்தேகம் உண்டாயிற்று:

"அவருக்கு உங்கள் தகப்பனார் ஒரே பிள்ளைதானோ?" என்று மெள்ளக் கேட்டார்.

"இல்லை. என் தகப்பனாரோடு ஒரு பெண்ணும் உண்டு. அதற்குச் சந்ததியில்லாது போயிற்று." என்று பேச்சை அவர் முடிக்க எண்ணினார்.

இவர் "இதேது' இறைவன் நம்மை இப்படி விடுகிறான் போலிருக்கிறது. இதுவும் அவன் அருள் தான். இருந்தாலும் ஆச்சரியமே! இதை இவர்களுக்குச் சொல்வது தகுதியல்ல." என்று மனத்துட்கொண்டார்.

"எங்கள் அத்தை வெகு அழகாய் இருப்பார்களாம்; மேற்றேயத்திற்றான் பணக்கப்பட்டார்களாம்." என்றான் சுந்தரநாதம். சுந்தரநாதத்திற்கு எப்பொழுதும்அழகெனில்ஆசையே.

அழகுடைய எதுவும் அவன் ஞாபகத்தை விட்டகலாது. "சரிதான்." என்றார் மகாதேவர். சந்தேகமென்பது பறந்து போயிற்று அவர்க்கு. மகாதேவர் உண்மையை மறைப்பது அவசியமாயிற்று.

இவ்வண்ணம் பேசி, எஞ்சிய இரவைச் சிறிது தூக்கத்தில் கழித்து, விடியற்காலம் எழுந்து காலைக்கடனை முடித்து, ஸ்நானஞ்செய்து, பூஜைமுடித்து, மீனாட்சியம்மன் சந்நிதிக்கு மூவரும் வந்து, தமையன் கோரிய வண்ணம் பூப்போடுதல். கெளளி கேட்டல், வழிச்சகுனம் பார்த்தல் முதலியவைகளால் மனதைத் தேறுதல் செய்து, பிறகு வீடுபோய் உணவு அருந்தி, மறுபடியும் சுந்தரநாதத்தின் வேலையைப்பற்றி ஊக்கமாய்ப் பேசினார்கள். அன்றைய பகலில் மிகுந்த நேரமும் மறுநாள் முழுவதும், நமது பெரியவருக்கு மதுரையின்கண் காட்டுவன காட்டியும், சுந்தரநாதத்தைப் பிரிய மனமில்லாத கணக்கற்ற சுந்தரநாதர்களுக்குத் தேறுதல் சொல்லி அவர்களிடம் விடைபெற்றும் காலத்தைக் கழித்தனர். மூன்றுநாட் காலையில், அடிக்கடி கடிதம் எழுதுவதாகத் தமயனுக்கு வாக்குக் கொடுத்து, பெரியவர் சுந்தரநாதத்துடன் அவர் ஊர் போக ஆயத்தப்பட்டனர்.

மேற்கூறிய பெரியார் மணிமங்கலம் மகாதேவர் என்று முன்னமேயே ஊகித்திருக்கலாம். பெரியவர் தமயனுக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி, சுந்தரநாதம், ஜமீனில் சிறுசிறு வேலைகளிலிருந்து, மூன்று வருஷங்கழித்து, காரியதரிசிக்கு எப்படி உதவி கர்த்தாவாக நியமிக்கப்பட்டான் என்பதும் விளங்கும். முதல் இரண்டு வருஷங்கள் மகாதேவர் வீட்டிலேயே இருந்து அரண்மனை வேலையே பார்த்துவந்தான். அடுத்த வருஷம் காரியதரிசியின் தூண்டுகோளின்மேல் அவர் வீட்டிலேயே சாப்பாடு படுக்கை முதலியதும் வைத்துக் கொண்டான். பெரியவர், சுந்தரநாதம் வந்த இருவருஷங்களுக்கெல்லாம் அவன் தமயனுக்குக் கண்ணகியின் கல்யாணத்தைப்பற்றித் தெரிவித்தனர். தன் தம்பியின் அதிர்ஷ்டத்திற்கு ஆச்சரியப்பட்ட அவரும் உடனே உடன்பட்டனர். ஆனல் கல்யாணம் முடிப்பது இன்னுஞ் சில வருஷங்கள் கழித்தே யென்று நிச்சயிக்கப்பட்டது. இது சுந்தரநாதமும் உடன் பட்டதே. கண்ணகியின் அழகும் அவள் பேச்

சும் கல்வியும் சுந்தரநாதத்தின் மனதைக் கவர்ந்தன. கண்ணகியும் சுந்தரநாதந்தான் தன்னை மணப்பான் என்ற சிறு பிள்ளை விளையாட்டெண்ணத்தால் எப்போதும் அவனைப் பரிகசித்து நேசித்துவந்தாள். ஆனால் சுந்தரநாதம் மாத்திரம், அவன் அங்கே சென்ற மூன்றும் ஆண்டாகிய இவ்வொரு வருஷகாலமாக, கண்ணகியையாவது மகாதேவரையாவது மூன்றுதரங்கூடப் பார்க்கவில்லை. கை நிறைய மோதிரம் இடுபவர் காரியதரிசி அன்றோ? மேலும், மணிமங்கலத்தில் கண்ணகி ஒருத்திதானா கல்யாணப் பெண்?

## கக. ஜமீன்.

நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்.
அதனால்; யான் உயிர் என்பதறிகை
வேன் மிகு தானை வேந்தர்க்குக் கடனே.—மோசிகீரனார்.

மணிமங்கலம் ஜமீனைப்பற்றி முன்னமேயே சில செய்திகள் குறிப்பிட்டிருக்கின்றன. ஜமீன் குடிகளில் பெரும்பாலரும் பழைய வழக்கங்களினின்றும் ஒரு சிறிதும் விலக விரும்பார். பொதுவாய்க் கிராமவாசிகள் நினைக்காததை ஜமீனரசாட்சியார் கனவிலும் கருதார். ஆகவே தன் மூதாதைகளின் கருத்துக்களுக்கு எவ்வளவும் பிசகாமல் நடந்து வந்தார் வயது முதிர்ந்த ஜமீன் தலைவரும்.

ஜமீன் சிறியதாகையால் குடும்ப விஷயமும் அரசாட்சி விஷயமும் ஒன்றுக்கொன்று நெருங்கிய சம்பந்தமில்லாமல் பிரிக்கப்படவில்லை. பரிபாலன விஷயத்தில் தலைமைப்பட்ட உத்தியோகஸ்தர்களே ஜமீன் குடும்ப விஷயமும் கவனித்து வந்தார்கள். இவர்கள் யாவரும் அரண்மனைக் குடும்ப விஷயத்தைச் செவ்வனே அறிவர். அரண்மனைக் குடும்பத்தில் இவ்வருஷம் கல்யாணம் எனில் அவ்வரண்மனை உத்தியோகஸ்தருக்கெல்லாம் அப்போது கல்யாணமே. அவ்வுத்தியோகஸ்தரெல்லாம் அதே ஆண்டில் கல்யாணம் செய்துகொள்ளாவிட்டாலும், அவர்கள் யாவரும் தங்கள் தங்கள் உத்தியோகத்தை விட்டோ விடாமலோ அரண்மனைக் கல்யாணத்தைக் கவனித்தாற் போதும். அரண்மனை நாய்க்கு நோயானால், காரியதரிசியாய் இருந்தாலென்ன, மருந்து தேடக்கூடாதா?

என்பர் பலர். மணிமங்கலம் அரசாட்சி முறையின் தன்மை இப்படியாக, அம்முறையின் தூய்மையை நோக்குவோம். காரியதரிசியின் கைநாய் கட்டுவதற்காகும் நல்ல வயிரமான சந்தனமரமொன்று ஒரு குடியானவன் கொண்டுவந்து கொடுத்தால், அந்த வருஷம் அவன் எத்தனை காணி உழுதாலும் அவனுக்குத் தீர்வைமாத்திரம் இல்லை. மதுரையிலுள்ள தம் ஊர்திரி சிநேகிதருக்குத் தேன் அடிக்கடி வேண்டும். காரியதரிசியின் உதவிகர்த்தா, தேனெனில், இடியில்லை புடையில்லை என்பார். எல்லாம் அவர் இடித்தால்தான் இடி, அவர் புடைத்தால்தான் புடை. ஜமீன் அரண்மனையில் குதிரைகட்டும் வேலையில் ஒருவன் ஒருநாளிருந்து, பிறகவன் என்ன குற்றஞ் செய்தாலும், அவனுக்கும் கெடுதியுண்டோ? இவ்வண்ணமான அரசாட்சிமுறைமையும் உத்தியோகஸ்தர்களும் நிலை பெற்றிருந்தால், ஆசிரியர் மோசிகீரனார் கூறுகிற கடமையை ஜமீன் அரசர் எப்படி அறிந்திருத்தல் கூடும்?

ஆனால், இவைகள் எல்லாவற்றையும் கூடிய வரையில் மாற்றி, சுற்றிலுமிருக்கும் ஆங்கிலேய அரசாட்சியைப்போல் நடத்தவேண்டுமென்பது இளையஜமீன் சந்திரவர்மாவின் நோக்கம். இவர் பல நகரங்களையும் பார்த்து ஆங்காங்குள்ள அநுபவம் அறிந்தவர். இவர் நமது நாட்டுக் கல்வியையும் மேற்றேயத்துக் கல்வியையும் ஒருங்கே உணர்ந்த உத்தமன். ஜமீனைச் சீர்திருத்தி, தம் குடிகள் விர்த்திக்கு வரவேண்டியதற்குப் பெருமுயற்சி செய்பவர் இவர். இவர் நோக்கம் முழுதும் இதுவே. இதன் நிமித்தமே இவர் அடிக்கடி சென்னைக்குச் செல்வர். ஆங்குள்ள தம் சிநேகிதர் பலருடைய உதவியால் ஆங்கிலேய அரசாட்சியின் தலைவரிடமிருந்தே தம் ஜமீனில் பலவித மாறுபாடுகள் செய்ய உத்தரவு பெற்றார். கூடிய வரையில் அதிகாரம் பெற்று, நன்மை பயக்கும் மாறுதல்கள் பல இயற்றி, தமது ஜமீனைச் சீர்படுத்த வேண்டுமென்பதுவே நம் சந்திரவர்மாவின் எண்ணம். இவர் இதற்காக எடுக்கும் பிரயாசை கொஞ்சமல்ல.

ஆனல் இவர் செய்வனயாவும் இப்போதிருக்கும் காரியதரிசிக்கும் மற்று அவரைப்போல்வாருக்கும் பிரயோஜனமில்லாப் பெரிய குறும்பென்று தோற்றியது. ஆகவே இவர்

கள் தங்களால் ஆனவரையில் சந்திரவர்மாவின் முயற்சிக்குப் பல இடையூறுகள் இயற்றிவந்தனர். இப்போது சௌக்கிய மாயிருக்கும் உத்தியோகஸ்தருக்கு எவ்விதமாறுதலும் விஷக் காற்றே. "என்னய்யா! இத்தனை வருஷங்களாக இந்த ஜமீன் சரியாக நடந்துவரவில்லையா? இப்போதுதானா இதற்குத் தலை வலி! வேலையற்றுப் போனவர்களுக்கு இதெல்லாம் வேலை. பிள்ளைகளை மணிமங்கலம் விட்டு வெளியே அனுப்பினால் பயன் பின்னெப்படி இருக்கும்?" என்று அடிக்கடி முதல் ஜமீனிடத்தில் முறுமுறுப்பார் காரியதரிசியார்.

வயது பெரிதும் முதிர்ந்து, பழைய வழக்கங்களில் பற்று டையவரேனும், அவைகளை மாற்றுவதில் தமக்கோர் விருப்பம் இல்லாவிடினும், இவர் தம் மகன் குணத்தையும் அறிவையும் ஆர்வத்தையும் செவ்வனே தெரிந்து வியந்து நேசித்தாராத லால், சந்திரவர்மா செய்யும் எதற்கும் தடங்கல் கூறார். தமது அரிய வர்மா கெட்டது ஒன்றையுமே செய்யான் என்னும் நம்பிக்கை கொண்டவர். சந்திரவர்மா செய்ய முயலும் ஏதா வது தமக்குத் தகுதியில்லையென்று படினும், தம் அருங்கும ரன் அதன் அவசியத்தையும்பிரயோஜனத்தையும்எடுத்துரைக் கில் அடக்கொணாத் திருப்தி அடைவர். "என்ன அறிவு என் இள மதலைக்கு! சந்திரனுக்கு எவ்வளவு பெருந்தன்மை! என் பிள்ளையே பிள்ளை!" என்று எப்போதும் தமக்குள்ளேயே சொல்லி, கொடிய தள்ளாமையால் மெலிந்து சோர்வுற்ற தம் மனத்திற்கு அமுதூட்டி, சற்றே இக்கொடிய உலகில் அமர் வர். மேலும், இவர் காரியதரிசியினிடமும் மற்றப் பெரிய உத்தியோகஸ்தர்களிடமும், தமது மகன் நற்குணங்களையும் அரிய சாமர்த்தியத்தையும் பற்றி அடிக்கடி புகழ்ந்து கொண் டாடுவர். தம் மகனிடம் தமக்குள்ள பேரன்பால் அநேக ஜமீன்களிலும் ஜமீன் குடிகளிலும் வெகுகாலம் ஆராய்ந்து, கடைசியில் சந்திரவர்மாவுக்கு எவ்விதத்திலும் பொருந்தின இளமங்கையாகிய கோகிலத்தை விவாகம் செய்தனர். இவர்கள் இருவரும் எவ்வளவு அன்பாயும் ஆர்வமாயும் வாழ்கிறார்கள் என்பது நமக்குத் தெரிந்தேயிருக்கிறது. தமது குமாரன் வாசித்து முடிந்து, அரசாட்சி கைக்கொள்ளும் சாமர்த்தியம் அடைந்தான் என்று அறிந்தவுடனே, ஜமீன் பரிபாலனம்

யாவும் அவனிடம் ஒப்பித்து, அதை விர்த்திசெய்யும்படி தம் மால் சொல்லவேண்டுவனவற்றைச் சொல்லி மேற்பார்த்து வந்தனர். இவரே எல்லா காரியத்தையும் செய்வதாய் மேலுக்குத் தோன்றினாலும், விஷயமொன்றும் சந்திரவர்மாவின் யோசனையின்றி நடக்காது.

இங்ஙனம் இளவயதிலேயே ஜமீனைக் கைக்கொண்ட சந்திரவர்மா, அவர் தம் இனிய பெயர்க்கேற்ப யாவரிடத்தும் மிக்க அன்பு செலுத்துபவராய், ஜீவகாருண்யத்தைத் தமது மதமாகக் கொண்டு, தமது அரண்மனை உத்தியோகங்களை நற்குணமும் நற்செய்கையும் நல்லறிவும் வாய்ந்தவர்களுக்குக் கொடுத்து, யாவற்றையும் கவனித்து வந்தார். எனினும், ஆயிர வருஷங்களாக அமைந்த பழக்க வழக்கங்களும் உத்தியோக விவரங்களும், காரியதரிசி சொல்வதுபோல் நினைத்த மாத்திரத்தில் மாற்றுதல் இயலாதாகையால், கொஞ்சங் கொஞ்சமாகச் சீர்திருத்தம் செய்துவந்தனர். இவர் தம் ஆற்றலுக்குப் பொருது இவரை வஞ்சிப்பவராயினர் காரியதரிசி முதலாயினோர். இக்காரியதரிசிக்கு, இது இன்ன தன்மையது என்று உணரா உயிரில்லாக் கருவிகள்போல் உதவுவர் சுந்தரநாதம் முதலியோர். இவர்களைப் போன்ற பெரிய உத்தியோகஸ்தர் இப்படியாயின், ஷண்முகநாதரைப் போன்று நற்குணமுள்ளவர் அங்கு இல்லாது போகவில்லை. ஷண்முகநாதரும், இப்போதைய காரியதரிசிக்கு முந்திப் பல வருஷம் வெகு கண்ணியத்தோடும் உண்மையோடும் அவ்வேலை பார்த்து வந்த மகாதேவரும் சந்திரவர்மாவின் அன்புக்கும் மரியாதைக்கும் பாத்திரமாவர். மேலும் கல்வித்தோழனான விஜயமோ சந்திரவர்மாவின் வலக்கையென இருந்தான். சுந்தரநாதத்தின் அவ்வளவு உயரிய வேலைக்கு அவனது அடக்க ஒடுக்கம் மாத்திரமேயன்றி இவையெல்லாம் காரணமல்லவா? விஜயம், சந்திரவர்மா இவர்களிடம் கூட்டுறவின்றிக் காரியதரிசியின் மந்திரசக்தியால் கட்டுப்பட்ட மதுரைச் சுந்தரநாதம் என்னதான் செய்ய உடன்படான்? "இவர்கள் மாட்டு மிக்க நேயம் பாராட்டுவது எற்றுக்கோ?" என்றான் மதுரைத் தமிழில் நம் சுந்தரநாதம்.

## கூ. மாலைப் பூ.

அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து,
பொருள்வயின் பிரிவோர் உரவோர் ஆயின்,
உரவோர் உரவோர் ஆக.
மடவம் ஆக மடந்தை நாமே.—கோப்பெருஞ்சோழன்.

முன்னொருநாள் அரண்மனைக் காதலர் தேனெனப் பேசி மகிழ்ந்த பூங்காவுக்கு இன்று சாயந்திரம் செல்வோமாக. இன்று மாலை, பகலவன் தன் பொன்னிறக் கதிர்களைக் கொஞ்சமேனும் செட்டில்லாமல் ஆராதூரித்தனமாய்த் தோட்டமெங்கணும் இறைத்தனன். பாசிலைகள் பலவும், பாய்ந்து மூச்செறிந்து எங்கியோடும் இளங்காற்றால் ஊசலாடித் தூங்கத் தொடங்கின. வாய்மூடிய மொட்டுக்கள் பலவும் மாலையைக் கண்டு தம்மை அறியாது ஆநந்தமெய்திச் சிரித்து அலர்ந்தன. இளங்கொடிகளும், செடிகளும், இலைகளும் காலைதொடங்கிக் கதிரவன் வெப்பத்தால் வருந்தியதற்கு ஆற்றாது, அங்குவந்த மாலையாகிய மங்கை பனிப் பன்னீர் தெளிக்க ஆரம்பித்தாள். நட்சத்திரங்கள் பதித்த இருட்போர்வையைப்போர்த்து இனி வரவிருக்கும் இரவினளுக்கு முற்செல்லும் மாலைக்கன்னி எவரையும் மயக்கும் ஆற்றலுடையாள். பூந்தோட்டத்தினுள்ள பலவர்ணப் பூக்கள் யாவும் தத்தம் ஜாதிகூறி வேற்றுமை அடையாவண்ணம் சமரசப்படுத்துவான்போல் தன் மங்கிய ஒளியை எங்கும் வீசினள். சிவந்து கதித்து மலைப் பின்னோடிப் பதுங்கிய பகலவன் தன் கதிர்களை வாரி ஏகும்போது தவறிப் பின் விடுத்த சில கதிர்களே போன்றது மாலையின் கிரணம்.

இவ்வண்ணம் மாலை வரலும், இரைதேடி வெளிச்சென்ற புட்கள் திரும்பிவந்து, அக்காவின் மரங்களிலுள்ள தம்தம் கூட்டில் தங்கித் தோழனைக் காணாது இரங்கிக் கூவின. பகலில் வேலை செய்த பயிர்த் தொழிலாளர் தம் கால் நடைகளைக் கட்டவிழ்த்துவிட, வீடுநோக்கிச் செல்லும் அவை எக்காளமிட்ட ஓசை, அருகிலுள்ள பெரு மரங்களில் குடிகொள்ளும் எதிரொலியை எழுப்பிற்று. இதுகாறும் காட்டு வேலை செய்த வேலையாளர் சிந்து தெம்மாங்கு முதலியவற்றைப் பாடின ஓசை பூங்காவிலும் புகுந்தது. பூந்தோட்டத்தின் வட கோடியி

லுள்ள பெரும்புல் வெளிக்கு அப்புறமிருக்கும் பெருமாத் தோப்பில் ஓவ்வோர் ஆந்தை கிளைகூட்டுவது கேட்கும். பகலில் பறந்து ஒழுங்கற்ற தம் சிறகுகளைப் பறவைகள் அடித்துக் கோதி ஒழுங்குபடுத்தின. வௌவால் முதலிய இராப் புட்கள், வரிசை வரிசையாயும் தனித்தும் ஆகாய வழியாய்த் தம் இருட்டுறையை அடையுமாறு, வேகமாய் ஒற்றைக் குரலிட்டுப் பறந்து சென்றன. மலையின்மீது வேட்டையாடித் துப்பாக்கியும் தோற்பையும் ஒரு தோளில்தாக்கி, கையில் வலித்து இழுத்த நாயொடு அதோ கோட்டைச் சுவர்க்கு அப்பாலுள்ள மேட்டின்மேல் நின்று, பெரிய அப் புளியமரத்தை அண்ணாந்து பார்க்கிற அவ்வேடுவன், அந்தோ, என் செய்வனோ!

இவை யாவும் கவனித்துக் களிக்குமாறு தன் தோழி ஒருத்தியோடு அப்பூங்காவினுள் புகுந்தாள் கோகிலம். அரண்மனைப் பின்புறவாயிலால் வெளிவந்த அவ்விருவரும் பூந்தோட்டத்தின் இடையில் ஏகும் ஒரு கால் பாதையின் வழியாய் நடந்து ஏதோ பேசிக்கொண்டு வந்தார்கள்.

"கோகிலம்! ஐந்தாறு நாளாய் உன்முகம் நன்றாயில்லை; எனக்குக் காரணம் தெரியும்." என்று தோழி சிறுநகை புரிந்தாள்.

கோகிலம் "ஆமாம், உனக்குத்தான் காரணம் தெரியுமே! நீ வெகு காரணம் தெரிந்தவள் அல்லவா?" என்று சொல்லி, அங்கு மலர்ந்திருந்த ஓர் அழகிய சண்பகத்தைக் காட்டினள். குறித்த சண்பகத்தைப் பறிக்க முயன்ற தோழி அதை முழுதும் பறிக்கத் தவறி அகன்ற இரண்டு இதழையே கைக்கொண்டு மற்றவைகளை உதிர்த்துவிட்டாள்.

"ருக்மணி! என்னடி உன் தெம்மாங்கு! ஏண்டி அந்தப் பூவைக் கெடுத்தனை?" எனச்சொல்லி அவள் முகத்தைப் பார்க்க, அது சற்று மாறுவதாய்த் தோற்றலும், உபசாரமாய் "உன் அஜாக்கிரதையே அஜாக்கிரதை!" என்றாள் இளவரசி.

"இங்கிருக்கும் இவ்வளவு பூக்களில் ஒரு சண்பகம் போனாலென்ன? அதே பூத்தான் நிரம்ப சிறந்ததோ?" என்றாள் ருக்மணி. கோகிலத்தின் உபசார வார்த்தையால் தான் முற்கொண்ட சிறுவிசனம் நீங்கி, அவளையே கடிபவள்போல் தோன்றினாள் ருக்மணி. "ஏண்டி! ஒரு பூவை அழித்தது

உனக்கே விசனமாயில்லையோ?" என்றாள் பூவையே ஒத்த கோகிலம்.

"அது போகட்டும். நீ என்னமோ சொல்வதாய்ச் சொன்னையே; அதென்ன கோகிலம்?" என்று அவள் முகத்தைத் தனது கடைக்கண்ணால் நோக்கி, சுற்றிலுமுள்ள பூத்தலில்லா மொக்குகள் ஒத்த தன்வரிசைப் பற்களைப் பாதி மறைத்துச் சிரித்தாள் ருக்மணி. பூ நசுங்கியதால் தன் மனம் நசுங்கிய கோகிலம், அவள் தோழியிடம் கேட்டுத் தெரியவேண்டுமென்ற எண்ணம் ஒரு நிமிஷமாயினும் அவள் மனதைவிட்டு அகலவில்லையாயினும், அதை இதுகாறும் சொல்லமுடியாதிருந்தாள். அது இங்ஙனம் அவள் தோழியால் தூண்டப்படவே, ஏதோ மனக்கலக்க முறுபவள்போல் முகஞ்சுளிக்க ருக்மணியைநோக்கி, "இவளை நம்பலாமா?" என்று பார்ப்பவள்போல் சற்று நிதானித்தாள்.

பிறகு "ருக்மணி! அத்தான் சென்னைக்குப் போனவர் இன்னும் வரவில்லையே. உனக்கு அதைப்பற்றி ஏதாவது தெரியுமோ? உண்மையைச் சொல்லுவது உனக்கேன் அவ்வளவு கஷ்டமாயிருக்கிறது? சிரிக்காது சொல்லடி." என்றாள் இரவிலும் பகலிலும் தன் இறைவனை மறக்காத கோகிலம்.

"என்னம்மா வேடிக்கையாயிருக்கிறது. அத்தான் சென்னைக்குப் போனதாவது, திரும்பி வாராததாவது உனக்கல்லவோ செவ்வையாய்த் தெரியும். என்னைக் கேட்பானேன்? எனக்கென்ன பரீட்சையா?" என்று மறுபடியும் முறுவலித்தாள் ருக்மணி.

"சீச்சீ! என்னடி கேட்டால் இல்லாததெல்லாம் உளறுகிறையே. என்னடி இது!" என்று கோகிலம் உண்மையாகவே வெறுப்பாய்ப் பேசினாள்.

"சரி! பெரிய மாமாவுக்கு இன்றைக்குச் சென்னையிலிருந்து கடிதம் வந்ததே, தெரியாதோ? அதைப் படித்தால் சங்கதி அறியலாம். உண்மையில் எனக்கு ஒன்றும் தெரியாது. ஜமீன் விஷயமாய்த்தான் போய் அங்கிருப்பர் என்று நினைக்கிறேன்." என்றாள் தன் தலைவியின் குறிப்பறிந்த தோழி.

சந்திரவர்மா சென்னைக்குப் போகும்போது, கோகிலம் அவர் தன்னைவிட்டுப் போகிறாரே என்பதைப்பற்றி நினைத்து வருத்தப்பட்டாளே ஒழிய, அப்போது 'எங்கே போகி

தீர்கள்? என்ன காரியத்திற்காகப் போகிறீர்கள்?' என்ற கேள்விகள் அவள் மனத்தில் எழவில்லை. 'சந்திரவர்மா' என்பது தவிர வேறெதுவும் அவள் மனத்திலிருக்க இடமில்லை. அவர் போய் வருவேன் என்று சொன்ன நாட்கள் கழிந்தபின்னர், அயர்ந்து, அவர் சென்ற காரணத்தைப்பற்றி விசாரிக்கப் புகுந்தனள். தான் மற்ற அரண்மனைக் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் யாவரிடமாவது இக்கேள்விகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வெட்கப்பட்டாள். புருஷனிடம் இவ்வளவு பற்றுள்ளவள் என்று பிறர் நகைப்பர் என்று நாணமடைந்தாள். ஆனால் வாய் கேட்கமுடியாததை முகம் எப்போதும் கேட்டது. குறித்த நாள் வரும்வரையில் இடைப்பட்ட நாட்களை எண்ணியிருந்தவள், அன்று வருவாரென்றே நம்பினாள். தன் நாயகன் சென்ற வேலையின் தன்மையை அறிந்தாலல்லவோ, அவ்வேலை முடிந்ததா இல்லையா எனக் கவனித்து அவர்வர முடியும் முடியாதென அறியலாம்.

அவளுக்கு அவள் உயிர்த்துணை தன்னைவிட்டுப் போவதும் தன்னிடம் வருவதுந்தான் முக்கிய விஷயங்கள். அவர் என்ன கல்விமானா? ஒரு ஜமீன் தலைவனா? அவருக்கு எத்தனை வெளி விஷயங்களில் கவலை இருக்கும். அவருடைய இதரவேலைகள் என்ன? அவருக்கு மற்றவர்களைப்பற்றி என்ன எண்ணம்? என்பனபோன்ற பலப் பல விஷயங்களில் அவள் ஒரு நிமிஷமாவது மனதைச் செலுத்தினவள் அல்ல. சந்திரவர்மா இன்று பணக்காரனாயும், ஜமீன் தலைவனாகவும் இருக்கலாம்; நாளைக்கு வேலைசெய்து ஜீவனஞ்செய்யும் ஓர் உத்தியோகஸ்தனாக இருக்கலாம்: அது எவ்விதத்திலும் கோகிலத்திற்குத் தோந்நாவல்ல. ஏனெனில், சந்திரவர்மாவைத் தனது அன்பிற்குரிய அழகனென மட்டும் நினைத்தனளே யன்றி, அவரை உலகத்துள்ள மனிதர்களில் ஒருவனாக அவள் நினைத்தாளல்லள். அவள் அவ்விதமாக நினைப்பதின் அவசியத்தை அறிந்தாளல்லள். சிறுவயதில் தன் தந்தையை அவள் அது போன்று நேசித்ததுண்டு. இப்போது சந்திரவர்மாவை மணந்தபிறகு தன் கணவனே தனக்கெல்லாம் என்று இயல்பாய் நினைத்தாள். தனது தகப்பனாரைத் தான் எவ்வளவு நன்றாய் முன் நேசித்திருந்தாள். இப்போது அப்படித் தான்நேசிக்கவில்லையே என்று ஒருநாளாயினும் சிந்தித்தறியாள். தடங்க

லின்றிக் களகளெனக் குதித்தேகும் பளிங்கேயெனப்படும் ஊற்றுநீர், தான் ஓடும் கால்வாயினின்றும் திருப்பி வேறுவழியாய் விட்டபோது, எப்படித் தன் முகவிலாசத்தில் மாறுபடாது, அவ்வழியிலும் இயற்கையாய் ஓடுவதொப்பவிருந்தது அவள் மனமும். உலகினர் வழக்குக்கு மாருகத் தான் நடக்கிருள் தான் நடக்கக்கூடும் என்பதை அவள் முற்றுமறியாள். தான் பிறந்தகத்தைவிட்டு இங்கு வந்து ஓர் நாயகனை மணந்து வாழ்வது அவளுக்கோர் புதுமையாக ஒருபோதும் தோன்றவில்லே. அவள் தன் மாசின்மைதான் என்னே!

இவ்வண்ண மனமுடையளான நம்கோகிலத்திற்கு, 'கடிதம் வந்திருக்கிறது அதன் மூலமாய் அவள் தன் அன்புக்குகந்த அழகனைப்பற்றி அறியலாம்' என்ற செய்தியைத்தோழி தெரிவித்தபோது, அப்படி அறியவேண்டியது தான் என்று நினைத்தாள். எனினும், எப்போதும் செய்யாத புதுவிஷயம் ஒன்றை அவள் செய்கிருள் என்று மாத்திரம் அவள் தெரியாது தெரிந்தாள். ஆகவே கோகிலம் சற்றுச் சிந்திப்பவள் போல் நின்று, பிறகு தோழியைப் பார்த்து, "அக்கடிதத்தை எடுத்துவருகின்றனையா? அது எங்கே இருக்கிறது? நீ எப்போது பார்த்தாய்?" என்று கேட்டாள்.

"சற்று முன்னே பெரிய மாமா மேஜைமேல் வைத்திருந்தது. பிறகவர்கள் பிரித்துப் பார்த்து மேஜையுள் வைத்தார்கள். ஆனலென்ன, திறவுகோல் அங்கே தான் இருக்கிறது. மாமா யாரிடமோ வெளியில் பேசிக்கொண்டிருக்கிருர்கள். நான் போய் அக்கடிதம் கொண்டுவருகிறேன். அரை நிமிஷத்தில் திருப்பி அங்கேயே வைத்துவிடலாம்." என்று ருக்மணி சொல்லிக் கோகிலம் சம்மதித்தவள் போன்று அவளைப் பார்த்து நிற்கவே, "இங்கேயே இரு, இதோ வருகிறேன்." என்று முன் வந்தவழியே திரும்பி அவள் ஓடியே சென்ருள்.

போனவள் இன்னும் போவதாகத் தோற்றும்போதே நான் வைத்ததை எடுத்து வருபவள்போல் திரும்பி ஓடிவந்தாள் ருக்மணி. தன்னைவிட்டேகும் தோற்றம் கோகிலத்திற்கு முகவில் பிரிக்க முடியாத ஒருவித பயத்தை உண்டாக்கியதற்கு எதிராக, இப்போது தன்னிடம் ஓடிவருபவள் அடங்கா மகிழ்ச்சியையே உண்டாக்கினள். எனினும், இது தான் என்

றும் செய்யாத ஒரு புது செய்கை என்று நினைக்க அவள் உடம்பு சிலிர்த்தது.

இது இப்படியாக, பூந்தோட்டத்தின் வட இறுதியினின்றும் ஒரு புல்வெளி அடுத்த பெருமரக் காடுவரையில் செல்லுகிறதென்றும், இப்புல் வெளியிற்றான் இல்லுறை விலங்குகள் பல மேய்வது வழக்கமென்றும், முன்பு கூறியுள்ளதைச் சற்று ஞாபகப்படுத்திக் கொள்வோமாக. பரிதி படுவதன்முன், பெருமரக்காட்டு இறுதியின் புல்வெளி வரம்பில் உட்கார்ந்து ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தான் ஒரு புருஷன். அவன் கோகிலமும் ருக்மணியும் பூங்காவுக்கு வருவது கண்டு, சற்றுநேரம் அங்கே கொஞ்சம் மறைவாய் நின்று இவர்களைப் பார்த்திருந்தான். உடனே, அவர்கள் அருகில் போய் அவர்களிடம் பேசலாமென்கிற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. ஆனால் நேராகச் சென்றால் அவர்கள் இவனைக் கண்டு திரும்பிவிடுவது நிச்சயம் என்றும் ஆகவே அவர்கள் அறியாதே அவர்கள் அருகில் செல்வது சரியென்றும் எண்ணினன். உடனே புல்வெளி, பூந்தோட்டம் இவைகளின் கிழக்கு வரம்புக்கும். அரண்மனைச் சுவருக்கும் இடையிலுள்ள வரிசையான தென்னைமரங்களினிடையே சத்தம் படாது வேகமாய் இவர்கள் நின்று பேசும் இடத்திற்கு அருகில் வர முயன்றனன். இருபெண்களும் கடிதவிஷயத்தில் ஆழ்ந்து பேசிக் கொண்டிருக்கும்போதும், தோழி தனித்துப் போனபோதும், இவன் இவர்களிருக்கும் இடத்திற்கு நேர்கிழக்கில் வந்து சேர்ந்தனன். தான் இவ்வாறு வந்ததற்குக் காரணம் கேட்டால் பல சொல்லக்கூடும் என்று நம்பினான் இவன்.

ருக்மணி வந்ததும் கடிதத்தை விரித்து, "என்ன! இந்த வெளிச்சத்தில் வாசிக்க முடியாதா?" என, மனதில் வாசிக்க முடியாதெனத் தோன்றிய கேள்விக்குப் பதிலாக உரைத்து வாசிக்கத் தொடங்கினள்.

"இருட்டில் ஒன்றும் தெரியவில்லை, இதோ பெரிய எழுத்தில் எழுதி அடிக்கோடிட்டிருக்கிறதைப் பார்ப்போம்." என்று இருவரும் அதை உற்று நோக்கி ஏதோ வாசித்தனர். ஏதோ கடிதம் இவர்கள் தனியாய் வாசிக்கிறார்கள் என்று தெரிந்தவுடனே, கடித விஷயத்தில் மிக்க கவலை கொண்டு மறைவில் நிற்பவன், இதைத் தெரிவது அவசியமென்று நினைத்தான்.

ஆகவே வெளிவரக் கொஞ்சம் அச்சப்பட்டவனுயினும், உள்ளங்கைகளைத் தட்டிக்கொண்டு, அவர்கள் அச்சமுறுதிருக்கும் வண்ணம் மெதுவாக நடந்து, தன் குரலைக்காட்டுவதற்காக 'ருக்மணி!' என்று கூப்பிட்டு, தன்னுடைய புள்ளிமான் இங்கு வந்ததாவென்றும், அவர்கள் எவ்வளவு நேரம் இங்கிருக்கிருர்களென்றும், புதுமானுனதால் அது அவ்வளவு தொந்தரவு தருகிறதென்றும் விடாமல் பேசி அவர்களிடம் அதிக விரைவாக நெருங்கினன். இதெல்லாம் அவனுக்கு ஒரு விநாடி வேலை. இவை சொல்வதற்கு அவன் முந்தியே யோசித்தானல்லன். உண்மையில், அவன் முதலில் யோசனை செய்து சொல்வதாக இருந்ததே வேறு. ஆனுல் அவசரத்திற்குத்தக உதவுவது மனத்தின் தன்மை. கோகிலமும் ருக்மணியும் ஓசை வந்த பக்கம் திரும்பலும் அவர்கள் தேகம் நடுக்கலுற்றது; வாய் குளற ஆரம்பித்தது; போவதென நினைத்தார்களே ஒழிய போக முடியவில்லை; கடிதத்தைத் தாங்கள் அறியாமலே உடையில் மறைக்க ஆரம்பித்தனர். ருக்மணி சற்று நிதானித்து, "உமக்கென்ன காரியமிங்கு?" என்று வெகு கோபத்தோடு கேட்டாள்.

## கரு. விஜயம் வருந்துதல்.

A grief without a pang, void, dark, and drear,
A stifled, drowsy, unimpassion'd grief,
Which finds no natural outlet, no relief,
In word, or sigh, or tear—
O Lady! in this wan and heartless mood,
* * *

*Coleridge.*

மணிமங்கலத்தின் நடுத்தெருவின் மேலிறுதியில் வடபாரிசத்திலுள்ள வீடுகளில், பெரியதும் பழையதுமான கற்கட்டட வீட்டின் மேல்மெத்தையில் பின்புறம் தோட்டநோக்கிக் கண்ணுடி ஜன்னல்கள் மும்மூன்று வைத்த பெரிய அறைகள் மூன்றிருக்கின்றன. இம்மூன்றையும் கூட்டி இயைக்குமாறு இவற்றின் கதவுகள் திறக்கப்படும் முகமாக நீண்ட தாழ்வாரம் ஒன்றிருக்கிறது. இதையே போன்று தாழ்வாரங்கள் மற்ற மூன்று பக்கங்களிலும் ஓடி நடுவிலுள்ள நாற்கோண வாயிலின் வரம்புகள் ஆகின்றன. இம்மூன்று பக்கங்

களிலும் மூன்று பெரிய கூடமும், ஒவ்வொரு கூடத்தின் இறுதியிலும் இரண்டு சிறு அறைகளும் பொருந்தின. அடிவீட்டினின்றும் மேல்வர, வீட்டின் வடகிழக்குத் தென்மேற்கு மூலைகளினின்றும் இரண்டு பரந்த மரப் படிக்கட்டுகள் கட்டி, நடப்பதற்கென மத்தியில் நடுநாட்டுக் குறும்பாடுகளின் மயிரினுல் பின்னப்பட்ட கனத்த ஒற்றைக்கம்பளம் விரித்துத் தைத்திருந்தன; இக்கம்பள மத்தியில், நாஞுவர்ணக் கல்லிழைத்த மோஸெயிக்கு வேலைப்பாட்டை ஒத்து, பலவர்ண மயிர்க்குச்சால் சித்திரவேலை செய்திருந்தது. பளிங்காலான விளக்கேந்திகள் பல செய்து மலைப் பூங்கொத்துகளை போன்று இக்கூட நடுவில் தொங்கின. மேல் மெத்தையின் மேற்புறத்துள்ள கூட முழுவதும் பெரிதும் நீண்டு விசாலித்துள்ள கரிய இரத்தினக் கம்பளம் விரித்திருந்தது.

கூடத்துச் சுண்ண வெண்சுவர்களில் திருஞான சம்பந்தர் முதலிய சமய ஆசிரியர்களின் உருவங்கள் சித்திரித்திருந்தன. திருவள்ளுவரின் உருவம் ஓர் சலவைக் கல்லில் செதுக்கி, சுவர் ஓரமாய் மத்தியிலுள்ள ஓரலங்காரமான பீடத்தில் வைத்திருந்தது. அவை அவ்விடத்திற்கே தெய்வீகத் தன்மையை உரித்தாக்கியதுபோல் தோன்றின.

மற்றைய இருகூடங்களில் வெறும் பிரப்பம்பாய்களே விரித்திருந்தன. ஆனுல் இவ்விரண்டின் இடையில் பெரிய வட்டமான மேஜைகள் இரண்டு சில புஸ்தகங்களையும் கைப்பெட்டிகளையும் ஏற்றுநின்றன. சிறு அறைகளின் கதவுகள் சில திறந்தும் சில மூடியும் இருந்தன. ஒவ்வொன்றில் சிறு பிள்ளைகள் விளையாடியும், குழந்தைகள் மழலைச் சொல் மிழற்றியும், செவிலித்தாயர் தம்இளஞ்சிறுர்களுக்குத் தொட்டில் பாட்டோதியும், விளையாட்டுகள் கற்பித்தும், சிறு சண்டைகள் செய்யும் சிறுவரைச் சமயத்துக்குத் தகப் பலவிதமாகப் பயமுறுத்தியும் துதித்தும், காலங்கழித்தனர். வடபுறமுள்ள மூன்று அறைகளில், மத்தியிலுள்ளதின் கதவு தாழ்வாரச் சார்பாய்ச் சாத்தப்பட்டு, கீழறைப்பக்கம் திறந்து, அதனேடு இணைந்திருந்தது. மேற்புறமுள்ள பெரிய அறையில் ஒரு சுத்தமான வெண்ணிறப் படுக்கையொன்றும் சமய சம்பந்தமான சில புஸ்தகங்கள் கொண்ட அலமாரி யொன்றும் அமைத்திருந்தன. மற்றும் ஜன்னலோரத்தில் சில்லறைச் சாமான் மேற்

கொண்ட ஒரு சிறு மேஜையும், சோபாவொன்றும் இருந்தன. மத்தியிலுள்ள அறை முழுவதும் புஸ்தகங்கள் அடுக்கிய அலமாரிகள் நிறைந்திருந்தன. சில புஸ்தகங்கள் விரித்தனவாகவும், மற்றும் சில அஜாக்கிரதையாய் ஒன்றின்மேலொன்றுய்க் குவித்தும். மற்றும் சில அங்குள்ள பீடங்களில் எறிந்தும் கிடந்தன. இவ்வறை திறக்கும் கீழறைக் கண்ணே, இரண்டு அலமாரிகளில் பலவித சாஸ்திர புஸ்தகங்கள் நிரப்பி வைத்திருந்தன. இவ் அறைக்கண்ணேயும் சில சித்திரப் படங்கள் வைத்திருந்தன. ஆனுல் இவையாவும் இங்குள்ள புஸ்தகங்களின் மிகுதியால் தமக்குரிய கவனத்திற்குப் பாத்திரமாகவில்லை. வாசிப்பதற்கும் சாதாரணமாய் அறையை ஒளி செய்வதற்குமென அமைத்த பளிங்குவிளக்கு அவ்வறையிலுள்ள பல சாமான்களையும் தன்னுட்கொண்டது ஒப்பத் தோன்று நின்றது. இவ்வளவு தூரம் சிறப்பெய்திய அவ்விடம், காலத்தை அளக்கும் கடிகாரம் ஒன்றில்லாம லிருக்குமா? உற்று ஒருவிநாடி கேட்போர் சிந்தனையில் பழகிய மனத்தரேல், அவர், எவ்வளவு சீக்கிரம் ஒரு நிலையிலிருந்து பிற நிலைக்கும் அதிலிருந்து மற்றொன்றுக்கும் மாறிக்கொண்டே போகிருர் என்பது தெரிந்து அலைவர். இவ்வாறு பொருந்திய இவ் அறைக்கண்ணே ஜன்னலோரம் நின்று ஒரே பச்சையாய்த் தோன்றும் மாஞ் செடி கொடிகள் நிறைந்துள்ள தோட்டத்தே திரும்பி, ஆடம்பரம் சிறிதுமில்லாத ஆடையணிந்த ஓர் இளமகன் ஏதோ தனக்குள் சிந்தித்து வருந்துபவனுகக் காணப்பட்டான்.

இவனே நம் விஜயம். இன்று காலை இவ்வண்ணம் நின்று, தனக்கு எதிரிலுள்ள களங்கமில்லாப் பசுமரங்களையும் அவைகளில் குடிகொண்டு அவனை ஆனந்தப்படுத்துமாறு இசைகள் பல இயற்றும் பல வர்ணப் புட்கள் தம் சந்தோஷத் தோற்றத்தையும், மற்றுமிவைகள் யாவும் அவனிடத்து உண்டாக்கக்கூடிய மனோ சங்கற்பங்களையும் விஜயம் அநுபவித்துப் புளகமெய்தினனல்லன். வெளி விஷயங்கள் ஒன்றையுமே அவன் கவனிக்கவில்லை. எதிரில் ஷண்முகநாதருடைய தோட்டத்தினின்றும் தன் காதலன் எப்போது இச்சாளரத்தின் கண் வருவானென்று எதிர்ப்பார்த்து, ஏங்கியிருந்து கோரியபடி தோன்றியபோது, தன் மனோகரனைப் பார்த்து மனோபாவத்தில்

ஆழ்ந்துநிற்கும் காருண்யத்தையும் கூட இவன் இன்று நோக்க வில்லை. தூரத்தில் இருப்பதால் இவன் தன்னைப் பார்க்கிறான் என்றே நினைத்துக் காருண்யம் புன்சிரிப்புற்றுப் புளகமெய்தித் தன் வீடு புகுந்தாள். என்னே காதல் செயவல்லது? ஒரு பொருளோ ஒரு குணமோ இல்லை யெனினும், அதை ஒரு விநாடியில் உண்டுபண்ணி உவகையுறுவது அதற்கென அமைந்த இயற்கையோ?

"என்னே! என் தந்தைக்கும் காளிக்கும் நேர்ந்த சிநேகம் எத்தன்மையது? இவர்கள் இருவருக்கும் சிநேகம் எப்படி உண்டாயிருத்தல் கூடும்? இச்சிநேகம் எவ்வளவு காலம் நிலை பெறுகிறது? அந்தோ! காளி யார்? கடு மலைகளில் வசித்து இருட்டில் புலியெனக் கொள்ளையிடும் கொடிய பாதகன்; ஏழைகளை வருத்தி வஞ்சிக்கும் கொடிய நெஞ்சினன். எத்தனை சான்றோரை வருத்தினனோ இப்பாவி; இக்கள்வன், இக்கொடியன்; இப்பாதகன், இவ்விரக்கமில் அரக்கன்; ஏ ஏ, இச்சண்டாளன், இம்மூர்க்கத் தலைவன்:—இவன் எங்ஙனம் எனது தந்தையர்க்கு நேயமாயினன்? எனது தந்தை! சற்குண மகானுபாவர், சர்வகுணசீலர்; அடியார்களை ஆதரிக்கும் அமலன்; படிறு கடிந்த பரமன்; உலகத்தன்மையை அறிந்த உத்தமன்; இந்நில உலகத்தார்க்கு ஒரு திலகம்போன்றவன்; அந்தோ! இவர்கள்—இப்புருஷன்; இந்த ஜீவகாருண்ய சிந்தாமணி; இவர்கள் எவ்வண்ணம் அவனிடம் பற்றுக்கொண்டார்கள்?...உலகமென்பது இத்தன்மையதென நான் எண்ணினேனல்லேன்; இஃதென்னவுலகோ? நல்லதும் கெட்டதும் இங்ஙனம் ஒன்று சேர்ந்து உறவாக வாழ்ந்தால் உண்மையென்பதொன்றுண்டோ? ஆ ஆ! இது ஓர் உலகமே: நல்லாரில்லாப் பொல்லா உலகம் இதுவே. நான் இதுகாறும் இஃதறியேன். நான் எங்ஙனம் இதை அறிந்திருத்தல் கூடும்! ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு ஆகாது கறிக்கு ஆகாது: இது முற்றிலும் உண்மையே.." என இவ்வாறு தன்மனம் அடங்காது தன்னையும் அறியாது வாய் விட்டுரைத்த பின், விஜயம் தன் கைகளை நெருங்கப்பற்றி, ஏதோ ஒன்றை உற்றுப் பார்த்தான்: முகத்தில் சிந்தனையும் இல்லாது போயிற்று. அறிவு சிதறுண்டது. கண்கள் பூத்தன. உதடுகள் துடித்தன. உடம்பு வியர்த்தது. விஜயம் பார்த்தான்.

இவன் இப்படி இருக்க, இன்னும் கால்மணிக்கெல்லாம் வேலைக்காரன் ஒருவன் வந்து ஒரு கடிதம் கொடுத்துப்போயினான். சந்திரவர்மா எழுத்தென அறிந்ததும் தன் மனத்துள் மாறுபட்டெழும் எண்ணங்களை மறக்க முயன்றான். தனது ஆருயிர் நண்பன் வார்த்தையைப் படித்து ஆநந்திக்கலாம் என எண்ணினன். பெரு விசனத்தில் ஆழ்ந்துள்ளோர் எவரும் யாதாயினும் ஒன்று மிகச்சிறு பொருளேயாயினும் அவ் விசனத்தின் வலியை மாற்றும் ஆற்றல் உள்ளதாயின், அதை மிக்க விரைவோடு பற்றுவர். இயற்கை தன்னைக் காப்பாற்றிக் கொள்ள எடுக்கும் முயற்சி எண்ணில. வர்மாவினிடத்திலிருந்து அவர் சென்னைக்குப் போனநாள் முதல் வேறு கடிதம் ஒன்றும் வந்ததில்லை யாதலால், இக்கடிதத்தைக் கண்டதும் இவ்வளவு மனக்குழப்ப மத்தியிலும் விஜயத்திற்கு அடங்கா மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனால் பெருமகிழ்ச்சி அடைந்தவர்கள் எதிர்த்தாக்காக, சந்தோஷத்தினின்றும் சிறிது விலக இஷ்டப்படுவதுபோல், அவனும் அக்கடிதத்தைப் பிரிக்காமலே சில நிமிஷம் கையில் வைத்திருந்தனன். அவன் உடனே பிரித்து அதை வாசித்தேகுகையில், எவரேனும் அவன் முகத்தைப் பார்த்தனரோ? அவன் முகம் அப்போது அடிக்கடி மாறினதை நீவிர் எங்ஙனம் அறிவீர்? அந்தோ! மனிதனின் வீண் எண்ணமென்ன! மனிதன் இவ்வளவு துன்பமுறுவது எதற்காகவோ? உண்மையிலேயே, கடவுளர் கையகப்பட்ட பம்பரங்களா நாம்? அல்லது நம்மையே நாம் அறியாது நமக்கே கேடு விளைக்கும் கட்குடியரோ நாம்? நமது துன்பங்களில் கடவுளர்க்கு ஒரு பெரு மகிழ்ச்சியோ?

கோடைகாலத்துக் கானலினால் தாகவேட்கையுற்ற வழிப்போக்கன் ஒருவன், ஒரு பளிங்கு கிண்ணத்தில் நீர் நிறைய இருப்பதைப் பார்த்து ஆநந்தமெய்தி, அவாவோடு அதனை எடுத்துக் குடித்தபிறகு, அது விஷங்கலந்த கொடிய திராவகமெனக் கண்டால், அவன் முகம் எப்படி மாறும்? நெடுநாள் தேசயாத்திரை சென்ற தன் நாயகன் வந்தனன் என்று மகிழ்ச்சியுற்ற மங்கை, வந்தவன் தன் கணவன் உருக்கொண்ட கள்வன் என அறிந்தால் எங்ஙனம்? கையில் எடுத்து முத்தம் ஈந்த மலர் நாகமாயின் என்? இவையாவும் ஒருங்கு சேர்ந்தால் என விஜயத்தின் முகம் இரண்டு நிமிஷத்தில் வாடி உலர்ந்தது. இக்கடி

தம், காட்டுமைலூர்க் காளிகூட்டமாகிய கள்வரனைவரையும் ஒருங்கே பிடித்து விசாரணை செய்வதற்கு வேண்டிய முயற்சி செய்ய, சந்திரவர்மா சென்னையில் இன்னும் சிறிதுகாலம் இருக்கவேண்டும் என அறிவித்தது. மேலும் இவ்விஷயம் அதிக சீக்கிரத்தில் முடிவதற்குத் தக்கவாறு தான் அதிக பிரயாசை எடுத்திருப்பதாகவும், போலீசு இலாகாத் தலைவர்கள் தன்னுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, அதற்கென்றே ஒரு நூற்றுவரை இக்காளரி மலைச்சார்பில் சஞ்சரிக்க விடுவதாக வாக்களித்தனர் என்றும் தெரிவித்தது.

மற்றொன்று முக்கியமானது; இவ்விஷயத்தை வர்மா மணிமங்கலம் வரும்வரையில் ஊக்கமெடுத்துக் கண்டுபிடிக்கத் தனக்குப் பதிலாக விஜயத்தை நியமித்திருக்கிறா ரென்றும், இதேமாதிரி இவனுக்குப் பெரிய ஜமீனிடமிருந்து உத்தரவு வருமென்றும், இவ்விஷயம் முடியும் வரையில் இவர்களைத் தவிர வேறொருவரும் இதை அறியக்கூடா தென்றும், இவ் விஷயமாகச் சந்திரவர்மாவும் விஜயமும் அதிக ஊக்கமெடுத்து முடிப்பது எவ்வளவு இன்றியமையாததென்றும், ஜமீன் குடிகளுக்கும் மற்றவருக்கும் இது எவ்வளவு துன்பத்தைக் குறைக்குமென்றும், இன்னும் அதன் நன்மைகளை ஒருங்கே கூறி, காளியை மாத்திரமன்றி அவனைச் சேர்ந்தோர் எங்கிருப்பினும் பிடிப்பது அவசியத்தினும் அவசியமென்றும் பெரிய கடிதம் எழுதியிருந்தார் சந்திர வர்மா.

இதைப் படித்ததும் சற்றுநேரம் பதுமையைப்போல் வாளா இருந்தனன் விஜயம். இதுவரையில், தன் தந்தையை, காளியைப்பற்றி நெருங்கிக் கேட்காதிருந்தது தான் செய்த பெரும பிசகு என நினைத்தான். தான் காளியைச் சந்தித்துப் பேசியது முதலே இதைப்பற்றி விரிவாய் அறிய விரும்பினனேனும், தன் தந்தையிடம் தனக்குள்ள பெரிய மரியாதையினாலும், தனக்கே இயல்பாயுள்ள அடக்கத்தாலும் சிந்தனை செய்யும் தன்மையாலும், காருண்யத்திற்கும் அவளைச் சார்ந்தார்க்கும் வரும் இடையூறு இக்காளியால் நிவர்த்திக்கப்படலாம் என்பதாலும், முன் ஆள் தெரியாமல் வந்த கடிதத்தில் குறித்த நாள் இன்னும் நெருங்கவில்லை ஆகையாலும், காளியைப்பற்றித் தான் சிந்தித்தனனேயன்றித் தன் தந்தையைக் கேட்டு உண்மையான சங்கதியை இதுகாறும் உணர்ந்தவனல்

லன். ஆனால் இன்று வந்த கடிதம், காளியையும் அவன் கூட்டத்தையும் அவனைச்சேர்ந்தாரையும் ஒருங்கே பிடித்து வெளிப்படையாக விசாரணை செய்யப்படும் என்பதை அறிவிக்கவே, விஜயம் தன் உண்மை நிலைமையை அறிந்தான். இவ்விதமாகத் தனக்குக் கொடுத்த வேலையை ஏற்றுக்கொள்ளுவ தெப்படி, இக்கடிதத்திற்கு எப்படி பதில் எழுதுவது, என்று ஒன்றும் தோற்றாது திகைத்தான் விஜயம்.

"நான் இக்கள்வரைப் பிடிக்க உத்தரவு பெற்றிருக்கிறேன். இக்கள்வரில் பெரியகள்வன் என்னிடத்தே இருக்கிறான். நானே இதிலொருவன். இதுவே சரி; கள்வனும் கள்வனைப் பிடிப்பவனும் ஒரே மனிதன். நானே." என்றான் விருப்பென்பது பட்டு வெறுப்பாய் மாறின விஜயம்.

உடனே நிற்கும் வலியில்லானாய்ப் படுக்கையில் சாய்ந்தான். அப்படியிருக்க முடியவில்லை. எழுந்தான். வந்த கடிதத்தைக் கையில் எடுத்தான். எடுத்துத் தன் தந்தையின் அறைக்குச் சென்றான். அவர் அங்கில்லை யெனத் தெரிந்து தன் அறைக்குத் திரும்பினன். திரும்பியவன் மறுபடியும் அவ்வறையுள் சென்று அங்குள்ள கடிதம் முதலியனவற்றைப் பார்க்கத் தொடங்கினன். இவ்வாறு தன் தந்தையிடஞ் சந்தேகம் ஒரு பக்கமும் மரியாதை ஒரு பக்கமும் வகித்து வருந்தும் இளமகனை இங்குவிட்டுச் செல்வோமாக.

## கசு. சதியோசனை.

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவதன்று, இவ்வுலகத் தியற்கை.—இடைக்குன்றூர் கிழார்.

விஜயம் இவ்வாறு வருந்தும் இக்காலையில் இதே வேளையில் அரண்மனைத் தெருவில் தென் வரிசையில் மேற்பக்கத்துள்ள காரியதரிசியின் பெரிய புது வீட்டினுள் ஓர் உட்புறத்து அறையின்கண் காரியதரிசியும் சுந்தர நாதமும் ஏதோ இரகசியமாய்ப் பேசிக்கொண்டிருந்தனர். காரியதரிசியின் வீடு புதிதாய் அமைத்த ஓர் செங்கல் கட்டடம். இரண்டு மாடிகளை உடைய இவ்வீடு முன்பக்கத்தில் எண்கோண வடிவமாக அமைத்து, பெரிய நகரங்களினின்றும் வரவழைத்து அவ்வூர்க்குப் புதிதாய பலவஸ்துக்களால் அலங்கரித்திருந்தது. இவை

கள் சொந்தக்காரரின் செல்வ மிகுதியைத் தக்கவாறு காண் பித்தனவேயொழிய ஆடம்பரத்தின் அரிய குறிகள் அல்ல. வீட்டுக்கு உரியாரின் நலத்தையும் பெருமையையும் குறித்தே இவைகளெல்லாம் அவ் இல்லின்கண் ஒருங்கு சேர்க்கப்பட் டனபோலும். முன்பக்கத்துள்ள இவ் எண்கோண மாடியிற் ருன் காரியதரிசியார் தம் உத்தியோகத்தைச் செலுத்துவது. வெளிவாயிற்புறத்து உள்ள ஜமீன் பட்டயம் அணிந்த சேவகர் களைத் தாண்டி உட்செல்வோமாகில் சில ஆட்கள் இங்குமங் கும் போய்க்கொண்டிருக்கக் காணலாம். சற்று உட்சென்ற தும் அநேக ஜமீன் உத்தியோகஸ்தர் காரியதரிசியைப் பார்க்கக் காத்துக்கொண்டிருக்கும் ஒரு பெருங்கூடத்தைப் பார்க்கலாம். இவ் உத்தியோகஸ்தர்கள் அவ்வீட்டு வேலைக்காரர்களோடு பேசுவதைச் சற்றுக் கவனித்துப் பார்ப்போம்.

"ஏ இங்கே வாப்பா, எஜமான் இருக்கிருரா?"

"என்ன எசமானு?—முருகா! அந்த நாக்காலி எடுத்து உள்ளபோடு, எசமான் கோவிச்சிக்குவார். எங்கடாபோற நீ?"

"ஏன் அப்பா! அவர் உள்ளே இல்லையோ?"

"என்ன சொல்றீங்க? உள்ளேயா? இதோ இருங்க வந்துட் டேன். டே முத்து! கடிதாசி கொடுத்துட்டயா? கொடுத்தானு, இதை சமீனுக்குக் கொண்டுபோ. சல்தி." என்று சொல் லிக்கொண்டிருக்கும்போது மற்ருெருவர் எழுந்து அவனரு கில்போய் அவனைத் தொட முயன்றவண்ணமாய்,

"என்னப்பா! காரியதரிசியார் மாடிமேல் இருக்கிருரா? இருந்தால் அவரிடம் கொஞ்சம் சொல்றையா?" என்ருர்.

"என்ன சொல்றதுங்க? அடோராமா! அவர் என்னமோ கேட்டா. அவருக்கேதானும் சொல்லு." என்று திரும்பிப் பார்க்காமல் அந்தச் சேவகன் உட்சென்ருன்.

இந்தராமன் வந்து "என்னுங்க? எசமான் உசர இருக்கி ருங்க. ஆனு இப்போ ஒருத்தரையும் பார்க்கமாட்டாங்கோ. நீங்க பகலைக்கு வாங்களேன்." என்ருன்.

பிறகு வெளியேபோகிற முருகனைப் பார்த்து "முருகா சில்லறக்காசி ஒங்கிட்ட இல்லே? என்னுடா! காலமே புடிச்சு வெத்திலே பாக்கு இல்லே. வாய்வறண்டு போவுதுடா. நல் லாப்பார்ரா" என்ருன் ராமன்.

இந்தப்பேச்சின் அர்த்தம் அங்கு உட்கார்ந்திருக்கும் உத்தியோகஸ்தருக்குச் செவ்வையாய்த் தெரியும் ஆதலால் அவர்களில் ஒருவர் இவனிடம் சென்று பேசாது கையில் காசை நீட்டினர். செம்பும் வெள்ளியுமாக ஐந்தணு இருந் தது. 'வெத்திலேக்குத் தான், இம்மாங் காசு என்னத்துக் கிங்க.' என்று சொல்லிக்கொண்டே பணத்தை வாங்கிக் கொண் டான் இராமன். இதை வாங்க எவ்வளவு அவசரமாயும், எவ்வளவு பழக்கமுற்றதாயும், எவ்வளவு சுலபமாயும் இராம னின் இரண்டு உள்ளங்கைகளும் நீண்டன! பணங்கொடுத்து விட்டோம்; இனி எஜமானனைச் சீக்கிரம் பார்க்கலாமென்று நினைத்த இவருக்கு 'நான் இதோ போய்ச் சொல்றங்க. ஐயா! தங்களுக்கும் தடையா? உங்கமேலே எசமானுக்கு ரொம்ப விருப்பமில்லே?" என்று வெகுவாய்த் தெரிந்தவன் போல் உள் ளே போய்த் தன் காரியத்தைப் பார்த்தான் இராமன்.

இச்சிறு பேச்சில் ஏழைச் சேவகர் எப்படிக் காசு சம்பா திக்கிறர் என்பது வெளிப்படையாய் இருப்பினும், மனித னுக்கு இயல்பாலேயோ அல்லது கல்வியினுலேயோ அமைந்த கண்ணியமும், பெருந்தன்மையும் இச்சேவகர்களிடத்திலும் முற்றும் அவிந்துவிட வில்லையென்று அறியலாம். சேவகன் இலவசமாய்க் காசுகேட்கத் தன் மனத்தே, தன்னிடம் சங் கை யுற்றன்றே அவரை நேராய்க் காசு வேண்டுமென்று கேட்க மனந்துணியா திருந்தனன்? தீயவழியில் மிகவும் பழ கியதனுல் மனிதனின் அரிய குணங்கள் மறைந்திருப்பினும், அவை முற்றும் அழிந்து போகா. அவை எவ்வளவு உள் அழுந்தியிருப்பினும் இருக்கின்றனவே யன்றி, இல்லாதொழிய வில்லை.

இக்கூடத்தினின்று உட்சென்று அங்கிருந்து மேல்மெத் தைக்கேகும் வயிரப் பலகைகளாலாய படிகள் மீது நடந்து, சித்திரம் பொறித்த வரம்புகளைக் கண்ணேக்கி ஆனந்தித்து மேலடைந்தால், மத்தியில் ஒரு பெரிய அழகிய கூடத்தையும், அதன் நாற்புறமும் நான்கு முக்கோண அறைகளையும் காண லாம். இக்கூடம் வெகு சிங்காரமானது. இதன்கண்ணேயே மனதிற்கு இன்பந்தரும் அழகமைந்த சித்திரப்படங்களும், செப்புச்சிலைகளும், சலவைக்கல்லில் செதுக்கிய பதுமைக ளும், பளபளெனும் மேற்புறங்களையுடைய பல பெரிய புஸ்த

கங்கள் வரிசை வரிசையாய்க் கோணலின்றி அடுக்கப்பெற்ற அலமாரி நான்கும், நுண்ணிய சித்திரவேலை அமைந்த பற்பல சோபா முதலிய பீடங்களும், ஓர் மனோரம்மியமான வட்ட மேஜையும் தம்மைப் பார்ப்பவர் கண்களைப் பறித்தன. ஒவ்வோர் ஆதனத்தின் மீதும் நன்கு பதனிட்ட மான்தோல்களும் புலித்தோல்களும் இட்டிருந்தன. மணிமங்கலத்தில் காரிய தரிசி வீட்டில்தான் ஊர்க்கெல்லாம் பெரிய கடிகாரம் ஒன்றிருக்கிறது. அதன் நடை நமது காரியதரிசியின் நடைக்குப் பின் வாங்காது. கற்றரை தெரியாது பரப்பிய கரிய கம்பளத்தின் மீது செல்வது, கொழுத்த பச்சைப்புல் அடர்ந்து படிந்த மெதுவான நிலத்தில் நடப்பதையே போன்றது.

அங்குள்ள எட்டுப் பெரிய கண்ணாடி சாளரத்தின் வழியாய் எப்புறம் நோக்கினும் பச்சென இலையும் கொடியுமே தோன்றின. மேற்புறமட்டில் கண்ணுக்கெட்டினதூரம் வரையில் பெருமலையும் மரங்களும் வீடெனப்படுத்த பாறைகளும் தோன்றின. இப்போது மூன்று அறைகள் சாத்தியிருந்தன. திறந்திருந்த மற்றொன்றில் தான் கள்ளம்பேசும் இருவர் இருந்தனர். இவர்களுக்குத் தெரியாது உட்சென்று இவ்வளவு காலையிலும் என்ன பேசுகிறார்கள் என்பதை அறிவோம்.

காரியதரிசி தன் கொழுத்த முகத்தைச் சுருக்கி, புருவத்தைச் சேர நெறித்து, தனக்கெதிரில் உட்கார்ந்திருக்கும் சுந்தர நாதத்தைப் பார்த்து, "அப்புறம் நடந்ததைச் சொல்லும். இதேது உமக்கு நடந்ததைச்சொல்வது இவ்வளவு வருத்தமாயிருக்கிறது!" என்றார்.

"வருத்தம் ஒன்றுமில்லை. நான் அங்கே அவர்கள் அறியாமல்போனவுடனே அவர்களுக்கு உண்டான அச்சத்திற்கு ஓர் அளவில்லை. நானும் அக்கடிதம் நம்முடையதோவென அஞ்சினேன்." என்றான் சுந்தரநாதம்.

"என்னங்காணும் அளவிருக்கிறது அளவில்லையென்று நீட்டுகிறீர். மதுரைவழக்கம் இன்னும் உம்மை விட்டபாடில்லை." என்று சுந்தரநாதத்தைப் பரிகசிக்கும் சந்தோஷத்தில் இவரும் நீட்ட ஆரம்பித்தார்.

"நான் அவர்களிடம் சென்றதும் அவர்கள் கையிலிருந்த கடிதத்தை மறைத்தனர். நான் ஐயமுற்று, உண்மை தெரிவதற்காக அதென்ன மறைக்கிறீர்கள் என்றேன். அவர்கள்

"ஒன்றுமில்லை வெறுங்கடிதம் என்றனர்." எனவும், காரியதரிசி "நீரும் வெறுங்கடிதம் என்றே வந்து விட்டீரோ?" என்றார் தம் வாயை இன்னும் அகற்றி. "நான் வெறுங்கடிதம் என்று வரவில்லை. 'வெறுங்கடிதமா யிருப்பில் இத்தனை மறைப் பேன்?' என்று ருக்மணியைப் பார்த்துச் சொன்னேன். இதற் குள் கோகிலத்தரசிக்கு வெட்கத்தினாலும் அச்சத்தினாலும் கண்ணீர் ததும்பிற்று. ஆனால் நான் ருக்மணி அஞ்சுவதைக் கண்டு சிரிக்க ஆரம்பித்தேன். எனக்கு அதைவிட்டு வருதல் நலமெனத் தெரிந்தும் கடிதம் இன்னதென அறிந்து செல்வது அநுகூலமென்று அவ்விடமே நின்று, ருக்மணியைப் பார்த்து விளையாட்டாய் 'இதென்ன திருட்டோ?' என்றேன்." என் றான்.

"ஆஹா! ஹா—ஹா—ஹா!! அதுவே சரி." என்றார் சிரிக்க முடியாது தவிக்கும் காரியதரிசி. "இதைச் சொன்ன தும் அவர்கள் திடுக்கிட்டவராய் ஒருவரை ஒருவர் பார்த்து வருந்தி, 'என்ன?' என்று அரண்மனை முத்திரையைக் காண் பித்து 'இது யார் எழுத்துப் பாரும்.' என்று வெகு கோபமாய் என்னிடம் மோதினள் ருக்மணி. நான் இதுதான் சமய மென்று, 'ஆம் இது இளைய ஜமீன் எழுத்துமாதிரி இருக்கி றது.' என்று சொல்லி அதிகமும் யோசிப்பவன்போல், மங்கிய வெளிச்சத்தில் தோன்றிய பெரியகோடிட்ட வார்த் தைகளை வாசித்தறிந்தேன். வெளிச்சமிருப்பில் இன்னும் கொஞ்சம் பார்த்திருப்பேன். ஆனால் அவசியமில்லை. இது வே முக்கியமானது. பிறகு, 'இளைய ஜமீனது தான்.' என்று அவர்களுக்குத் தேற்றம் வரச்சொல்லி வந்து சேர்ந்தேன்." என்று முடித்தான் சுந்தரம்.

"பின் ஏன் நேற்றே வரவில்லை? போகட்டும், என்ன வாசித்தீர் அதைச் சொல்லும் முதலில்." என்றார் கள்ளத்தன மாய் நம் காரியதரிசி.

"நேற்று இரவு பத்துமணிக்கு வந்தேன். இங்கே வேலைக் காரன் தாங்கள் படுக்கைக்குப் போய்விட்டதாகச்சொன்னான். அதற்குப் பின்னரே நான் போய்ப் படுத்துக்கொண்டேன்." என்றார் அவர் தம் உதவி கர்த்தா.

"சரி! என்ன படித்தீர்? அதல்லவோ எனக்கு வேண்டும்." என்றார் அக்காரியதரிசி. கொஞ்சம் வெறுத்தவர்போலும் அவ

சரப்பட்டவர்போலும் காணப்பட்டார். இதுபோன்ற சிறு விஷயங்கள் தம் பெரிய முயற்காதிற்கு மிகச்சிறிதென எண்ணினர்போலும்.

"நல்ல கறுப்பு இங்கி—ஆமாம். இல்லாவிட்டால் முடிந்திருக்காது—நல்ல கறுப்பு இங்கியில் பெரிய எழுத்தால் 'காட்டுமயிலூர்க் காளியை அவன் கூட்டத்தோடு ஒருங்கே பிடிப்பதற்குரிய முயற்சியைச் செய்கிறேன். நீங்கள் மகாதேவர் குமாரன் விஜயத்திற்கு இதைப்பற்றிய அதிகாரத்தை ஒப்புவிக்க வேண்டுகிறேன்'. என்று இவ்வாறு எழுதியிருந்ததை அரைநொடியில் அறிந்தேன். இதைப்பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?" என்ருன் காரியதரிசியின் கையிலகப்பட்ட மதுரைச்சுந்தரன்.

காரியதரிசியின் கறுத்த முகம் இன்னும் கறுத்தது. பெரிய மீசைக்கம்பிகள் துடித்தன எனலாம். இவர்க்கேஞே இவ்வளவு படபடப்பு? காரியதரிசி உடனே "இதெல்லாம் நேற்று முளைத்த பையன் வேலே. எல்லாம் புதிதாய்ப் பண்ணவேண்டுமாம் இவனுக்கு! என்ன! விஜயம்! அந்தப் பையன் இவனுக்கு மந்திரியோ? இதென்ன முட்டிக்காணம் இப்பயல்கள் போடுவது! திருடருக்கு என்ன வந்தது இப்போது? ஆமாம் இவனிடமல்லவோ காளி அகப்படுவான்! வர்மா சென்னையிலும் விஜயன் மணிமங்கலத்திலும் எப்படி அதிகாரம் செலுத்துவார்கள்! சிச்சி! இது விளையாட்டு." என்று மொழிந்து, இதனல் தனக்கு எவ்வளவு கெடுதி சம்பவிக்கக் கூடுமென்று யோசித்தார். மறுபடியும் சற்றுப் பொறுத்து, "காட்டுமையிலூர்க்காளி நிரம்ப அகப்படுவானே! இவர்களிடமும் இவர்கள் கொண்டுவரும் ஆட்களிடமும் அவன் அகப்படமாட்டானு! இன்னெருத்தன்கூட அகப்படுவான்! போகட்டும். இதில் தலை உடைந்தால் வர்மா ஜமீனைப் புதிதாக்கும் பைத்தியம் அந்தத் தலையோடு போய்விடும். ஆனல் ஒரு சங்கதி." என்று மறுபடியும் மேலே பேச ஆரம்பித்தார்.

"நம் கடிதம் ஷண்முகநாதரிடம் போனபிறகு தான் இவர்களுக்குக் காளியிடம் கோபம் வந்திருக்கிறது. எவ்வளவு அச்சப்படுகிருர்கள் பார்த்ீர்களா? ஒரு கடிதம் கெட்ட கேடு." என்று தன் சாமர்த்தியத்தை மெச்சிக்கொண்டான் சுந்தரநாதம்.

"ஆமாம்! அது தெரியாதா!" என்ருர் காரியதரிசி. இவர் இவ்விதம் இதுவரையில் நினைக்கவேயில்லை. அவருக்கு ஏதோ வேறு விஷயத்தைப்பற்றி இவர்கள் செய்வது அபாயமானது எனப்பட்டது. ஆனல் சுந்தரநாதம் தம்மைவிடச் சாமர்த்தியவான் என்று சந்தேகிக்கவும் இடந்தரார் நம் காரியதரிசியார்.

"ஆகையால் அவர்களுக்கு இக்கடிதத்தின் உண்மை தெரியவே இல்லையே?" என்ருன் சுந்தரநாதம்.

இப்போது இவருக்குக் கொஞ்சம் சந்தோஷம்: தான் மேற்கொண்ட காரியம் முடிவெய்தும்; ஆட்சேபம் இல்லை என்று நினைத்தார். "சரி சரி! பிடிக்கிறவனெல்லாம் பிடிக்கட்டும். இந்தச் சமயம் சரியாய்ச் செய்ய வேண்டியது தான். ஓ ஆமாம் உமக்குத்தான் தெரியுமே.' என்று மறைக்கிருர் பெரியவர்.

சுந்தரநாதம் "ஆம்" என்ருன். இந்த ஒருவருஷம் ஆம் என்பதுதான் இவன் தொழில். இவன் வேறே என்ன சொல்வான்?

"இந்தப் பசகளுக்குக் காலம் குறுகல்தான்" என்ருர் இன்னும் குறுகிய காலமே உடைய காரியதரிசி.

காரியதரிசி அடிக்கடி சிறு பையன்கள் என்றும், நேற்று உதித்தவரென்றும் சொல்வது சுந்தரநாதத்திற்கும் படும். ஆகையால் இப்போது அவனுக்குச் சிறு வருத்தம் உண்டாகாமலிருக்கவில்லை. ஆயினும் "நம் சங்கதி எதுவரையில் வந்திருக்கிறது?" என்று தனது குருவைக் கேட்டுப் பதிலை எதிர் பார்த்தான்.

"அது விரைவில் முடிந்து கொண்டிருக்கிறது. நாம் குறிப்பித்த நாளன்றைக்குப் பார்த்துக்கொள்ளலாம். மலைக்கனுப்பிய ஆட்கள் இன்றைக்கே திரும்புவர். ஷண்முகநாதர் இப்போது எப்படியிருக்கிருர்? ஹா-ஹா-ஹா" என்று காரியதரிசி சிரித்தார். எனினும் சுந்தரநாதத்தைவிட வேருெருவர் அங்கிருக்கில் காரியதரிசியின் ஹா—ஹா என்பதிலேயே வருத்தம் உள்ளடங்கி யிருக்கிறது என்பதைக் காணலாம்.

ஷண்முகநாதரைப் பயப்படுத்துவதற்கும் நங்கை காருண்யத்தைச் சிநேகம் செய்வதற்கும் வேறு வழிகளும் இருத்தல் கூடுமென்று நினைத்தனனேனும், இதுவும் நல்ல வழியே

என்றான் சுந்தரநாதம். சுந்தரநாதத்தின் ஆழ்ந்த வஞ்சமில்லா மனத்திற்கு இவ்வழி சரியல்லவென்று தோன்றாது தோன்றி யும், காரியதரிசியின் ஒரு வருஷப் பழக்கம் ‘இதுவும் நல்ல வழியே’ என்று சொல்லும்படி செய்தது. ஆனால் நம் காரிய தரிசியின் கரியமனம் எதனால் இத்தன்மை வாய்ந்ததெனின், அதற்குப் பதில் சொல்வது அருமையே. அம்மனமும் இம்மா திரியான பழக்கங்களால் தான் தன் இயற்கைக் குணத்தை இழந்திருத்தல் கூடும். ஆனால் பிறப்பு முதற்கொண்டே தோற்றும் இழிவான குணங்கள் இயற்கையிலேயே அமைந் திருக்கின்றன என்பதைவிட வேறு நாம் என்ன சொல்ல லாம்? எத்தனையோ விஷயங்கள் நம்மால் காரணம் குறிக்க முடியாத விதமாய் நிலவுகின்றன. எவ்வித அநுபவமும் பொருள்களின் தன்மையை ஏறக்குறைய சரியாய் அறிய உதவுமே தவிர, அவைகளின் மூலகாரணத்தைத் தெரிவிக் காது. ஒரு பொருளைப்பற்றி ஏன் எனக் கேட்க ஆரம்பித் தால் அதற்கு முடிவிலதுபோலும். ஆகையின் வஞ்சத் தின் மூலத்தை வஞ்சமென்பது அன்றி வேறென்னவென்று கூறலாம்?

## கரு. இரவு.

நள்ளென் றன்றே யாமம்; சொல்அவிந்
தினிதடங் கினரே மாக்கள்; முனிவின்று
நனந்தலை உலகமுந் துஞ்சும்;
ஓர் யான் மன்ற துஞ்சா தேனே.—பதுமனார்.

விஜயம் தனது தந்தையின் அறைக்கண்ணே பரிசோதனை செய்து ஒன்றும் தெரியாததால், அன்று முழுவதும் தன் அறையிலேயே தங்கி அவ்விஷயத்தைப்பற்றி விடாது சிந்தித் தனன். இதற்கிடையில் பெரிய ஜமீனிடமிருந்து தனக்கு மேற்சொன்ன உத்தரவும் வந்தது. ஆனால் இதைப்பற்றி அதிகம் நினைத்தானல்லன். தான் சந்திரவர்மா கேட்டுக் கொண்டதை எவ்விதத்திலும் மறுக்கக்கூடாதென்றும், மறுப் பது வாய்மைக்கு விரோதமென்றும் தீர்மானித்தான். வரவர, தனது தகப்பனுருக்கும் காளிக்கும் உள்ள சம்பந்தத்தின் தன்மையை அறிவது அத்தியாவசியம் என்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால் தனது தந்தை இவ்விஷயத்தில் சம்பந்

தப்பட்டிருப்பது, புதிதாகக்கொடுத்த வேலையைத் தான் ஏற்றுக்கொள்வதற்கு எவ்வளவும் தடையாகாது, தடையாக இருக்கக்கூடாது என எண்ணினன். மேலும், தனது தந்தையிடத்துள்ள நம்பிக்கை முன்வந்த போது, அவர் இதற்கு மறுத்துக் கூறும் படியான அவ்வளவு பற்று ஒன்றும் அவனிடம் வைத்திரார், என்றே நினைத்தான். எது எப்படியாயினும் உண்மையை அறிந்து அதற்குத் தக நடப்பதன்றோ நெறி? ஆகையால் இப்போது வந்த வேலையைத் தகப்பனுருக்கு அறிவிக்காமலே ஏற்றுக்கொண்டான். எனினும், அவன் மனம் இன்னும் பெருஞ்சண்டையிட்ட இருதாத்தினர் களமே போல் இருந்தது.

அன்றிரவு வீட்டுளார் யாவரும் உண்டு அவரவர் படுக்கை அறையில் சென்று தூங்கியபின்னும் விஜயம் அறையில் விளக்கெரிந்தது. சுவரில் பதித்த கடிகாரம் மணி பன்னிரண்டெனக் காட்டியது. ஊரெங்கும் ஓசை அற்றிருந்தது. பின்தோட்டங்களில் மரங்களின் மீதிருந்து கண் விழித்த ஓரோவோர் காகம் ஒற்றைக்குரலிட்டு மறுபடியும் தூக்கத்தில் ஆழ்ந்தது. மெல்லென வீசும் காற்றும், அடர்ந்த கொடிகள் படர்ந்த மரக்கிளைகளில் அகப்பட்டுத் திக்குமுக்காடிப் பெருமூச்சு விட்டது. விடாது ஒல்லென ஒலிக்கும் மாக்கோழியும் வாய் பொத்திற்று. செடிகளின் பழுத்த இலை ஒன்று கீழ் நகர்ந்தாலும் பேரோசை உண்டாயது. அகண்ட இருட்டு ஆகாயத்தை மூடிற்று. நட்சத்திரங்களும் இவ் அரங்கத்தினின்றும் ஓடி மறைவனபோன்றன. புலியும் புலையருமின்றி மற்றியாவரே இவ்வேளை உயிர் பெற்றுளார்? உலகமுழுவதுமே மௌனயோகத்தில் ஆழ்ந்தது.

மனிதர், விலங்கு, பறவை யாவரும் யாவும் மெய்ம் மறந்து நித்திரைசெய்யும் இந்நிசியில் விஜயம் மாத்திரம் கண் இமைத்தானல்லன். தூக்கம் அவனைவிட்டே நீங்கியதுபோலிருந்தது. சிந்தனை, கவலை, சிறுபயம் என்பன குடிகொள்ளும் இருப்பிடமாயது அவனது முகம். அவனது நீண்டு விசாலித்த கண்கள் சற்றுச் சிறுத்து உள்மறைந்தனவாகத் தோற்றின. அப்படுக்கையின் ஓரத்தில் ஏதோ ஒன்றைப் பற்றியும் பற்ருது நிற்கும் அவனை இப்போது பார்த்தவர் ஒரு மெலிந்த வெண்ணிற ஆவியெனவே கருதுவர். எனி

னும், ஒரு மணியைக்குறிக்கும் நெடிய ஓசை ஒன்று அவன் காதிற்படவே அவன் எழுந்து நிமிர்ந்து, கடிதங்களையும் மின் மினியென மிளிரும் ஒரு சிறு விளக்கையும் கையிலேந்தி, தன் அறையிலிருந்து மெல்லெனக் கதவைத்திறந்து புத்தக அலமாரிகளிருக்கும் மத்திய அறைக்குவந்து, அதன் மேற்புறச்சார்பாயுள்ள சுவரில் கண்ணுக்குத் தெரியாது அமைத்திருந்த கதவைத் தான் கொண்டுவந்த திறவுகோலிட்டு மெல்லெனத் திறந்தான். திறந்த அவ்வழிச்சென்று தன் தந்தை துயிலும் அறைக்குள் பிரவேசித்தான். ஆங்கு அவியும் தறுவாயிலிருக்கிற ஒரு சிறு விளக்கே இருந்தது. மகாதேவர் பலகணி அருகிலுள்ள தம் படுக்கையில் துயின்று கொண்டிருந்தனர்.

விஜயம் தான் கொண்டுவந்த விளக்கை மேஜை மீது இருத்தித் தனது தந்தை அருகில்போய்க் குனிந்து "அப்பா-அப்பா!" என மெதுவாய் எழுப்பினன். எழாததும் சற்றே நிமிர்ந்து நினைத்தான். மங்கிய ஒளியிலும் தனது தந்தையின் முகம் கருணை பொழிவதே போல் தோன்றிற்று. 'இம்மாசற்ற முகத்திலுந் தீமையுளதோ!' என்று நினைக்க அவன் கண்களில் நீர் ததும்பிற்று. மறுபடியும் நெருங்கித் தன் தந்தையின் முகநோக்கிக் குனிந்து "அப்பா—அப்பா—அப்பா!" என்று அசைவுள்ள குரலோடு எழுப்பினன். கனவிலெழும் ஓசையேபோல் இஃது மகாதேவர் காதில் பட்டது. உடனே தூக்கமென்னும் மந்திரவாதியின் தளை அவிழ்ந்தது. பின்னும் அரை நொடியில் மகாதேவர் தம் படுக்கையில் எழுந்துட்கார்ந்தார். முதலில் உண்டாய அச்சமும் ஆச்சரியமும் நீங்கி, வந்தவன் விஜயம் என்றறிந்த வுடனே "விஜயம்! என் கண்மணி!!" என விஜயத்தைத் தன் மார்போடணைத்துத் தழுவினர். பிறகு விஜயத்தைத் தன் அருகேபடுக்கையில் வைத்துக்கொண்டனர். விஜயத்திற்கு இப்போது பேச நா எழவில்லை. மகாதேவரும் ஒன்றும் பேசார். இது விஜயத்திற்கு இன்னும் வியப்பை விளைத்தது. 'அப்பா என் வரவை எதிர்பார்த்தனர் போலும்!' என்று எண்ணினன் விஜயம். பத்து நிமிஷம் இருவரும் மௌனமாயிருந்தனர். இவ்விடையில் விஜயத்திற்கு எத்தனை ஆயிரம் எண்ணங்களோ தோன்றி மறைந்தன! எதை எண்ணினன் எதை எண்ண வில்லை? அவன் மனக்கண்ணால் எதைப் பார்த்து எதைப் பாராதிருந்தனன்? ஆ ஆ! இப்பத்து நிமி

ஷங்களில் அவன் நினைத்த நினைப்பு, இதுகாறும் அவன் வயது முழுவதும் நினைத்ததற்கு எத்தனையோ மடங்கு அதிகம் எனத் தோன்றிற்று. காளியும் தனது தந்தையும் தனித்துக் காட்டில் ஒரு குகையில் இருப்பதாகப் பார்ப்பன். காளி தன் வீட்டில் தனது தந்தையோடு இரகசியம் பேசுவதாய் நினைப்பன். காளியை நினைக்காமல் தன் தந்தையின் உருவம் மாத்திரம் மாசற்றுக் கற்பகம் என விளங்கக் காண்பன். இவ்வணம் தனது அருகில் அமர்ந்திருக்கும் தந்தையின் மெய் உருவைக் காணாது மறந்து, தன் மனத்தின் கண்ணேயே எழுந்தனவற்றை முழுதும் நோக்கி எண்ணத்தில் ஆழ்ந்தான்.

மகாதேவரோ, அக்கடித மூலமாய்க் காளி பெயரைக் கேட்டு, விஜயத்தை அவசரநிமித்தமாக அவனிடம் அனுப்பின நாள் முதல் இந்த நிமிஷம் வரையில், தனக்கும் காளிக்குமுள்ள சம்பந்தத்தை எவ்விதம் எப்போது விஜயத்திற்கு உரைக்கலாம் என்றே சிந்தித்திருந்தனர். உண்மையைச் சொல்லி அநாவசியமாய் விஜயத்தின் மனதிற்குக் கஷ்டம் தருவது சரியல்ல என்றிருந்தார் பலநாள். பிறகு உண்மையைச் சொல்வது அத்தியாவசியம் என்று ஏற்பட்ட பிறகும், 'எப்படி இதை விஜயத்திற்குச் சொல்வது, இது தக்க காலம் அன்று.' என்று மிகவும் நினைத்து மனம் வருந்தினர் காருண்யத்திற்கு இடைஞ்சல் என்ற அச்சத்தால் அப்போது காளியைப் பற்றித் தன்னைக் கேட்காவிடினும், அவ் அவசரம் நீங்கியபின் தன்னை விஜயம் கேட்பான் என்பதுபற்றி அவர் சிறிதும் சந்தேகித்தாரல்லர். சென்ற இத்தனை நாட்களாய் விஜயம் அவரைக் கேட்காதிருந்தது தான் அவருக்கு ஆச்சரியம். தானே அவனைக் கூப்பிட்டு இந்த விஷயம் உரைக்கப் பலநாள் இஷ்டப்பட்டனரேனும் ஒருநாளும் நல்ல சமயமில்லை என்று நினைத்தார். ஆகவே இவருக்கு விஜயம் அர்த்தராத்திரியில் தன்னை வந்தெழுப்பியது ஆச்சரியம் விளைக்காமற் போனது ஓர் ஆச்சரியமன்று.

முதலில் மகாதேவர் விஜயம் பக்கம் திரும்பி "இதென்ன கடிதம் விஜயா?" என்றார்.

இதுவே விஜயத்தின் விழிப்புக் கனவினின்றும் அவனை எழுப்பியது. மறுபடியும் அவனுக்குத் தேகம் நடுக்கலுற்றது. தன்னை அறியாமலே தந்தைபால் மேலுமேலும் நெருங்கினன்.

பிறகு தன்னைத் திடப்படுத்திக்கொண்டு தன் கையிலிருந்த கடிதத்தை விரித்து "இது சென்னையிலிருந்து காலையில் வந்தது; இதுபெரிய ஜமீனிடமிருந்து மாலையில் வந்தது." என்று சொல்லித் தந்தை பக்கல் நீட்டினன்.

"என்ன விஷயமாக வந்தன இக்கடிதங்கள்?" என்று மெல்லக் கேட்டனர் மகாதேவர்.

"நீங்களே பாருங்கள்." என்று கடிதங்களை அவரிடம் கொடுத்து மேஜைமேலிருந்த விளக்கை எடுத்து, பெரிய தாய்த்தூண்டி அருகில் கொண்டுவந்து பிடித்தான். தந்தை வாசிக்கும்போது அவர் முகத்தைப் பார்க்க முயன்றான். நோராய் நிதானமாய் அவர் முகத்தைப் பார்க்க முடியவில்லை. மறுபடியும் மயிர்க்கூச்செறிந்து தேகம் நடுங்கும் எனத்தோன்றியது.

ஆனால் மகாதேவர்முகம் எள்ளளவும் மாறுபடவில்லை. அக்கடிதங்கள் இரண்டையும் வாசித்து முடித்தார். உடனே விஜயத்தை நோக்கி "நீ வேலையை ஒப்புக்கொண்டனையா விஜயா?" எனக் கேட்டார்.

ஆம் எனக் குளறினான் விஜயம்.

"என் கண்ணே! விஜயா நீ அன்றோ என்குழந்தை!" என்று வாய்குளறக் கண்களில் ஜலம் பெருக, மறுபடியும் விஜயத்தை இருகைகளாலும் வாரியணைத்துத் தழுவினர். தன் இளமகன் எவ்வளவு உண்மை உள்ளவனாக இருக்கிறான்; தன்னிடம் எவ்வளவு நம்பிக்கை உள்ளவனாக இருக்கிறான்; அவன் இவ்விஷயத்தில் எவ்வளவு மனத்துயர முற்றிருக்க வேண்டும் என்பதை அவர் நினைக்கநினைக்க ஆநந்தமெய்தினர். விஜயத்திற்கு இன்னும் உண்மை தெரியாவிட்டாலும், அவன் மனதை வருத்திய கொடிய அரக்கன் ஒழிந்தனன். விஜயம் தைரியமானான். தனது தந்தையிடம் இன்னும் அதிகப் பற்றும் மரியாதையும் காட்டவேண்டுமென்று நினைத்தான். மறுபடியும் சற்றுநேரம் கழித்து மகாதேவர். "எனக்கும் காளிக்கும் உள்ள தொடர்வை நீ அறிவையா விஜயா?" என்றார்.

"எனக்குத் தெரியாது; நான் எங்ஙனம் இதை அறிதல் கூடும்?" என்று மெதுவாய்ச் சொன்னான். அவரே இவ்விதம் ஆரம்பித்தது அவனுக்குப் பெருமகிழ்ச்சி உண்டாக்கிற்று.

"அது பெரிய கதை விஜயம்! நீ அதைப் பொறுமையாய்க் கேட்கவேண்டும் மனிதன் வாழ்க்கையே வாழ்க்கை! சற்றுக் கவனமாய்க் கேள் விஜயா." என்று தன்னுடைய ஆழ்ந்த மெதுவான குரலில் சொல்ல ஆரம்பித்தனர்.

## கசு. சோமசுந்தரம்.

யாயும் ஞாயும் யாராகியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெய்ந் நீர்போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே.—செம்புலப்பெய்ந்நீரார்.

"என் பிதாவிற்குக் கல்யாணம் செய்து பல வருஷங்கள் குழந்தை இல்லாதிருந்து, பல விரதங்களை மேற்கொண்டு ஹோமம் ஆதியவை செய்த பின்னர், இளஞாயிறு போன்று ஒரு மகன் உதித்தனன். அதற்குப்பின் பல ஆண்டுகள் கழித்தே நானும் உன் அத்தையும் பிறந்தோம். பிள்ளையின் கவலை தீர்க்க வந்த அவ் இள மழவைப் பெற்றோரும் உறவினரும் மிக்க செல்வத்தோடும், அன்போடும், அளவில்லா ஆனந்தத்தோடும் வளர்த்து, தத்தம் உயிரேயெனப் பாதுகாத்து வந்தனர். இளங்குமானும் நாளுக்கு நாள் மிக்க அழகு பொருந்தி, பாலைவன நடுவிலுள்ள பச்சை நிலமேயென, தன்னை அண்டினவர்க் கெல்லாம் களை தவிர்த்துப் பெரு மகிழ்ச்சி தந்தான். இம்மகன் நாளடைவில் வளர்ந்து கல்வி கற்கப் புகுந்த பின்னர்,வெளித்தோன்றுதலாய தன் தேக அழகிற்கேற்ப மன அழகு பெரிதும் உடையனெனக் காட்டினன். தான் கற்க ஆரம்பித்த எதையும் செவ்வனே களங்கமின்றி அறியும் ஆற்றலுடையனாயினன். இங்ஙனம் இவனுக்குண்டாய கல்வி வேட்கையைத் தணித்தற் பொருட்டுத் தந்தை எடுத்துக்கொண்ட முயற்சி செப்ப அரிது. வயது பன்னிரண்டாகு முன்னரே, இந்நாட்டுக் கல்விமான்களில் தலைமை எய்தினன்போல் தோன்றினன். பிறகே இவனைக் கல்விவளம் மிகுந்த மதுரைக் கனுப்பி அங்குள்ள தமிழிலும் ஆரியத்திலும் வல்ல பண்டிதர்களிடம் ஒப்பித்து, உடம்புநலம் முதலியன பார்த்துக்கொள்ள எவ்வளவோ ஏற்பாடும் செய்து வைத்தனர்.

"ஆண்டு அம் மதுரையம் பதிக்கண்ணே பதிற்றியாண்டு படித்துக் கல்வியில் நிபுணன் எனப்பெயர் பூண்டனன். மதுரைச் சங்கத்துள்ளார் அனைவருக்கும் இவன் ஒப்பற்ற நாயகம் என விளங்கினன். இவ்வண்ண யௌவன புருஷனிடம் ஒருவரும் பொருமை கொள்ளார். இவன் தன் முதிர்ந்த அறிவைத் தெரிவிக்கும் அகன்ற கோடிட்ட நெற்றியும், காருண்ய ஊற்றேவெனத் தோன்றி உருகியோடுவது ஒப்ப இருந்த கரியகண்களும், செங்கனி விண்டதெனச் சிவந்த வாயும், சிறிதே பருத்து உயர்ந்து எட்பூவெனக் குவிந்தநாசியும் களங்கமில் மலரொத்த கன்னங்களும், யாவருக்கும் சிறந்த இலக்ஷணங்களைக் கற்பித்தன. இம்முகத்தோடு பொருமை கொள்வது எவர்க்கும் அரிதாயது. சோமசுந்தரம் எனில் இவர்க்கே தகும் என யாவரும் கூறு நின்றனர். இவரோடு பேச எவரும் முந்தினர். இவர் தம் இனிய குரல் கேட்போரைப் பரவசப்படுத்திற்று. இவர்தம் குழல் கறுத்து நீண்டு சுருளுடையதாய் இருந்தது. இவ் அரிய நன் மகனைப் பிறர் இவ்வாறு மதிக்கின், பெற்றோர் எவ்வணம் கருதினர்? 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோனெனக் கேட்டதாய்.' அழகிய வடிவும், அளவு கடந்த அறிவுமுடைய இவனன்றே புருஷன்! தேக காந்தியோடு ஆன்மஞானம் அடைந்த இவனன்றே மாந்தர் திலகம்! இயற்கையின் மணமகன் இவனேயோ? என்றனர் யாவரும்.

"இதனிடையில் நான் இங்கேயே படித்து, என் பிதாவின் உத்தியோகத்தில் பழக எண்ணி அவருக்கு உதவி செய்வேனாயினேன். என் தங்கையும் பெண்களுக்குரிய கல்விகற்று வீட்டின்கண் வளர்பவளானாள். நானும் அதிக ஊக்கத்துடன் கல்வியில் பலவருஷங்கள் பயின்றனனாயினும், உலக விவகாரங்களை உணர்ந்து அவைகளில் உழன்று அவை தம் உண்மையை அறிவது எனக்கு இன்றியமையாதது ஆயிற்று. ஆகவே நான் மதுரைக்குச் செல்வது அரிதாயிற்று. மேலும் சோமசுந்தரத்தினால் என் படிப்புவிஷயங்கள் புதிதாய வழிகளில் விர்த்தி செய்விக்கப்பட்டன. எனினும் வேறு விஷயங்களைக் கவனிக்காது கல்வியில் மாத்திரம் மூழ்கி எழுந்து மறுபடியும் மூழ்க விரும்பினவன் அவனே. ஆதலின், அவனை

இங்கு வரவழைக்காது, என் தந்தை மேலும் சிலவருஷங்கள் அங்கு வசிக்கும்படி விட்டுவைத்தனர்.

"சோமசுந்தரத்துக்கு இப்போது வயது இருபத்தைந் தாயிற்று. மதுரையின் சங்கத்துப் புலவர்களுக்குத் தலைமை யாகிய திருத்தக்கதேவர் என்பவரிடம் இவனுக்கு அதிக பற்று உண்டாயிற்று. மேலும் அப்பண்டிதரின் இளமகன் இவனுக்கு நேயமாயினன். ஆகவே சிலகாலம் அவர் இல்லின் கண் ணேயே உண்டும் உறங்கியும், தன் கல்வியில் அதிக சிந்தை செலுத்திவந்தான். இப்போதுதான் சோமசுந்தரத்திற்கு முதன் முதல், இவ் உலக வாழ்க்கைக்குக் கல்விமாத்திரமே போதாது எனத் தெரிந்தது. கல்வி கேள்விகள் தமக்கு மேற்பட்ட ஏதோ ஒன்றை அடைவதற்குரிய படிகளே என உணர்ந்த னன். கல்வியே முழு வாழ்வென எண்ணினல் கல்வியில்லா மாந்தர் வாழ்வது வாழ்வு அன்றென அல்லவோ படும். இவை களைத் தவிர்த்து மற்றேதோ இருந்தன்றே எல்லாரையும் தன் வழிப்படுத்தி, அவ்வளவிலே யாவரையும் சமரசப்படுத்துகி றது என எண்ணினன். இங்ஙனமாக எண்ணிய அவன் அப்போதே அதன் வசத்தனானன்.

"சுருக்கிச் சொல்லுமிடத்துத் திருத்தக்கதேவர் வீட் டில் அவர் குமாரி ஒருத்தி இருந்தாள். இவ்வழகிய நங் கையை நானும் சிறுவயதிலும் பிறகும் பார்த்திருக்கிறேன். இவள் தன் ஒப்பில்லாக் கூந்தலும், கோடைகாலத்து மெலிந்த மேக ஓட்டத்தையே போன்ற புருவங்களும், அலர்ந்து பனிப் படிந்ததெனத் தோன்றி மறையும் கரியவிழிகளும், அழகிய நாசியும், வள்ளையென வளைந்துநின்ற செவிகளும், கொவ்வை இதழும், வெள்ளிய பற்களும், சிவந்த கைகளும், அரிய செந்நிறத் தோற்றமும், மருண்ட நோக்கும், மாசற்ற மனதை யும் வேரூன்றிய காதலையும் தெரிவித்தன. இவள், தன் சிறு வயதில் பலகால் சோமசுந்தரத்தைப் பார்த்திருப்பினும், சோமசுந்தரத்தைத் தன் வீட்டில் இப்போது கண்டவுடன், 'இவனே என் நாயகன்; இவனே என் தலைவன்.' என மன தில் மாசற உறுதிகொண்டனள். சோமசுந்தரமும், இவளை இச்சமயம் பார்த்தபோது தன்னை அறியாப் புளகமெய்தி, 'கா தல் குடிகொள்ளும் இக்கோயிலன்றே என் பூஜைக்குரியது.' என எண்ணினன். எவ்வாற்றுலும் இவ்வழகியைத் தான் மண

க்கவேண்டுமென மாணவன் உறுதிகொண்டனன். இவ்வண்ணம் திடீரென எழுந்த காதல்முதிர்ந்து பலப்பட பல காரணங்கள் ஏற்பட்டன. மீனாட்சியும் தமிழில் பாண்டித்தியமுடையாள். சங்கீத நுட்பம் யாவும் அறிந்து பயின்ற திறத்தினள். ஆகவே சோமசுந்தரத்துக்கும் இவள் தமையனுக்கும் எழும் விளையாட்டுக் கல்வி விவாதங்களில் இவளும் சிற்சில சமையம் சேர்வதுண்டு. இவள் விளையாட்டில் சேரும் சமையங்களே சோமசுந்தரத்துக்குப் பேரானந்தம் விளைவிப்பன. மற்றும் அநேக சமயங்களில் சோமசுந்தரம் எழுதும் பாக்களை மீனாட்சி சுரத்தோடு வீணையில் வாசிப்பதுண்டு.

"இவர்கள் உலகவழக்குக்கு ஒப்ப மணம்செய்துகொள்வதற்குப் பெரிய இடையூறு ஒன்றிருந்தது. திருத்தக்க தேவர், மீனாட்சிசிறுவயதினளாய் இருக்கும்போதே தன் சொந்தக்காரரில் ஒரு சிறுவனுக்குப் பொய் மணம் விளையாட்டாய்ச்செய்து வைத்தனராம். பிறகு அச்சிறுவனுக்கே தன் குமாரத்தியைத் தருவதாய் வாக்களித்தனராம். இப்போது அவனுக்கும்சுமார் இருபதுக்குமேல் வயதாயிற்றும். பல குடும்ப காரணங்களாற்றான் இம்மணம் இதுகாறும் நடைபெறுதிருந்தது. ஆனால் இவ்விருவருக்கும் கல்யாணம் முடிப்பது என்பது இவ் இரு வீட்டாரின் தேர்ந்த கொள்கை. ஆனால் சோமசுந்தரம் இங்குவந்து ஒருமாதமாயிற்று, மீனாட்சிக்கும் கல்யாண ஏற்பாடு செய்தார்கள். இச்சமயம்மீனாட்சி தன் தந்தையிடம் தன் கருத்தை வெளியிட்டு அதன்படி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். சோமசுந்தரமும் ஒரு நாள் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். ஆனால் திருத்தக்கதேவர் இதனைச் செவியேற்றாரல்லர். வாக்குத் தவறுவது தன்னால் முடியாதெனக் கூறினர். ஆனால் மீனாட்சியின் தமயன் மட்டும் இவர்கள் காதலை அங்கீகரித்தான். தன் நண்பன் சோமசுந்தரன் ஒருவனே தன் தங்கைக்கு ஏற்ற தலைவன் என்று உறுதியான எண்ணங் கொண்டான். அவன் வேண்டுகோளையும் பொருட்படுத்தினாரல்லர் அவன் தந்தை.

"கல்யாண நாள் அணுகலும் காதலர் இருவரும் மீனாட்சி மதுரையை விட்டு வெளிப்போந்தாலொழிய அக்கொடிய ஆபத்து அவளை விடாதென எண்ணினர். பிறகு ஒரு நாள் மீனாட்சியின் தமயன் உதவியைக்கொண்டு மதுரை

யைவிட்டு இவர்கள் மணிமங்கலம் நோக்கி வந்தனர். இங்கேயும் சோமசுந்தரம் தன் தகப்பனர் இதற்கிணங்குவார் என்று நிச்சயமாய் நினைக்கக் கூடவில்லை. ஆகையினல் அடுத்த ஜமீன் குமாரபுரத்தில் தன் தந்தையின் சிநேகிதர் வீடடைந்தான். எங்களுக்கு விஷயம் மதுரையிலிருந்தும் தெரிந்தது. ஆனல் திருத்தக்கதேவர் தன் குமாரத்தியைத் தன்னிடம் வரவழைக்க முயன்ருரல்லர். தனிப்போன தாசி தன்னிடம் வரக்கூடாதென மொழிந்து சோமசுந்தரத்தை ஒன்றும் சொல்லாது விடுத்தனர்.

"என் தந்தைக்குமட்டும் இச்சங்கதி முதலில் தெரிந்தது. அவர் அந்த நிலைமையிலேயே அதற்குப் பரிகாரம் செய்ய முயன்றும் பயன்படா தொழிந்தது. பிறகு என்னுடைய யோசனையும் கேட்டனர். எனக்கு உண்மையில் அப்போது இன்னது சொல்வதெனத் தெரியவில்லை. காதலர் இருவர் ஒருவரை ஒருவர் உண்மையாய் நேசித்தால் விவாகம் ஏன் நாம் செய்யக்கூடாதெனத் தோன்றிற்று. பேரழகுடைய இரு யௌவனர் மணத்திற்கு எனக்கு யாதொரு ஆட்சேபமும் தோற்றவில்லை. திருத்தக்கதேவர் வாக்குத் தவருது நடப்பது அவர் தம் பெண்ணின் கடமையாய் இருக்கலாம். ஆனல் திருத்தக்கதேவர், தம் பெண் சம்மதமில்லாமல், அவளை எப்படி ஓர் ஆடவனுக்கு மணம் செய்தல் தகும்? மேலும் பெண் சிறியவளா யிருக்கிறபோதே, தந்தை யெப்படி அவளை ஒருவனுக்குத் தத்தஞ்செய்யலாம்?

"கல்யாணம் முக்கியமாய் மணமாந்தரின் அந்யோந்ய சௌக்கியத்தைக் குறித்தது. மணமக்களின் மகிழ்ச்சியைப் பெற்ருேர் அல்லது மற்ருேருடைய இஷ்டங்களுக்காகவாவது அல்லது எவ்வித கொள்கைகளுக்காகவாவது விற்றுவிடல் பெரும்பாவமென்று எனக்குத் தோன்றியது. ஆனல் கல்யாணமாந்தர் அறிவீனராயும், தமக்குரிய காரியங்களைச் செய்யும் திறமையற்றவர்களாயும் இருப்பின், அவர்களின் சௌக்கியத்தின் பொருட்டு இடித்துக்கூறல் மற்றவர் மாட்டு அவசியமே ஆயினும், இக்காரியங்களை அவர்களே செய்து கொள்ளும் ஆற்றல் உடையராயின் அவர்களன்ருே அவர்களுக்குரிய விஷயங்களுக்கு உத்தரவாதம்? குறைந்தபக்ஷம் மணமக்களின் இஷ்டமில்லாது ஒரு மணவினை முடிப்பது எவ்விதத்திலும் கூடா

ஒழுங்கென எனக்குத் தோற்றியது. ஆகவே, மீனாட்சிக்கு இஷ்டமிருந்து, திருத்தக்கதேவர் வாக்குறுதியின்படி கல்யாணத்திற்கு உடன்பட்டிருந்து, சோமசுந்தரம் அவளை மோசஞ் செய்து அழைத்து வந்திருந்தால், அவன் செய்தது பெரும் பிசகு என்னலாம். அப்படியின்றித் தனக்கிஷ்டமின்றி, எவருக்கோ ஏதோ ஒரு வாக்குறுதிக்காக ஒரு பெண்ணின் மன உறுதியை விற்றுவிட எண்ணியிருந்தபோது, சோம சுந்தரமன்றி மற்றிவ்விஷயம் தெரிந்த எவர்க்கும், அப்பெண்ணை அவ் ஆபத்தினின்றும் விலக்கல் பெருந் தர்மமாம். எனின், சோமசுந்தரமே, எப்புருஷனுக்காகத் தன் தேகமுழுவதும் தன்னுயிர் முழுவதும் கைம்மாறு கருதாது ஈந்தனளோ அவனே, அப்புருஷனே, அவளை இப்படிப்பட்ட நிலைமையில் விட்டுவிட்டு, தன் வெளிமரியாதையையுங் கண்ணியத்தையுமே பார்ப்பது எவ்வளவு அசங்கியமானது, எவ்வளவு இழிவையுடைத்து, எவ்வளவு பெருமையொழிந்தது, எவ்வளவு மானமில்லாதது. ஆகையால் சோமசுந்தரம் செய்தகாரியமே அவனைப்போன்ற நல்ல உத்தமபுருஷன் செய்யவேண்டிய காரியமென நான் என்கருத்தை எமது தந்தைக்குத் தெரிவித்தேன்.

"ஆனால் என்பிதா, நான் சொன்னவைகளை அவை தம்முள் சரியென்றனரே யன்றி, அவை உலக வழக்கத்துக்கு ஒப்பாது இருப்பதால் அவைகளின்படி நடப்பது சரியன்றென்றும், உலகவழக்குக்கு மாறுகச் சான்றோர் ஒருவரும் நடக்கமாட்டாரென்றும், உலக வழக்குச் சான்றோர் எவர்க்கும் ஒத்தமையால் அதனின்றும் தவறுபவன் இழிவான நெஞ்சுடையவனென்றும், ஆதலின் தாம் தம் அருமருந்தன்ன குழந்தை சோம சுந்தரத்துக்காக விசனப்படுகிறார் என்றும் சொன்னார். அவர் உடனே குமாரபுரத்திற்கு, இவ்விதமான தன் தேர்ந்த கருத்தையும் தாம் பிதாவாகையால் தம் பிள்ளையின் கீழ்ப்படியாமையை மன்னித்தார் என்பதையும் எழுதி, அவர்கள் மணத்திற்குத் தாம் எவ்வித ஏற்பாடும் செய்ய என் தந்தை உடன்படாதிருந்தார். ஆகவே தானாகவே சோமசுந்தரம் குமாரபுரத்திலே என் தந்தையின் சிநேகிதர் உதவியைக் கொண்டு மீனாட்சியை மணம் செய்துகொண்டான். நான் மட்டும் அதற்கு என்னாலான உதவியைச் செய்தேன். ஆனால் அதற்குப்பின் என்

தந்தை அநேக நாள் இருக்கவில்லை. தெய்வச் செயலாய் மூன்று மாதம் இறந்து போயினர். அவர் இறக்கும் தறுவாயில் சோம சுந்தரமும் மீனாட்சியும் இங்கு வந்தனர். அவர் இறப்பதற்கு முன் தம் அருந் தவப் புதல்வனை மார்போடணைத்து, "கண் மணி! சோமசுந்தரம்!" என்று பிதற்றியபடியே உயிர் துறந்த னர்.

"என் தந்தை இறந்தபிறகு நான் சோமசுந்தரத்தையும் மீனாட்சியையும் வீட்டிற்கு வரவழைத்துக் கொண்டேன். சோமசுந்தரம் இங்கேயே அவன் இறக்கும் வரையில் வாசிப்பி லேயே காலங்கழித்தான். வீட்டு விஷயங்கள்யாவும் என்னிடம் ஒப்பித்து, தன் அரிய பிதா தான் செய்ததைத் தப்பிதம் என்று எண்ணினரே யென்ற ஒருகவலை மாத்திரமன்றி, மற்றப் படி தன் மனைவியோடு சந்தோஷமாய்ப் பல ஆண்டுகள் கழித் தான். மீனாட்சியின் நேசமோ சொல்லி முடியாது.

"இதற்கிடையில் எனக்கும் பிறகு என் தங்கைக்கும் கல் யாணமாயிற்று. பிறகே சோமசுந்தரத்திற்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. ஆனால் மீனாட்சி அக்குழந்தை பிறந்தபின் அநேக நாள் இருக்கவில்லை; உடனே உயிர் பிரிந்தாள். சோமசுந்தர மும் தன் மீனாட்சி பிரிவாற்றாது, அடுத்த ஐந்தாமாதம் இறந்து போயினன். ஆனால் அவன் இறக்கும் சமயம் தன் சிறு குழந் தையைத் தன் கைக்கொண்டு என்னை அருகில் வரவழைத்து, 'இக்குழவியை உன் குழந்தையெனப் பாதுகாப்பது உனது கடமை. இதை நீ செய்வாய் எனப் பூரணமாய் நம்புகிறேன். மகாதேவா! இதோ இதைப் பிடி. மீனாட்சியும் அப்படியே நம்புகிறாள். இன்னும் கால்நாழிகையில் அவளோடிருப்பேன். மகாதேவா! இக்குழந்தை உன்னுடையது.' என்று சொல்லிய படியே அக்குழந்தையை என்னிடம் கொடுத்துக் கண்ணீர் ஆறெனப் பெருக அழுதவண்ணம் 'நம் தந்தை இப்போதாயி னும் என்னை மன்னிக்கமாட்டாரா? அஃதொன்றே என்னை இத்தனைநாள் வருத்திற்று.' என்று அசைவுற்ற குரலுடன் மெல்லெனப்பேசி என்னையும் என் தங்கையையும் அருகில் வரச்சொல்லிய வண்ணம் உயிர் துறந்தனன்." என்று மெதுவா கப்பேசி, கைத்துணியால் கண்களையும் கன்னங்களையும் துடை த்து மௌனமாயிருந்தனர் மகாதேவர். பழைய ஞாபகம் அவரை அனற்கண்ணிட்ட மெழுகேயென உருக்கிற்று. இதன்

இடையில் விஜயம் தான் கேட்க வந்ததை முழுது மறந்து, தான் கேட்ட விவரத்தால் மனம் உருகிக் கசிய, அவனும் கண்ணீர் விட்டு வருந்துவானாயினன். எனினும் அவனுக்கு ஒரு புது எண்ணம் தோன்றியது. ஆனால் அது அப்படித்தான் இருக்குமென்று நம்ப அவனுக்குத் தைரியம் இல்லை. ஆகையால் வருந்திய முகத்தோடு தன் தந்தையை நோக்கி எப்போது மறுபடியும் சொல்லுவாரோ என்று எதிர்ப் பார்த்திருந்தான். ஆனால் இக்கதை ஆச்சரியமும் பயமும் உண்டாக்கி எப்படி முடியுமோ வென்று ஏங்கச்செய்தது.

## கஎ. மீனாட்சி சுந்தரம்.

ஊழிற் பெருவலி யாவுள; மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்.—திருவள்ளுவர்

சற்றுப் பேசாதிருந்து பிறகு விஜயத்தைப் பார்த்து, "விஜயா! எல்லா விஷயங்களையும் நாம் அறியலாம். எல்லா விஷயங்களும் நம்மாலேயே செய்யப்படுகின்றன, என்று நினைப்பது எவ்வளவும் சரியல்ல வென்று இப்போது உனக்குத் தெரியவரும். ஆகையால் இதைச் சற்றுக் கவனித்துக்கேள். விஜயா!" என்று தாழ்ந்த குரலிற்சொல்லி மறுபடியும் தான் சொல்லவேண்டியதைச் சொல்ல ஆரம்பித்தனர்.

''இங்ஙனம் வெளி விஷயங்கள் ஒன்றிலும் தலையிடாது வீட்டினுள் தன் புத்தகவறையிலேயே காலங்கழித்து என் தமையன் இறந்த பிறகே, அவனிடம் எனக்கு எவ்வளவு பற்று இருந்ததென அறிந்தேன். அவனுடைய முதிர்ந்த அறிவும் தெளிந்த யோசனையும் எங்கேயோ ஓடி ஒளிந்தன. அவனது அகால மரணத்தை நினைத்து வருந்தும் எங்களுக்கு அவன் குழந்தை ஒரு தெய்வமலரே போன்று, அவன்தன் இழந்த வாசனையை மீட்டு மீட்டும் உண்டாக்கியது. இக்குழந்தை மிகவும் சுந்தர உருவினன். சோமசுந்தரத்தால் இவனுக்கு மீனாட்சி சுந்தரம் எனப் பெயர் குறிக்கப்பட்டது. 'இப்பெயரே என் மீனாட்சியையும் என்னையும் ஒருங்கு சேர்க்கும் பெயர்.' என அடிக்கடி சொல்லி மகிழ்வன். இக்குழந்தை என் தமையனையும் மீனாட்சியையும் ஒன்று சேர்த்து உண்டாக்கிய பிரதிபிம்பம்போல் காணப்பட்டான். அவனுடைய மருண்ட குழ

விக் கண்கள் எங்களுக்கு அடங்காக் களிப்பை உண்டாக்கின. அவன் தன் அரிய நிறமும், கமலக்கண்ணும், பவழ இதழும் நீண்ட விரல்களும், மீனாட்சியையோ அல்லது சோமசுந்தரத்தையோ ஞாபகப்படுத்தின. இம் மழவிளங் குமரனைப் பாதுகாத்துப் பள்ளியில் வைத்து வித்தியாப்பியாசம் செய்வித்தேன். இவனுக்கு வயது ஆறாயிற்று.

"இது இப்படியாக, அரண்மனையில் ஜமீன் அரசற்கு ஓர் ஆண்மகவு உதித்தது. அதுவே உன் சிநேகிதன் சந்திரவர்மா. அக்காலத்தே உன் தாயாரும் உன்னைக் கருப்பமுற்றிருந்தனள். அரண்மனையில் தோன்றிய குமாரனுக்காக மங்கலச் சடங்கு பல செய்து விருந்து முதலியன வெகு ஆடம்பரத்தோடு நடந்தன. அக்காலத்து, அத்திருநாள் இரவு உன் தாயார் அங்குவரக் கூடாமையால் நானும் மீனாட்சிசுந்தரமும் உண்டு களித்து, அவனுக்குரிய சிறு வேடிக்கைகளெல்லாம் காட்டி, நாங்களிருவரும் அன்று அரண்மனையிலேயே துயின்றோம். மீனாட்சிசுந்தரத்தின் ஊழ்வினையினாலோ, அல்லது படுபாவி! என் அஜாக்கிரதையினாலோ நான் அன்று கொஞ்சமேனும் தூக்கக் கலக்கமின்றித் தூங்கித்தொலைத்தேன். காலமே எழுந்தவுடன் பக்கத்தில் படுத்திருந்த குழந்தையைக் கண்டிலேன். உடனே அரண்மனை கொள்ளை போயிற்றென்று எங்கும் கூக்குரல் கேட்டது. மீனாட்சி சுந்தரமும் கையிலும் கழுத்திலும் விலையுயர்ந்த சில ஆபரணங்கள் அணிந்திருந்தான். ஆகையால் நாங்கள் அளவுகடந்த அச்சங்கொண்டு இங்குமங்கும் தேடினோம். . ." என்று சொல்லி மேல் நா எழாமல் சற்றுப் பொறுத்தார். விஜயமும் தான் நினைத்தது ஒருகால் சரியோ என அஞ்சியும், இது வேறு விதமாய் முடியலாமென்று நினைத்து வருந்திக் கண்ணீர் உகுத்தனன்.

"பொழுது புலர்ந்ததும் ஜமீன் தலைவரும் நானும் ஷண்முகநாதரும் எண்ணிறந்த ஆட்களை அழைத்து இம்மலை, காடு, ஆறு முதலிய யாவும் பல மாதங்களாகத் தேடியும் குழந்தையைப்பற்றி ஒரு சிறிதும் தெரியவில்லை. இரகசியமாகப் பல ஆட்களை நியமித்துத் திருடர்கள் உறையும் எங்காவது உளனோ என்பதையும் விசாரித்தோம். எதிலும் பயன் இல்லை. எங்கள் வேலை யெல்லாம் வீணாயின. மணிமங்கலத்தில் இதைப்பற்றி விசனமுறாதாரே இல்லை. என்னை

நிந்தியாதாரும் இல்லை. நான் என்ன செய்வேன்? மனிதனுல் கூடிய முயற்சி யெல்லாம் செய்து, இனித் தெய்வ சங்கற்பம் என்று திருவருளுக்கு அமைவுற்றவன் ஆயினேன். ஒருவரும் குழந்தை உயிரோடிருப்பான் என்று நம்ப வில்லை. குழந்தை உயிரோடிருந்தால் எப்படியாவது இறைவன் கூட்டி வைப்பான் என்று நினைத்தேனேயன்றி, குழந்தை உயிரோடு இருக்கிறுன் என நம்ப நிமித்தம் ஒன்றுமில்லை.

"இதற்குள் நீயும் பிறந்து, கல்விகற்று எங்களை மகிழ்வித்தனை. மற்றுஞ் சில ஆண்டுகள் கழிந்து எனது தங்கைக்குக் காருண்யமும், உனது தங்கை கண்ணகியும் பிறந்தார்கள். இப்படியே நாளுக்குநாள், காலம் என்னும் பழுக்கக் காய்ந்த பாண்டத்தில் ஊற்றிய நீரேயென இழந்த பிள்ளையின் பொருட்டாய எங்கள் வருத்தம் மாறிற்று. நாங்களும் அவனைப்பற்றி விசாரிப்பதையும் தேடுவதையும் விட்டொழித்தோம். அது மட்டுமா, சோமசுந்தரத்தையும் மீனுட்சியையும் பற்றிப் பேசுவதை அறவே ஒழித்ததுபோல் அவனைப்பற்றிப் பேசுவதையும் முற்றிலும் மறுத்தோம். எப்போதோ ஒருவேளையில் அன்றி அவனைப்பற்றி நினைப்பதையும் மறந்தோம். இங்ஙனம் இருபது வருஷங்கள் கழிந்தன.

"சுமார் இரண்டு மாதத்திற்கு முன் ஒரு நாள் மாலைப் போதில் நான் இங்கே படுத்தபடியே தோட்டத்திலுள்ள பச்சை மரங்களையும், அதற்கப்பால் கண்ணகி காருண்யத்தோடு விளையாடுவதையும் பார்த்து ஏதோ சிந்தித்திருந்தேன். உடனே வேலைக்காரன் வந்து 'யாரோ ஒருவர் வந்திருக்கிறுர். உங்களைப் பார்க்கவேண்டுமாம்.' என்றுசொல்லி, விஜயத்தைப்போல் இருக்கிறுர் அவர்' என்று முணுமுணுத்தான். உடனே, நான் அவரை இங்கு அழைத்துவா எனச்சொல்லி அவர் யாவரோ என்று சிந்தித்தேன். பல எண்ணங்கள் உண்டாயின. ஆனாலும் ஒன்ருயினும் வரும் உண்மையை உரைத்ததன்று. சற்றுப் பொறுத்து உயர்ந்த தோற்றமுடைய ஒருவன் வந்து என்னெதிர் நின்று வணங்கினுன். வெயிற்கண் கறுத்த தேகமும், அறிவையும் தேக ஆற்றலையும் குறிக்கும் உறுப்புகளும் சிறப்புற்று விளங்கின. அவனைப் பார்த்ததும் எனக்கு ஒருவாறு மனமகிழ்ச்சியுண்டாயது. நான், 'வாரும். இந்த நாற்காலியில் உட்காரும். என்று உபசரித்

தேன். அவன் முகத்தில் சந்தோஷம் இல்லை; சலிப்பும் இல்லை; விசனமுமில்லை. முகம் ஒரு குறிப்பும் அற்றதா யிருந்தது. என் முகத்தை உற்று மிக்க கவலையோடு நோக்கினனேனும் அவனுக்கு இன்னது செய்யவேண்டும் என்று தெரியவில்லை. 'நான் நின்று பேசுகிறேன்.' என்று குனிந்தவண்ணம் மறு மொழி தந்தான்.

"யாரோ எனக்குத் தெரியாத இளம்புருஷன் ஒருவன் என்னிடம் வந்து இவ்வண்ணம் நிற்பது எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியதேனும், நான் அவனைப் பார்க்கப் பார்க்க என்னை அறியாமல் சோமசுந்தரம் என்னெதிர் நிற்பதேபோல் தோன்றிற்று. இந்த எண்ணம் உண்டாவதற்கு எனக்குக் காரணம் தெரியாதாயினும், இந்த எண்ணம் உண்டானவுடன் என்னெதிர் நிற்பவன் ஒவ்வோர் உறுப்பும் அதனதன் நோக்கும் நான் முதல் முதல் சோமசுந்தரம் மதுரையிலிருந்து வந்தபின் பார்த்ததொப்பவே இருந்தது. இவ்வளவு உயரந்தான் அவன்; இவ்வணந்தான் தலைகுனிந் திருந்தான் அவன்; அவன் கண்கள் இப்படித்தான் ஜலந்ததும்பிக் கீழ் நோக்கின; என்று நான் சிந்தித்து அவனிடம் ஒன்றும் பேசாது அவனைப் பார்த்தேயிருந்தேன். பிறகவன்,

'என்னைத் தாங்கள் இதற்கு முன் எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா?' என்றுன்.

நான் சற்று விழித்துக்கொண்டு, 'எனக்கு ஞாபகம் இல்லையே. என்றேன். அவன் மறுபடி பேசுவதற்குச் சிறிது சென்றது.

'எனக்குத் தங்களைப் பார்த்திருக்கிறதாக ஞாபகம் இருக்கிறது.' என்றுன் வந்தவன்.

பிறகு, 'நான் உங்களைப் பார்த்ததாகக் கொஞ்சங்கூட ஞாபக மில்லையே. நீங்கள் என்னை எப்போது எவ்விடம் பார்த்தீர்கள்?' என்றேன் நான்.

'நான் தங்களைச் சுமார் இருபது வருஷத்திற்கு முன்னே பார்த்திருக்கிறேன். எனக்குச் செவ்வையாய் உங்கள் முகம் ஞாபகம் வருகிறது. ஆனல் அதில் என்ன பயன்? தாங்கள் என்னைப்போல இன்னும் யாரையாவது பார்த்ததாக நினைக்கிறீர்களா?' என்றுன் அவன்.

நான் இப்போது நினைக்கவில்லை. ஆச்சரிய முற்றேன். ஆகையால் உடனே, 'என் தமையன் ஒருவன் இருந்தான் அவன் முகம் இதேமாதிரி தான். . .' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே எனக்கு மின்னலென ஒரு சந்தேகம் உண்டாயிற்று. உடனே சந்தேகம் நீங்கி நிச்சயம் போலாயிற்று. உடனே என் உடம்பு நடுங்கிற்று. உடனே 'ஆ! மீனாட்சி சுந்தரம்!' என்றலறினேன். அவனும வாய் குளறிக்கொண்டு எவ்வகையாலோ, என்ன தைரியத்தாலோ, என்னைக் கட்டிக்கொண்டான். இவ்வண்ணம் ஒன்றும் பேசாமல் பத்து நிமிஷம் இருந்தோம். எனக்கு ஒன்றுமே தோற்றவில்லை. அவன் எழுந்து கீழேவிழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். மறுபடியும் எனக்கு ஒருவித மனத்தளர்வு உண்டாயிற்று. நிச்சயமில்லை. நான் செய்தது பிசகு என்று எண்ணினேன். ஆனால் அவன் நிற்க முடியாமல் அடுத்துள்ள ஓர் ஆசனத்தில் உட்கார்ந்து, 'நான் மீனாட்சிசுந்தரம் தான்.' என்றான். என் முகம் மாறுவதைக் கண்டான். நான் சந்தேகப்படுகிறேன் என்று நினைத்தான்.

"மறுபடியும் அவன் மனத்தேற்றம் அடைந்து, 'என்னை மன்னியுங்கள்; என்னைப் பாதுகாப்பதாக வாக்குறுதி செய்யுங்கள். பிறகு என் சரித்திர முழுவதும் சொல்லுகிறேன்". என்றான். நான் ஆஹா என்று பேசாது அவனைப் பெருஞ் சந்தோஷத்தோடு பார்த்தவண்ணம் இருந்தேன். அவன் சொல்ல ஆரம்பித்தான்:—

'மணிமங்கலம் ஜமீன் அரண்மனையில் குழந்தை பிறந்ததற்காகச் சுமார் இருபது வருஷத்துக்கு முன் ஒரு பெரிய விருந்திட்டனராம். அன்றைய இரவு ஒரு சிறுபையன் கையிலும் கழுத்திலும் தங்க நகையிட்டு மகாதேவர் பக்கத்தில் படுத்திருந்தான். அன்றைய இராத்திரி அவ்வரண்மனையைக் களவாடிய காட்டு மயிலூர்க் காளிகூட்டம் அப்பையனை எடுத்து அவர்கள் குகைக்குச் சென்றனர். அங்கே பையனுக்குப் பயங்காட்டி வாய்திறவாமல் செய்து நகையைக் கழற்றினார்கள். மறுபடி அவன் பயத்தாலும் பசியாலும் வருந்துவதைக் கண்டு அவர்கள் நாங்கள் முன்னே சமைத்த சோற்றைக் கொண்டுவந்து பசிதணித்து, மறுபடி சில பழங்களும் கிழங்குகளும் கொடுத்தார்கள். இதைத் தின்று அவன் அயர்ந்து

தூங்கும்போது அவனைக் கொன்றுவிட வேண்டுமென்பது அவர்களது கருத்து. ஆயினும் தெய்வச் செயலை யார் தடுக்க வல்லார்? இச்சிறுவன் தூங்கும்போது அக்கள்வர் தலைவன் இவனருகில் உட்கார்ந்து இவன் முகத்தைப் பார்த்திருந் தனன். இவன் அழகும் முகக்களையும், அவன் மனதில் பழைய நாளிலேயே, ஒன்றிரண்டு தவிர மற்றவை எல்லாம் பட்டுப்போன சில நற்குணங்களுக்கு, உயிர்தந்து உதவின. இந்த அழகிய குழந்தையைக் கொல்ல மனம் வரவில்லை. ஆனால் அவனை அவ்விடம் வைத்திருப்பது ஆபத்து என நினைத்து மேன்மலையாளத்தில் தன் மைத்துனன் ஆளுந் திருட் டராசாட்சியின் தலையிடமாகிய செங்குன்றத்தில் வளர்க்க விட்டான்.

'பையன் இங்கே சௌக்கியமாய் வளர்ந்து வரவே, "அப்பா! அம்மா!" என்று தனியே அழுவதை நிறுத்தி, தன்னை அப்போது அன்போடும் ஆர்வத்தோடும் வளர்த்த கள்வர் தலைவனையும் தலைவியையும் "அப்பா! அம்மா!" எனக் கூப்பிட்டு ஒருவாறு தேறி மணிமங்கலத்தை மறக்க ஆரம்பித்தான். இப்படி இங்கேயே பல வருஷம் வளர்கை யில், திருட்டு இன்னதென்றும் திருடும் விதங்கள் இன்னின் னவைகளென்றும், திருட்டுத் தொழிலின் நன்மை இன்ன தென்றும் மற்றெல்லாத் தொழில்களிலும் அது எப்படிச் சிறப் புடையதென்றும் ஒருங்கே இச்சிறுவன் உணர்த்தப்பட்டான். இதிலுள்ள அபாயங்களை இச்சிறுவன் அவர்களிடம் சொல்லி, மணிமங்கலத்து உள்ளாரைப் போல் என் உத்தியோகமோ பயிர்த்தொழிலோ செய்யக்கூடாதெனக் கேட்டபோது, அவர் கள் ஒவ்வொரு தொழிலிலும் அபாயம் இருக்கிறதென்றும், இதுவே ஜீவனஞ் செய்யும் எல்லாத் தொழில்களிலும் சுலப மானதும் அதிக சௌக்கியமானதும் என்றும் பலப்பல விதங் களாக அக்கள்வர் தலைவனால் உபதேசிக்கப் பட்டான். அக் கள்வர் தலைவியோ "என்கண்ணு! இதை விட்டு எதுக்கும் போகாதே. இதான் உனக்குத் தகுந்தது. என் குட்டிக்கி இதுதான் தகுந்தது." என்று சிறுவனை முத்தம் இடுவளாம். மேலும் அங்கே வரும் கள்வர் கூட்டங்கள் இவனைப் பல திருட்டுகள் செய்யச்சொல்லி பரிட்சை பார்ப்பதுண்டு. இவ் வகைப் பரிட்சை பலவற்றிலும் மீனாட்சி என்பான் முதற்றரப்

பரிட்சையே கொடுத்தானும். அவர்களெல்லாம் "மீனுச்சி தான் நம்ப எசமானுக் கப்புறம்; எசமானே வெலேக்கி வாங்கிடு வான் மீனுச்சி; குலேக்கையிலேயே குட்டி சூரத்து தெரிய லேயா?" என்று இப்படி மீனுட்சி திருடுவதில் சமர்த்தன் என்று ஒப்பி அவனே வெகுவாகப் புகழ்ந்து பேசினுர்கள்.

'இப்படி இவன் இங்கிருக்கையில் காட்டு மயிலூர்க்காளி இங்குவந்து சேர்ந்தான். காட்டு மயிலூர்க்காளி யென்பது ஒருகூட்டத் தலேவனின் பெயர். எவன் இப்பட்டத்துக்கு வந்தாலும் அவனுக்குரிய பெயரை அகற்றி அவனுக்கு அதுமுதல் காட்டு மயிலூர்க்காளியென்று முடிசூட்டுவது அக்கொள்ளேக் கூட்டத்தின் சங்கேதம். இக்கூட்டம் காட்டு மயிலூர்க்காளி என்பவனுல் சேர்க்கப்பட்டு, தலேமுறை தலேமுறையாக அப்போதப்போது அப்பட்டத்தின் பெருமைச்குத் தக்கவரைக் கள்வர் சிங்காதனம் ஏற்றுவித்து, மற்றவர் அனேவரும் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறதாகச் சத்தியங்கள் செய்வதுண்டு. இச்சத்தியங்களே மீறி நடப்பவர்க்குள்ள தண்டனேகளும் அப்போதே தெரிவிக்கப்படும்.

'இவ்வணம் அமைந்த பொறச்சிங்காதனத்தில் அப்போது அமர்ந்து செங்கோல்செலுத்திய காளிராஜன் இங்குவந்து, தான் விட்டுப்போன சிறுவனேப் பார்த்ததும், தனக்குப்பின் அப்பட்டத்தை வகிக்கப் பெரிதும் தகுந்தவன் இவன் தான் என்று நிச்சயித்தான். வளர்ந்து சற்றே பருத்துக் கைகால்கள் உரம்பெற்றுத் திருட்டில் வழக்கமும் பட்டிருக்கும் இவன் தேகத்தை திருடுவதற்கெனவே கறுப்பன் கற்பித்தான் என நினேத்தான். இதனுலுண்டாகிய மகிழ்ச்சியை அவன் உள்ளடக்கவில்லே. "மைச்சான்! மீனுச்சி நல்லா ஓடுவானு? இவன் காலப் பாத்தியா? நீளமாய் மெலிசாய் இதாஞ்சரி; இவன் கெண்டைக்காலேப் பாத்தியா? இவன் உடம்பு கல்லாட்ட மாயிருக்குது." என்பான். தன்னிடம் இந்தப் பையன் இரண்டுவருஷம் இருக்கட்டுமென்று அவன் தன் மலேயிருப்பிடத்திற்கு அழைத்துவந்து தன் கூட்டத்தார்க்குரிய சின்னங்களும், சிறப்புத் தந்திரங்களும், செய்கைகளும், கூவுங் கூச்சலும், பார்க்கும் பார்வையும் ஒன்றும் விடாமல் கற்பித்தான். பெரிய திருட்டுக்களுக்குப் போகும்போது "மீனுச்சி என் சோத்துக்கைப் பக்கம்." என்பான் காளிராஜன். அவன்

மேல் வஞ்சகமில்லை. அவன் மனப்படி மனிதர் வாழ்வ தில் எத்தொழில் உயர்ந்ததென்று நினைத்தானே அதற்குரிய வழிகளை அவனை அடைந்தார்க்குக் கற்பித்தல் இயற்கையே. இப்படிப்பட்ட பெரிய விஷயங்களில் மனஞ்செலுத்தும் மீனு ச்சி எப்படி மீனுட்சிசுந்தரத்தையும் மணிமங்கலத்தையும் நினைக்க முடியும்?

'ஆகிலும் பட்டப்பகலென நிலா எறிக்கும் ஓர் இரவு, காளி தன் வைப்பைத் திறந்து, அதிலுள்ள ஆஸ்தானத்துச் சொத்துக்களை வெளியே கொண்டுவந்து பரிசோதிக்கையில், வைரக் கற்கள் பதித்த ஒரு கண்டிகையை எடுத்து "இதுதான் மீனுச்சி நீ சின்னபுள்ளையா இருந்தபோது போட்டிருந்தது. இது போட்டுக்காத போனினு நான் உன்னை இங்கே கொண் டாருவனு! எல்லாம் உன் அதிட்டந்தான்." என்று சொல்லி "ஒன் எயுத்தெல்லாம் மறந்துட்டியா? இதென்ன எயுதி யிருக் குது பார்." என்று அதை மீனுட்சி கையில் கொடுத்தான்.

'மீனுட்சி சுந்தரத்துக்குப் பழைய ஞாபகம் வராதிருக்க என்ன என்ன முயற்சி செய்யலாமோ அதை எல்லாஞ்செய்து வந்தான் காளி. "அந்த ஊரைத் தனத்துக்கு மீனுச்சி இன் னமே போவவேகூடாது" என்பது அவன் உறுதி. ஆனுல் மீனுட்சி சுந்தரம் தன் பழைய வாழ்நாளை முற்றும் மறந்து விடவில்லை. கனவில் கண்டதுபோல் எல்லாம் ஞாபகத்தில் இருந்தது. தானும் அப்பாவும் ஜமீனுக்கு வேடிக்கை பார்க் கப்போனது; தான் அன்று இரவு அங்கு ஆடிய விளையாட்டு கள்; ஜமீன் குழந்தை எவ்வளவு சின்னதாயும் அழகாயும் இருந்தது என்பது; அன்றைக்கு எப்படி அம்மா தன்னிடம் கோபித்துக்கொண்டார்கள் என்பது முதலாய சில, அவனு க்கு நேற்று நேரிட்டதுபோல் தோற்றின. அல்லது அவன் தான் படித்த படிப்பையும் மறந்துவிட வில்லை. தமிழ் செவ் வையாய் எழுதவும் படிக்கவும் தெரிந்திருந்தான். இளமைக் கல்வி எப்போதும் மறக்காது. மேலும் அவன் கூட்டத்தில் சில படித்த திருடரும் இருந்தனர். ஆகையால், மீனுட்சி சுந் தரம், எப்போதாவது யாராவது தன் பழைய சரித்திரத்தைக் குறிப்பித்தால், அதைப்பற்றித் தெரிய அதிக ஆவல் கொண் டவனுகக் காணப்படுவான். இப்போது இவன் இதைப் படிக்க முயன்று, நிலாவெளிச்சம் போதாதால் சிறு விளக்

கொன்று கொணர்ந்து, 'சோமசுந்தரம்—மீனுட்சி' எனச் சிறு எழுத்தால் எழுதியிருப்பதை வாசித்தான். இதைக்கொண்டு மீனுட்சிசுந்தரம், விளையாட்டாய்ப் பல கேள்விகள் கேட்டு, கூடியவரையில் தன் பழைய சரித்திரத்தை அறிந்தான். ஆகி லும், மணிமங்கலத்தில் மகாதேவருக்கும் இவனுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்குமென்று அறிந்தானே யொழிய வேறில்லை. குழந்தை ஞாபகம் செவ்வையாய் மனத்துள் விளங்கினுலும் அதன் முழு அர்த்தமும் இப்போது தெரியவில்லை.

'சில வருஷங்கள் கழிந்ததும் காளி ஒரு திருட்டில் சுடப் பட்டு இறந்தான். உடனே மீனுட்சிக்கு அந்தப் பட்டங்கட்டி னர். அவனும் கள்வர் அனைவருக்கும் சத்தியக்கட்டுப்பாடு முத லியன செய்து, தன்கீழ்ப் பலரை மந்திரிகளாக நியமித்து, அவர் களிடம் பல விஷயங்களை ஒப்பித்துவிட்டு, தான், திருடர் தம் பேச்சு செய்கை இவற்றினின்றும் மாறும் பொருட்டுப் பல ஊர்களுக்குச் சென்று, செவ்வையாகப் பேசவும் எழுத வும் படிக்கவும் கற்றுக்கொண்டான். ஆனல், இவன், இன் னும் கள்வருக் கெல்லாம் அதிகாரியாயிருந்து யாவரும் இவனை நேசிக்கும்படி செய்தான். அப்படிச்செய்த உடனே, அக்கள் வர் கூட்டத்தைவிட்டு மணிமங்கலம் போவதற்கு என்னெ ன்ன முன் முயற்சிகள் செய்யவேண்டுமோ, அவற்றை எல்லாஞ் செய்து, இன்று சாயந்திரம் தங்களிடம் வந்து சேர்ந்தான் அவன்.' இப்படித் தன் சரித்திரத்தைச் சொல்லி முடித்தவு டன், மீனுட்சிசுந்தரம் வாய் ஓயாது தேம்பினன். தன்னு டைய விதிக்கு ஆற்ருது நொந்தனன். உடனே நான் 'அழாதே அப்பா!' என்று அவனுக்குத் தேறுதல் சொல்லி, பின் எனக் கும் ஆத்திரம் அடக்க முடியாமலிருந்ததால், அதிகமாக ஒன் றும் பேச முடியவில்லை.

"அப்போது அவனது வலது தோட்புறத்து ஒரு பெரு மச்சம் என் கண்ணுக்குப் பட்டது. இதைக் கண்டவுடனே எனக்கு எத்தனையோ கருத்துகளும் பேச்சும் காட்சியும் ஞாப கத்திற்கு வந்தன. மீனுட்சிசுந்தரத்தின் மாசற்ற தேகத்தில் அஃதொன்றே இருந்தது. அவன் குழந்தையாய் இருந்தபோது பலரும் அதை அதிர்ஷ்டக்குறி என்று சொன்னர்கள். ஐயோ! இதுவோ அவன் அதிர்ஷ்டம்! என்று எனக்கு அழு கையும் மனக்கலக்கமும் மேன்மேலும் வளர்ந்தது. உடனே

அவன் தன்னிடத்திருந்த அவ்வயிரக் கண்டிகையை நீட்டி, அதிலுள்ள பெயர்களைக் காட்டி, 'இதைப்பற்றித் தங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா?' என்றான்.

"உடனே நான் எனக்குச் செவ்வையாய் ஞாபகம் இருக்கிறதென்றும், இவ்விரு பெயர்களும் அவன் தாய் தந்தை பெயர்கள் என்றும், அவ்ன் பிதா எனக்குச் சொந்த தமையன் என்றும் சொல்லி மற்றவை ஒன்றுமே கூறாதிருந்தேன்.

''பிறகு அவன் தன் கள்வர்கூட்டத்தை விட்டு வருவதற்குச் செய்த முயற்சிகளைச் சொன்னான். தான் அவர்களிடம் சொல்லாமல் வருவது பேராபத்தென்றும், அவர்களை ஜமீனுக்குக் காட்டிக் கொடுத்தல் அதிக பாவமென்றும், தானே மறுபடியும் அவர்களிடம் போய் அக்கூட்டத்தைக் கலைத்து, அவவரவர்களை அவரவர் ஊருக்கனுப்பி, வேறு தொழில் செய்யும்படி செய்து வரும்வரையில் அவன் விஷயம் இரகசியமாய் இருக்க வேண்டுமென்றும் கூறினான். எனக்கும் இதுவே சரியென்றுபட்டதுடன், அவன் பெருங்குணமுடையவன் என்று நினைத்து ஆநந்தித்தேன். என்னை இனிமேலும் கள்வன் என்று எண்ணுவீர்களோ? என்று மீனாட்சிசுந்தரம் அழுதான். நான் அவனுக்கு எவ்வளவோ சமாதானம் சொல்லித் தேறுதல் படுத்தி, அவன் அக்கூட்டத்தைக் கலைத்து வந்தாலொழிய, அவனைப்பற்றி மணிமங்கலத்தில் ஒன்றும் தெரிவிக்கமாட்டேன் என்று சொன்னேன். உடனே அவன் அக்கண்டிகையை என்னிடம் கொடுத்தனன். அவன் திரும்பி வருவதன் முன் நான் அவனைப் பார்க்கவேண்டில், ஒரு ஊதுகுழலைக் கொடுத்து அதை அடுத்த பெருங்காட்டிலுள்ள அவ்விடம் வந்து ஊதினால் தனக்குத் தெரியும் என்றான். அதுவே நான் உன்னிடம் அளித்ததும். இதனாற்றான் ஷண்முகநாதர் கடித விஷயம்பற்றி உன்னை அவனிடம் பயப்படாது அனுப்பியதும். உடனே சென்றான் அவனும். பிறகே அவன் பெயரால் கடிதம் வந்தது. மற்றதெல்லாம் நீ அறிவை. இப்போதே இன்னும் ஒரு சங்கதி சொல்லலாம். சுந்தரநாதத்தின் பாட்டனார் தான் அத் திருத்தக்கதேவர். மீனாட்சியின் தமயன் பிள்ளை இவன். இவ்விஷயம் நான் அங்கே போயிருந்தபோது அறிந்தேன். வேறு ஒருவரும் இதை அறியார்." என்று முடித்தார் மகாதேவர். "இதென்ன ஆச்சரியம்!" என்று வியந்தான் விஜயம்.

## க௮. சித்திரைமீ உருஉ

நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று,
நீரினும் ஆரளவின்றே, சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக் கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.—தேவகுலத்தார்.

களவுக் கடிதத்தில் குறிப்பிட்ட தேதி வந்தது. இன்றே அக்கொடிய நாளாகிய திங்கள். கிழமை மட்டும் திங்களே அன்றி அன்றிரவு திங்கள் வருவானென்று எதிர்பார்த்தலில்லை. அவனே, தன்னுரு இழந்து, எஞ்சிய இரண்டொரு கலையோடு தாரகைகளின் இடை வர வெட்கியவன் போன்று, இராத்திரிக்கு இடங்கொடுத்து, பரிதியின் ஒளியில் மறைய விரும்பினன் போன்று, கங்குல் ஏகும் சமயத்தில் தோன்றவிருந்தான். இத்தினம் பலர்க்குப் பலவிதமாய்ப் பயன் பட் டிருப்பினும், ஷண்முகநாதர் தம் பரிசுத்த மனத்திற்குப் பாம்பெனத் தோற்றியது. அது உண்மையில் விஷமுடைத்தோ அன்றோ என்பதுதான் அவர் மனதை முள்ளெனத் தைத்தது. விஷமே தர இருக்கில், யாங்ஙனம் அவரும் அவர் தம் அருந்தவப் புதல்வி காருண்யமும் உய்வது? எவர்க்கும் கெடுதி என்பதைக் கனவிலும் நினையா அவர்க்கு எவரோ இக்கொடிய தீங்கியற்ற மனம் இசைந்தனர்? அவர் உலகவழக்கம் பெரிதும் அறியாதார் என்று அவரைப் பரிகாசம் செய்கின்றனரோ? அவர் நன்மையை நாடுகிறார் என்று தீமை பொறாமை கொண்டதோ? தர்மம் தலைக்கொண்டு அவ்வழி பெருகிய செல்வம் அதர்மத்தைக் கோபமூட்டுகிறதோ? அல்லது, அவரிடமுள்ள வெண்முத்துக்காகவோ நுனையர் அவரைச் சுற்றுவது?

“வாஸ்தவம், மகாதேவர் இவையெல்லாம் ஒன்றுமில்லை என்றார். எனக்கு இவையொன்றும் தீங்கு தரா என்றே அவர் சாதித்தார். இதன் உண்மையை உணர்ந்தவரே போன்று அவர் கூறினர். ஆனால் அவருக்கு எப்படி இதன் உண்மை தெரியும்? இவ்விஷயத்தின் நிஜத்தை அறிய அவருக்குப் பல வழிகள் இருக்கலாம். அவர் என்னைப் போன்றவர் அல்லர். உலக விவகாரம் முற்றும் உணர்ந்தவர். ஒன்றையும் தனக்கு அங்கை நெல்லி எனத் தெரியாத உரையார். ஆகையின், அவர் இவ்வளவு தைரியமாயும் நிச்சயமாயும் சொல்வ

தற்குப் பல காரணங்கள் இருத்தல் கூடும். ஆயினும், இவ் விஷயத்தில் அவரும் ஒருகால் ஏமாறியிருக்கலாம். காட்டு மயிலூர்க்காளி என்ன அவருக்குச் சொந்தமோ, அவனைக் கொண்டு உண்மையை அறிய? ஆகையின் அப்பெருங் கள்வனே இக்கடிதம் எழுதி இன்று வரினும் வரலாம். அல்லது அவன் பெயரால் மற்றியாவரோ கொடியர் வரைந்திருந்து வரினும் வரலாம். அப்படி வரநேரிட்டால் நான் என்ன செய்வேன்! யாரிடம் உதவி கேட்பேன்! ஒருகால் இப் பாழ்ங் கடிதத்தை முன்னமேயே வெளிப்படுத்தியிருப்பின் விஷயங்கள் வேறுவிதமாய் மாறியிருத்தல் கூடும். அந்தோ! இதையும் அவர் கூடாதென்றார். என்னே என் ஊழ்வினை! என்னே என் ஏழைமை!" என்று இவ்விதம் ஷண்முகநாதர், தம் வீட்டுப் பெரிய கூடத்தில் நின்று சிந்தித்து வருந்தினர்.

இவ்வணம் இவர் மனம் நெருப்பிலிட்ட வெண்ணெய் என உருகா நிற்கும்போது, காருண்யத்திடம் இவ்விஷயம் சொல்லாதிருப்பது பிசகு எனப்பட்டது. இன்றைக்காயினும் உண்மையை அவளிடம் வெளியிடுவது அத்தியாவசியம் எனத் தோன்றியது. தான் படும் கஷ்டமெல்லாம் அவள் தன் சௌக்கியத்தையும் சந்தோஷத்தையுமே கருதியிருக்க, இதை அவளிடம் மறைப்பதனால், அவளுக்கு ஒருகால் இது அதிக கஷ்டத்தைத் தரலாம் என்று நினைக்க மனம் நடுங்கினர். ஆகவே காருண்யத்தை உடனே அழைத்துச் சங்கதியை உரைத்து, தன்னை அதன் மூலமாய்த் தைரியப்படுத்த நினைத்தார். ஆனால் இவ்விஷயம் தான் மிகவும் பயந்தபடி முடியுமென்று அவளுக்குச் சொல்ல அவருக்கு இஷ்டமில்லை. கடிதம் வந்ததும் அதைப்பற்றி மகாதேவர் பல விதமாக ஆராய்ந்து அதனால் ஒருவித தீங்கும் நேரிடாதென உரைத்தாரென்றும், எதற்கும் நமக்குத் தைரியஞ் சொல்லவும் ஒரு விதமாக நமக்குக் காவல் புரியவும் விஜயம் இன்று இங்கு வருகிறான் என்று மாத்திரமே சொல்ல இசைந்தனர். தாம் எவ்விதமான கஷ்டம் உறினும், தம் அன்பிற்கு உரியார் அக்கஷ்டத்தை அறிவது சரி அன்று எனத் தோற்றும் இவ் அறிவு யாங்ஙனம் உதித்தது? தன் மனக்கிலேசங்களை அவர் அறிந்தக்கால், அவரும் மனக்கிலேசம் உறுவது திண்ணம் என்ற இவ் எண்ணம் அன்றோ இங்ஙனம் நடுநின்று தடைசெய்வது? இதுவேயோ அன்பின் மாட்சி?

ஷண்முகநாதர், தாம் கோரியவண்ணம் தம் அருமைப் புதல்விக்கு இவ்விஷயத்தைக் கூறி முடித்து, விஜயம் இன்றிரவு இங்கிருந்து அவர்களுக்குத் துணைபுரிவான் என்றலும், காருண்யத்திற்கு இக்கடித விஷயத்தால் முதலில் உண்டாய துன்பம் இன்பமாக மாறிற்று. காதல் என்னும் மஹேந்திர ஜாலக்கள்வன் செய்யும் கோலம் அல்லவோ இது! "அத்தான் இங்கு வந்து இன்றிரவு முழுவதும் இவ்விடம் இருப்பார்கள்; பின் நமக்கு யாவரே தீங்கு இயற்ற வல்லார்? பிறகு தீங்கு என்பதும் ஒன்று உண்டோ? அத்தான் அருகில் இருக்கும் போது எவ்வித துன்பத்தை நான் நினைக்க முடியும்? அத்தான்! துன்பம் வந்தபோதுதானு நீங்கள் எங்களுக்கு உதவி புரிவீர்கள்; நாங்கள் சந்தோஷமுறுங்காலத்து நீங்கள் அதைப் பங்கிட்டுக்கொள்ள மாட்டீர்களா? என்கொல் உங்கள் கருணை! உங்கள் பெருந்தன்மைக்கும் ஒரு வரம்புண்டோ? ஓ அழகில் சிறந்த அம்புலியே! எங்களுக்கு இடுக்கண் இப்போதே வந்தது. நீங்கள் ஏன் இன்னம் வராதிருக்கின்றீர்கள்?" என்று புளக மெய்தினள் விஜயத்திற்குத் தன் மனத்தையே ஈந்த மங்கை.

இம்மன எழுச்சி சற்று அடங்கியபின்னர். தான் அறிந்த இவ்விஷயம் உண்மையில் கெடுதி உடைத்தாயின், இது தன் தந்தைக்கும் விஜயத்திற்கும் எவ்வளவு துன்பம் தாராது என்று நினைத்து மனம் உருகினள். ஒருகால் விஜயம் இன்று இங்கு வராதிருத்தலே நல்லது என்று எண்ணினள். "அத்தான் ஏன் இக்கஷ்டத்திற்கு மட்டில் பாத்தியப்படவேண்டும்? எனக்கு வருந் துன்பங்களில் என் மனம் அறிந்து அவர்கள் பங்கிடலாமா? அந்தோ நான் அவர்களுக்குக் கஷ்டம் விளைக்கும் கடு நிலமோ? . . . அது அப்படி அன்று. நான் மாத்திரம் துன்புற்றேனுல் அது அவர்களுக்கு எவ்வளவு துன்பந் தரும். என் மனக்கிலேசத்தில் அவர்களுக்கு ஒரு பங்கு இருக்கில் அது அவர்கள் மனதிற்கு ஆறுதலைத் தராதோ? என்னிடம் அவர்களுக்கு உள்ள அன்பு எவ்வளவென நான் அறிவேன்! நான் பிதற்றும் தன்மையை உடையேன்; அவர்கள் எதையும் மனத்துள் அடக்கி வெளிக்காட்டாது எகும் ஆழ்ந்த உள்ளத்தினர். ஆகவே அவர்கள் இங்கிருந்து நமக்கு உதவி செய்வது எவ்விதத்தும் நன்மை உடைத்தே." என்று பலப்பல விதமாய்ச் சிந்தித்தாள்.

இவ்விதம் எதிர்பார்க்கும் இவ் இருவரும் சந்தோஷமுற, விஜயம் அன்று சாயந்திரம் அவர்கள் வீட்டிற்கு வந்து சேர்ந்தனன். எந்த நிமிஷம் வருவார்களோ என்று எதிர்ப்பார்த்த வண்ணம் இருந்த காருண்யம், விஜயம் தூரத்தில் வரக்காண்டலுமே முகமலர்ந்து "அத்தான் வந்து விட்டார்கள் அப்பா!" என்று புளகாங்கிதங் கொண்டனள். அவன் வந்த பிறகுந் தன்னை அறியாது தனக்குத்தானே, அத்தான் வந்து விட்டார்கள், அத்தான் வந்து விட்டார்கள் என்று அடிக்கடி சொல்லிக்கொள்ளுகிறதாக நினைத்தாள். பிறகு அம்மூவரும் கூடத்திலிருந்த பீடங்களில் அமர்ந்து இவ்விஷயத்தைப் பற்றிப்பேச ஆரம்பித்தனர். காருண்யம் தன் தந்தை உட்கார்ந்திருக்கிற சோபாவுக்குப் பக்கத்துள்ள மற்ருென்றைப் பிடித்து அதன்மேல் சாய்ந்த வண்ணம் விஜயத்தை நோக்கி நின்ருள். விஜயமும் அவளைப் பலகால் பார்த்து மகிழ்ந்தனனேனும், முக்கியமாய்ப் பேசப் புகுந்த விஷயத்திலேயே கருத்துடையவனுகக் காணப்பட்டான். காருண்யமும் அவ்விஷயத்தில் மிக்க கவனம் செலுத்துபவள் ஆயினும், அதை அத்தான் எவ்விதம் கருதுகிருர்கள்; அதைப்பற்றி அத்தான் எவ்விதம் பேசுகிருர்கள்; அவர்கள் அதைப்பற்றி பேசும்போது அவர்கள் முகம் எவ்வளவு அழகாய் இருக்கிறது என்பதையே எண்ணினள்.

ஷண்முகநாதர் "மகாதேவருக்கு எப்படி இதன் உண்மை தெளிவாய்த் தெரிதல் கூடும்?" என்று சந்தேகித்தார்.

"அவர்கள் பல வழிகளால் இதை அறிதல்கூடும். அவர்கள் நிச்சயமாய், இதனுல், ஒன்றும் தீங்கில்லை என்று உரைக்கின்ருர்கள். ஆகவே நாம் இதைப்பற்றிக் கவலை அடைதல் கூடாது." என்று, தனக்கு இதைப்பற்றி இதைவிட வேருென்றும் தெரியாதவன்போன்று உரைத்தான் விஜயம்.

"ஆயினும் எழுதினவர் இன்னுர் என அவர்க்குத் தெரியவில்லையே." என்ருர் ஷண்முகநாதர்.

"அதுதான் நம் வேலை. அதற்காகவே நான் இன்று இங்கே இருப்பதும். ஒருகால், இதன் உண்மையை நாம் இன்று உணர்தல்கூடும்." என்று உரைத்து விஜயம் காருண்யத்தைப் பார்ப்பதன் முன்னர், அவள்முகம் சற்றே வெதும்புவதாயிற்று. மற்று, அவன் புன் சிரிப்போடு இவண் நோக்கலும் வெதும்புவது போய் வெட்குவதாயிற்று.

"எனக்கு இன்றுவரையிலும் இதை உரைக்காததின் காரணம் என்னவோ?" என்று காருண்யம் விஜயத்தை நோக்கி உரைத்தனள்.

"உதவி செய்யமாட்டாது, தம்மைத் துயரத்துக்குள்ளாக்கும் உன்னைப் போன்றவர்க்கு இவ்விஷயம் இன்றைக்கு முன்னமே தெரிவானேன்?" என்றான் குறு நகைக் குமரன்.

"உதவிசெய்ய முடியாதபோது, உங்கள் கஷ்டத்தை என்னைப் போன்றவர் கொஞ்சமாயினும் குறைக்க இயலாதா?" என்று காருண்யம் பேசத் தீர்மானித்தவள் போன்று போராவலோடு மொழிந்தனள்.

"கொஞ்சமாயினும் குறைப்பாய் என்று நம்பியேதான் இன்றைக்கு அறிவித்தது. காருண்யம், இது தெரியாதா?" என்றான் விஜயம்.

"இது காருண்யத்திற்குத் தெரியாது." என்றாள், காருண்யம் என்று பரிவுடன் விஜயம் அழைத்ததை மறக்க மனம் வாராத மருள்கொண்ட மனத்தினள்.

இங்ஙனம் மொழிந்து பேச்சை வெளிப்படையாய் நேசக் கால்வாயில் திருப்பியதும், விஜயம் ஷண்முகநாதரை நோக்கினன். இதன்கண் கால்வைக்கப் பின் வாங்கினன் விஜயம். இது தெரிந்து சிந்திப்பாள்போல் தோன்றினள் உணர்ச்சித் திறம் வாய்ந்த நம் காருண்யமும். கூரிய அறிவும் செவ்விய மனமும் வேர் ஊன்றிய காதலும் உடைய இவ்விருவர் மனத்தின் முழு ஆற்றலையும் ஷண்முகநாதர் அறிந்தனரில்லை. ஒருவரை ஒருவர் என்றும் பிரிந்து வாழாப் பெருங் காதலர் இவ்விருவர் என்பதை ஒரு சிறிதும் அறியார். காதற்கொடி ஒன்றிற் பூத்த இரு நறு மலர் ஆவர் இவர்கள் என்று அவர் உணரவேயில்லை. இவ்விருவர் பேசுகையில், எதிர்பார்க்கும் அபாயகரமான விஷயத்தில் பாதிமனதைச் செலுத்துபவராகவும், மற்றப் பாதியை இவர்கள் பேச்சைக் கவனிப்பதில் செலுத்துபவராகவும் இருந்தார் ஷண்முகநாதர். தம் வாழ்க்கை முழுதும் தம் அருங் குமரியின் சந்தோஷத்தின்பொருட்டெ்ன முழுமனத்தோடு எண்ணும் இவர், அவள் சந்தோஷமுற்ற வழி, சந்தோஷமுறுவது இயற்கையே. ஆகவே, இவ்விருவர் தம் இனிய அசைவுள்ள குரல் அவர்க்கும் இனிமையைத் தந்தது. இவர்கள் தாங்கள் பேசுவதை

நிறுத்தியும், இன்னும் இவர்கள் பேசுவதாகவே நினைத்தார். இக்களிப்பில் சற்றே அக்கொடிய விஷயத்தை மறந்தனர் அவர். இதனிடையில் விஜயம் சற்றுப் பரிஹஸிக்கும் வண்ணம்,

"மாமா! தங்களிடம் நிறையப் பணம் இருக்கிறதோ?" என்ருன். விஜயத்திற்குத் தான் கேட்கிற கேள்வி இன்னது எனத் தெரியும். ஆனல் இக்கேள்வி, தாம் எதிலிருந்தும் தப்பமுயன்ருரோ அதற்கே மறுபடியும் அவரை இரக்கமில்லாமல் திருப்பிற்று. காருண்யத்தின் கரிய நீண்ட விழிகள் ஒரு புறமும் தங்காது இங்குமங்கும் ஓடித் தாழ்ந்தன.

"ஆம் விஜயம், என்னிடம் திரவியம் நிறைய இருக்கிறது. ஆனல் இதுதான் என் திரவியம் அனைத்தினுக்கும் முடிமணி." என்று காருண்யத்தைச் சுட்டிக் காட்டினர் களங்கமில் பிதா. விஜயத்திற்கு இது அளவில் மகிழ்ச்சி உண்டாக்கிற்று. காருண்யம், இது அத்தான் அவர்களின் வேடிக்கை என வெட்கித் தலை குனிந்தாள். எனினும் அவள் இதை வெறுத்தாளில்லை. "இம்மணிக்குத் தீங்கு வாராதாயின் எனக்கு ஒரு கவலையும் இல்லை. என்ன விஜயம் நேரமாகிறதே." என்ருர் ஷண்முகநாதர். ஆம் என்று இம்மூவரும் எழுந்து செய்வன செய்து உண்ணற்பொருட்டுத் தயாராயிருந்தனர்.

இன்றே காருண்யம் வீட்டில் காருண்யம் அன்னம் இட விஜயம் உண்டது. இன்றே காருண்யம் தான் கொண்ட காதல் கருக்கொண்டதென நினைத்து எல்லையில் இன்பம் எய்தினது. விஜயத்தின் மனம் நெகிழ்ந்து காதற் கால்வாயில் முற்றுந் தடையின்றி ஓடினதும் இன்றே. இன்றே விஜயத்திற்கு, காதல், மறைந்து வெளித்தோன்ருத் தன்மையதன்று, மற்று, உள் நிற்கும் ஆற்றலின்றி மேல் சொரிந்து ஒவ்வோர் அணுவிலும் விளங்கிப் பெருங்களிப்பில் விளையாடும் பேதை எனத் தோன்றிற்று. காதற் சந்திரன் தோன்றியக்கால், அவன்தன் வெள்ளிய ஒளி, எவற்றின்மீது படினும், அவற்றை யெல்லாம் அழகு செய்யும் ஆற்றல் உடைத்தென இன்றே அறிந்தனன் நம் விஜயம். காருண்யத்தால் பரிமாறப்பட்ட இவ்வேளை உணவு எதற்கும் ஈடென நினைத்தான் காதலனான விஜயம். ஷண்முகநாதர் விஜயத்திற்கு அரிய உபசாரஞ்செய்தும், சொல்லாது உபசரித்த காருண்யத்தின் செய்கைகள் விஜயத்தின் மனதில்

வேர் ஊன்றியிருந்த காதற்கொடியை மலர் பல அரும்பச் செய் தன. விஜயத்திற்கு இப்பணிவிடை செய்ய நேரிட்டதே, தான் செய்த பாக்கியம் என்று நினைத்துக் களிப்பின் கரை யை அடைந்தாள் காருண்யம். உணவு முடிந்து, தாம்பூலம் அருந்த நேரிட்டபோது காருண்யத்திற்கு இன்னது செய்வது தகும், இன்னது தகாது என ஏற்படவில்லை. விஜயத்தோடு தாம்பூலம் மாற்றிக் களிப்புறுவது கன்னிகைப் பருவத்திற்கு சரியன்றோ எனச் சந்தேகித்தாள். எனினும் அதில் குற்றம் ஒன்றும் இருப்பதாக அவளுக்கு ஏற்படவேயில்லை. "அப் படியானால் அத்தானை நான் காதலிப்பதும் கன்னிகைக்குத் தகாத காரியமன்றோ?" என நினைக்கப் பெருஞ்சிரிப்பு எய்தி னள். விஜயத்தின் மனதிலும் பல எண்ணங்கள் உழன்றன. எனினும் இவன் புருஷன்; கல்வி வல்லான்; மனத்தை அடக்கும் ஆற்றலன்.

ஷண்முகநாதர் இவ்விருகாதலர் செய்கைகளை இன்று கவ னித்தவராயினும், அவர் இப்படிப்பட்ட அவஸ்தையில் அகப்பட்டு அதன் விகாரங்களை அதிகம் அறியாமையினா லோ; அல்லது வயது சென்றவர்களுக்கு இளமாந்தர் தம் செய்கை சாதாரணமாய் அர்த்தமில்லாது போவதனாலோ; இவ்விருவர்களுக்கும் கல்யாணஞ் செய்வது தம் கடமை என் பதை அறியாது, இவ்விருவர்களுக்கும் மணம் முடித்தால் அஃது எவ்வளவு சிறப்பாயிருக்கும் என்பதனையே அறிந்தார். இவ்விருவரையும் ஒன்று சேர்க்கலாம் என்பதை உணர்ந் தாரே அன்றி, ஒன்று சேர்க்க வேண்டும் என்னும் அவசி யத்தை அறிந்தாரல்லர். இவ் அத்தியாவசியத்தைக் காதலன்றி, மற்று அக் காதலை உலகவழக்குக்கு ஒப்ப, கல்யாணம் என அழைக்க உதவும் ஏனையோர் அறியா திருப்பதே, கல்யாணங் களால் வருந் தீமைக்குக் காரணம். இத்தீமை கல்யாணம் என் னப் பெறாத காதலால் வருந் தீமையினும் பதின்மடங்கு கொடி யது. இருபால் சம்பந்தம் உறுவதற்கு உட்பெயர் காதல் என் றும், உலக வழக்கில் வெறும்பெயர் மணம் கல்யாணம் என் றும் வழங்குகின்றது. இருவர்க்கே தெரிந்த காதல் என்பது வெளித் தெரிந்தக்கால் கல்யாணம் என வழங்கப்பட்டது போலும். இவ்வழக்கொழிந்து, கல்யாணம் என ஒன்றற்குப் பெயர் கொடுத்து, அப்பெயர் மகிமையால் காதலை உண்டாக்

குவது, தெனலிராமன் காரியம்போலாம். காதலைக் கல்யாணம் என வழங்காவிடில் அது பெரிதும் இடுக்கண் உறாது. ஆனால் கல்யாணத்தைக் காதல் என்பதே உலகத்தில் உள்ள துன்பங்களில் பாதிக்குக் காரணம் ஆகிறது. உயிருடைய உடம்புக்கு உடைஅணிதல் இயற்கை. உடைஅணிந்த ஒன்றனுக்கு உயிர் வரவழைத்தல் மனிதன் திறம் அன்று.

ஷண்முகநாதர், காருண்யம், விஜயம் இம்மூவரும் மணி எட்டாகவே கூடத்திற்கு அடுத்த அறையில் வந்து சேர்ந்தனர். வீட்டின் எல்லாக் கதவுகளையும் வேலைக்காரன் பந்தோபஸ்து செய்தானா என்று ஷண்முகநாதர் பார்க்கச்சென்றனர். விஜயம் அவ் அறையின் ஜன்னலில் ஏதோ செய்துகொண்டிருந்தான். காருண்யத்திற்குத் திருடன் ஞாபகம் எல்லாம் போய்த் தான்திருடும் எண்ணம் வந்தது. தன் தேகம் பெருமகிழ்ச்சியினாலும், அளவற்ற ஆசையினாலும் நடுங்கிற்று.எனத்தோற்றிற்று. அப்போது அவள் தன்னையும் அறியாமல் விஜயத்திற்கு அருகில் வந்து "அத்தான் இதோ பாருங்கள் மாங்கல்யம்." என்றுதான் இருவாரமாய் அலங்கரித்த வெண்பட்டுச் சவுக்கத்தை அவன் கழுத்தில் இட்டு வேறொன்றுஞ் சொல்ல வாய் எழாது விரைவாய்ப் பின்வாங்கினள். தன்மனம் எவ்வளவு குற்றமற்றது என்று அவளுக்குத் தெரியினும் தான் செய்தது உலக வழக்கில் குற்றம் ஆயிற்றே என்றும், அத்தான் இப்போது என்ன நினைக்கிறார்கள் என்றும் பெரிதும் நாணி தனக்குத் தானே கோபமுற்று, விஜயத்தினின்றும் விலகித் தனித்து நின்றனள். விஜயம் அதிக மகிழ்ச்சி கொண்டனனேனும், தான் அதை வெளிக்காட்டல் தகுதியற்றதென்று மனதைப் பெரிதும் அடக்கி, பின், காருண்யம் வருந்துகின்றாள் என்று தெரிந்தபோது அவளைத் தேற்றுவான் அவள் முக நோக்கி நகைக்க முயன்றனன். உடனே ஷண்முகநாதர் வந்து, விஜயஞ்செய்யும் வேலைக்கு உதவி புரிந்தனர். தான் உள்ளிருந்தபடியே தெருவிலும் வீட்டின் பக்கங்களிலும் வருபவரைப் பார்க்கும் வண்ணம் செய்யும் ஒரு தந்திரமே அது. இவர்கள் இது இயற்றியதும், உறங்காது இங்கே இருந்து,இன்றிரவு ஏதாயினும் நடப்பின், அதை அறியலாம் என்று இருந்தனர்.

மணியோ பத்து, பதினொன்று, பன்னிரண்டும் ஆயிற்று. ஆகாயத்தில் நட்சத்திரங்கள் இறைந்து கிடந்தன. இருட்டு எங்கணும் நிறைந்தது. ஓசை இலதாயிற்று. மனப்படி றில்லா மாந்தர் யாவரும் சுழுத்தியில் ஆழ்ந்தனர். விழித் திருந்த இம்மூவருங்கூட ஒன்றும் பேசாராய், மங்கிய ஓர் சிறிய வெளிச்சத்தில், தெரிந்தவரையில் ஒருவர் மற்றவர் முகத்தைப் பார்த்துத் தமக்குள் தாமே சிந்தித்திருந்தனர். காதலும் சற்று மறைந்தது. பயம் வெளிவந்தது. ஒன்றும் விசேஷம் நடக்கலாகாது என விரும்பியும், அந்நிலைமையில் ஏதாயினும் விசேஷம் நேரிடவேண்டும், நேரிடும், என, விரும் பாது விருப்பி யாவரும் கவனித்தனர். மணி ஒன்றாயிற்று. தூங்கும் காற்றில் மரங்கள் இரகசியம் பேசுவதுபோல் சில காலடிகள் தெருப்பக்கம் கேட்டன. விஜயம் நன்றாய்க் கண் ணைத் துடைத்துச் சந்து வழியாய்ப் பார்த்தான். காருண்யம் அவன் பக்கல் வந்தனள். பின்னும் சில அடிகள் கேட்டன. இங்கே இவர்கள் இருதயம் அடிக்க ஆரம்பித்தது. ஷண்முகநா தர் தம்மை அறியாமல் வாயை மூடினர். தம் மார்பு அடிப்ப தும் தாம் மூச்சுவிடுவதும் அவர்களுக்குக் கேட்கும் எனப் பயந்தார். பின்னும் சில காலடிகள் சற்று வேகமாய் வந்தன. ஒரு சிறு குரல் கேட்டது. சற்றுப் பெருங் குரல் கேட்டது. காருண்யம் விஜயத்தின் அருகே நெருங்கினள். ஷண்முக நாதரும் அருகில் வந்தனர். விஜயம் பார்த்தபடியே இருந் தான். காருண்யத்தைத் தன்னையும் அறியாமல் ஒரு கையால் பிடித்துத் திடப்படுத்தினன்.

மனிதர் பலர் இவர்கள் தலைக்குமேல் பேசினர். சற்றுப் பொறுத்ததும் பலர் குதித்தனர். வீட்டிற்கு எதிரில் பின் வரு மாறு பெருங்குரல் ஒன்று கேட்டது: "நீயோ காட்டு மயி லார்க்காளி!" விஜயத்திற்கு இக்குரல் நன்கு தெரிந்தது உடனே "பிடி, கட்டு, விடாதே" என்று அதே குரலிற் கேட் டது. விஜயம் தற்செயலாய் 'ஒஹோ' என ஓங்கிக்கூவி வெளி வர முயன்றனன். இதற்குள் வெளியில் பலர் ஓடுவதே போல் இருந்தது. பிறகு சத்தம் இல்லை. தூரத்தில் விரைந்து செல்லும் காலடிகள் கனவிற் கேட்கும் சத்தம் எனக் கேட் டன. இவையெல்லாம் பத்து நிமிஷத்து வேலையே. விஜயத் திற்கு வீட்டைக் கொள்ளைகொள்ள முயன்றார் இன்னாரென்று

தெரியவில்லை; மீட்டவர் இன்னாரென்று தெரியுமென்று நினைத்தான். மற்ற இருவரும் ஒன்றும் அறியாது திகைத்து, "என்ன ஆச்சரியம் இது! என்ன மஹேந்திரஜாலம் இது! -ஆ ஆ, என்ன புதுமை!" என்று ஆச்சரியமும் அச்சமும் உற்றனர்.

## கக. ஊர் உறை கள்வன்.

என்றும்
காய்சினம் தவிராது கடலூர் பெழுதரு
ஞாயி றனையை நின் பகைவர்க்கு.
திங்கள் அனையை எம்ம னோர்க்கே.—சீத்தலைச் சாத்தனார்.

விடிய இன்னும் இரண்டே நாழிகை இருக்கின்றன. வானத்தின் கீழ்த்திசையில், நாணம் இன்றிக் கண்சிமிட்டும் கார்த்திகை நட்சத்திரங்கள் அறுவர் மத்தியில், ஒரு கலையைத் தவிர மற்றவை களைந்து, அவர்களோடு அளவளாவி இருந்தான் வெளிறிய பிறைச் சந்திரனும். இதனைக் கண்டு ஆற்றாராய் ஏனைய நட்சத்திரங்கள் இவர்களினின்றும் விலகின. உரோகிணி, 'என்னிடம் இம்மானமிலன் ஒரு கலையும் இன்றி அன்றோ வருவன்!' என்று வெட்கத்தினால் வெளுத்தனள். மிருகசீரிஷம் தன்னை அறியாது போவனோ என்று எண்ணிக் கைகளால் வழிமறிப்பதே போன்றது. வான் வரம்பில் காலை வெள்ளி மட்டும் பால் எனத் தோன்றி வைரம் என மின்னினன். ஆனால், இருள், 'என் உயிர் நீங்குவது இவ்வளவு நிச்சயமாயின், நான் இருண்டே தீர்வன்' என்றனள். காட்டில் உள்ள பெருமரங்கள் தூக்கத்தினின்றும் கைகால்களை உதறி எழுந்தன இவைகளின் இடையில் அகப்பட்டு ஓடு காற்றும் தேம்பிற்று. இவ்வோசையால் விழித்துக் கொண்ட பறவைகள், பயத்தால் தங்களுக்குத் தெரிந்த விதமெல்லாம் கூவின. ஆந்தைகள் கண் அவிந்து போகுமேயென அலறி அழுதன. இராத்திரி எல்லாம் அலைந்து திரிந்து, இருள் நங்கையால் உதவிசெய்யப்பட்டு, அகப்பட்ட இரையைத் தின்று தம தம் குகையினிடம் சென்றன புலிகள். இவை யாவற்றையும் கவனித்துச் செல்லும் கானாறு களகள என நகைத்தது. மற்று, இவை ஒன்றையுமே கவனியாது, மலைக்கு அடுத்த பெருங்காட்டின் பெருமரங்களுக்கு இடையில் இருக்கும் ஒரு சிறிய வெளியில் அலையோடிக்கிடக்கும் பசும் புல்லின்மீது அறுவர் இருந்தனர். அவர்க

ளில் மூவர், கை கால்கள் கொடிகளாலும் கயிறுகளாலும் கட்டுண்டு, மூட்டை என உருண்டனர். ஒருவன் அங்குள்ள ஓர் உயர்ந்த பாறையில் உட்கார்ந்திருந்தான். அவனே காளி. எஞ்சிய இருவரும் புல்லிற்புரளும் மூவரையும் ஏதோ கேட்டனர்.

பிறகு காளி பாறையினின்றும் எழுந்து தனக்குச் சமீபத்தில் தவழும் ஒருவனிடம் வந்து, "கடிதம் எழுதினது நீதானு?" என்ருன்.

ஆம் என்ருன் கடிதம் எழுதியதின் பலன் கண்ட சுந்தரநாதம்.

"கடிதம் ஏன் காட்டுமயிலூர்க்காளி பெயரால் எழுதினுய்?" என்ருன் காளி.

"காட்டுமயிலூர்க்காளி மிக்க பேர் பெற்றவன் ஆகையால், அவன் பெயரால் எழுதினுல் மிகவும் அஞ்சுவார்கள் என்று நினைத்தேன்." என்ருன் காரியதரிசியின் கையாளான சுந்தரநாதம்.

"உனக்குத் திருடுவது தொழிலா?" என்ருன் காளி: இக்காலை வெளிச்சத்திலும் சுந்தரநாதத்தின் முகம் திருடுவதற்கென அமையவில்லையென்று பட்டது காளிக்கு. காளி அடிக்கடி சுந்தரநாதத்தைக் கேள்விகள் கேட்கும் போதெல்லாம், அவனுடைய குரலும் வார்த்தைநயமும் அவனுக்கு மிக இனிமையாய் இருந்தன எனவே சற்று மனந்தளர்ந்து சுந்தரநாதத்தைக்கட்டியுள்ள தளைக்ளை அவிழ்க்கலாம் என நினைத்தான்.

"ஓ ஓ—இல்லை இல்லை—இல்லை." என்ருன் சுந்தரநாதம். அவனுக்கு மேல் பேச முடியவில்லை. காளியின் கேள்வி அவன் காதில் இடி என விழுந்தது. சுந்தரநாதத்தின் அறிவின் சுருக்கத்திற்கு இது நல்ல சாட்சி. தன் மனதில் ஒரு விஷயத்தைப்பற்றி என்ன எண்ணியிருந்தானே அதைப் போலவே பிறரும் அதைப்பற்றி நினைப்பர் என்று நினைத்தான். ஆகவே இப்போது காளி கேட்ட கேள்வி, சுந்தரநாதத்திற்கு, தன் தப்பிதத்தை எவ்வளவு பெரியதாய்ப் பிறர் கருதக்கூடும் எனத் தெரிவித்தது.

"இல்லையா?" என்ருன் காளி.

"இல்லை இல்லை—இது வேறு விஷயம். நான் உங்களுக்கு முழு விவரமும் சொல்லுகிறேன். அப்போதுதான் அதன் உண்மையை நீங்கள் அறிவீர்கள்." என்று சுந்தரநாதம்

தனக்குத் தெரிந்ததைச் சொல்ல ஆரம்பித்தான். காளி, இப்போது மனநெகிழ்ந்து, இவனைக் கட்டிய சில கட்டுகளையும் அவிழ்த்துவிட்டனன். "நான் மதுரையிலிருந்து மகாதேவரால் இங்கே கொண்டுவரப்பட்டு, ஜமீனில் பல சிறு உத்தியோகங்களிலிருந்து, பின், காரியதரிசிக்கு உதவிகர்த்தாவாக நியமிக்கப்பட்டேன். மகாதேவர் பெண் கண்ணகியை எனக்குத் தருவதாக அவர்கள் கருத்து. நான் அப்பெண்ணிடம் அதிக அன்புடையவனுபினும், ஷண்முகநாதருக்குப் பணம் அதிகம் இருப்பதாலும், அவர்மகள் காருண்யம் அதிக அழகாய் இருப்பதாலும், காருண்யத்தைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள எனக்குப் பிரியம் உண்டு. அதற்காக என்னிடம் ஷண்முகநாதருக்குப் பிரியம் வரும்படி என்ன செய்யலாம் என்று காரியதரிசியைக் கேட்டேன். அதற்கு அவர் இந்த மாதிரி விளையாட்டாய் ஷண்முகநாதர் வீட்டில்ஒரு நாள் சில வேலைக்காரர்களைத் திருடர்கள் போல் ஏவி, அவர்கள் திருடுவதாகப் பாவனை பண்ணும் சமயத்தில், நான் திடீரென்று போய் ஷண்முகநாதருக்கு உதவியாப அவர்களை ஓட்டிவிடுவது என்றும், அதுவே ஷண்முகநாதரும் காருண்யமும் என்னை நேசித்து, என் இஷ்டத்தைப் பூர்த்திசெய்யத்தக்க வழியாகும் என்றும் சொன்னார். அதற்குமேல் நான் அதுவே சரிஎன்று சொன்னதும் அல்லாமல், இவ்விஷயத்தைக் கடிதமூலமாய் மதுரைப்பக்கங்களில் செய்வதுபோல் முன்னமே தெரிவிக்கலாம் என்றேன். அவரும் சரியென்று காட்டு மயிலூர்க்காளி பெயரால் எழுதலாம் என்றார். அப்படியே செய்தேன். ஆனால் அக்கடிதத்தை ஷண்முகநாதர் வெளியில் காட்டுவார் என்று நினைத்தோம். அவர் காட்டவில்லை. ஆகவே, காரியதரிசி, முன் நினைத்தபடி செய்வதே சரி என்று, எல்லா ஏற்பாடும் செய்து இன்றைய இரவு அனுப்பினார். பிறகு நடந்தது உங்களுக்குத் தெரியும்...என் தொழில் திருடுவதா? பாருங்கள்." என்று வருந்தினான் உண்மை அறியாச் சுந்தரநாதம். "உன் தொழில் திருடுவது அல்ல. ஆனால் காரியதரிசியின் தொழில் திருடுவது போல் இருக்கிறது." என்றான்காளி. "இல்லை இல்லை. அவர் பெரிய ஜமீன் உத்தியோகஸ்தர்." என்றான் சுந்தரநாதம்.

"திருடன் அல்லாவிடில் ஒருவரோடு சிநேகம் செய்ய, திருட்டு வழிகளைவிட வேறு வழிகள் இல்லையோ?" என்றான் காளி.

"இல்லை, விளையாட்டுக்குத்தான்." என்றான் சுந்தரநாதம். இப்போதுதான் இவனுக்குக் காரியதரிசி சொன்னவழி எவ்வளவு அசங்கியமும் குற்றமும் உள்ளது எனத் தெரிந்தது.

சற்று யோசித்தான காளி. அவனுக்குச் சிரிப்பும் வந்தது. விசனமும் வந்தது. உடனே. "கொக்குத் தலையில் வெண்ணெய் வைத்து, பிறகு அது உருகிக் கண்களில் வந்தபோது, கொக்கைப் பிடிக்கும் கதை உனக்குத் தெரியுமா?" என்று சிரித்தான் காளி.

சுந்தரநாதத்திற்கு இக்கேள்வியின் நிந்தையும் இழிவும் தெரிந்திருப்பினும் பயத்தினால் இதற்கும் "தெரியும்" என்று பதில் சொன்னான். ஆனால் காளிக்கு இன்னும் மிக்க இரக்கத்தை உண்டாக்கிற்று இது.

இவ்விவரம் தெரிந்த காளி சற்றே யோசிக்கலானான்: "மகாதேவர் இவனுக்கு இவ்வளவு உபகாரம் செய்திருந்தும் இவன் அவருக்கே தீங்கியற்றும் தன்மையன் ஆயினன். ஷண்முகநாதர் இவனுக்கு ஒன்றும் கெடுதிசெய்யாதிருந்தும் அவரை வஞ்சிக்க முயன்றனன். ஆனால், காரியதரிசிக்கும் இவனுக்கும் உள்ள சம்பந்தம் முழுவதும் தெரியவில்லை. காரியதரிசி திருடனில்லை எனில் அவனுக்குத் திருட்டு ஆட்கள் எதற்கு? எல்லாம் விசாரிப்போம்.' என்று நினைத்து மற்ற இரண்டு ஆட்களையும் கிட்டவரச்செய்து விசாரிக்க ஆரம்பித்தான். இவர்கள் இருவரும் முரட்டுத் தேகமுடைய கீழ்த்தொழிலாளர். கரிய கந்தல்துணி ஒன்றே அரையில் சுற்றிக் கயிறுகளாலுங் கொடிகளாலும் கட்டுண்டு, கரி அறைத்துப் பூசிய முகத்தோடு கீழ்ப்புரண்டனர். "நீங்கள் யாரடா?" என்றான் காளி. இவர்களிடம் பேசுவது காளிக்குச் சுலபம். இவர்களிடம் செவ்வையாய்ப் பேசவேண்டும் என்னும் விருப்பம் வேண்டியதில்லை.

"ஐயா! சாமி! நாங்க இந்த மேமலையாளத்தில் இருக்கிறவங்க. எங்களை அடிக்கடி காசு தாரேனுப்புட்டு சமீன் காரியர்ச்சி வரச்சொல்றது. அவராலே நாங்கெட்டம். இனிமே புத்தியா கெட்டது? நாங்க இந்தத் தொயிலுக்குப் போவவே மாட்டோம். சாமி! சாமி!! எங்களை வுட்டுடுங்க, ஒண்ணும் பண்ணாதிங்க, நீங்க கேட்டதெல்லாஞ் சொல்றம். உம்மையைச் சொல்றம்." என்று கெஞ்சித் தலையால் கும்பிட்டு, மறுபடியும்,

"எங்களைக் காரியர்ச்சி நாலஞ்சி மாசத்துக்கு முன்னே கூப்புட்டு, இந்தமாதிரி மணிமங்கலத்தில் சம்முகம் வூட்டில் திருடணும். நல்ல பொட்டி போயை இருக்குது. என்ன சொல்றீங்க என்ருங்க. நாங்க வயக்கம்போல சரிதாஞ் சாமி யிண்ணோம். அப்பறம் இப்பதான் ஒரு மாசத்துக்கு முன்னே கூப்புட்டு ஆயத்தமா இருக்கச்சொன்ணுங்கோ. நாங்கெல்லாஞ் சரியிண்ணுப்புட்டு இருந்தோம். அப்பறம் கூப்புட்டு,அமாச்சி ரெண்டு நாளுங்க, திங்கக்கியமை ராவு நடுச்சாமத்துக்கு, சிப் பந்தி வீதியிலே இருக்குதே சம்முவம் ஊடு அதிலேபோய் பொட்டி போயை சீக்கிரம் எடுத்துக்கிட்டு வரணும் இண் ணுங்க. அதுக்குமேலே ஒரு மறப்பு சொன்ணுங்க. நாங்க முப்பதுபேர். ஆனு இண்ணைக்கி வந்தவங்க பத்துபேர்தான். எடர் இருந்தா நாங்க எல்லாரும் வருவம். ஆனு சம்முவம் பயந்துகிட்டு ஒருத்தரையுந் துணைக்குக் கூப்பிடலியாம். அப்ப சூலுபு இண்ணு பத்துபேரும் வந்தோம். நானுங் குட்டை யனுந்தான் உங்ககிட்ட ஆப்புட்டுகிட்டம். மத்த எட்டுபேரும் ஓடிட்டாங்க. அவனுவ எல்லாம் முரட்டுப்பசக. அடிச் சாலும் உம்மையைச் சொல்லாங்க. இந்தச் சுந்தரம் இருக் கிருங்களே இவங்களுக்கு நாங்க எங்க சேதி ஒண் ணுமே சொல்லக்கூடாதாம். நாங்க திருடாவங்க இண்ணே இவங்களுக்குச் சொல்லக்கூடாதாம். இந்தச் சுந்தரம் இருக் கிருங்களே இவங்களுக்குக் காரியர்ச்சியும் நாங்களும் பானை ஞ்சு பதினறு ஆண்டா திருடாவங்க எண்ணு புட்டே. தெரி யாதாம். நாங்க இவங்களுக்குத் தெரியாதே பொட்டி போயை எடுத்துக்கிட்டு வந்துடணுமாம். நகை நட்டு மிச்ச மீ தியாம் அந்த வூட்டிலே. நானுங் குட்டயனுஞ் சும்மா வூட் டிலே அப்படியும் இப்படியும் ஓடி மெலட்டணுமாம். மத்த அறு பசங்களும் பொட்டி போயை நகை நட்டு எடுத்துக் கிட்டு காரியர்ச்சி வூட்டுக்கு ஓடிடணுமா. அதுச்குள்ள இந்த சாமிவந்து எங்களை அடிச்சி ஒட்டிட்டு அந்த சம்முவத்துக் கிட்ட நான் திருடனை அடிச்சுட்டேன் இண்ணு சவுரியம் பேசணுமாம். அனுச்காமட்டும் காரியர்ச்சி மெய்யாவே எங் களைத் திருடச் சொன்ணுங்க. அவுங்களுக்கு நாங்க எம் மாமோ இதுக்கு முன்னே திருடிக்கொடுத்தோம். இண்ணைக் கிதான் ஏமாந்து போயிருப்பாங்க காரியர்ச்சி." என்று அவ்

இருவரும் சொல்லிக் கும்பிடுவதற்குப் பிரதியாய்க் காளி காலண்டை புரண்டனர்.

இதுவரையில் காளி இவர்கள் பேச்சை நிறுத்தவில்லை. காளிக்கு எவ்விதம் விட்டால் உண்மை வருமோ அது செவ்வையாய்த் தெரியும் ஆனல் சுந்தரநாதத்திற்குக் கோபமும் ஆத்திரமும் வந்தன. முதலில் இவர்கள் பொய் சொல்லுகிறார்கள் என்று நினைத்து ஏதோ சொல்ல ஆரம்பித்தான். ஆனல் காளி சைகை பண்ணக் கண்டு சும்மா இருந்தான். கடைசிவரையில் கேட்டபோது, இது ஒருகால் உண்மையாய் இருக்கலாம், தன்னை வஞ்சிக்கப் பார்த்தார் காரியதரிசி என்று நினைத்து, ஒன்றுந் தோற்றமல் திகைத்தான். ஆனல் காளிக்கு இப்போது உண்மை செவ்வையாய் விளங்கிற்று. ஆகவே, காளி, விடிகிற வேளையாக இருந்தபடியால் சுந்தரநாதத்தை நோக்கி, "இவர்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டாயா? நீ ஏமாறினவன் என்பது இப்போது தெரிகிறதா? காரியதரிசியை நம்பாதே. அவன் பெரிய ஊர்த் திருடன்போல் இருக்கிறது. நீ இல்லாவிட்டாலும் அவன் ஷண்முகநாதர் வீட்டைக் கொள்ளையடித்தே இருப்பான்போல் இருக்கிறது. இதோ பார் இவர்களிடம் நாலைந்து மாதத்திற்கு முன்னமே சொல்லியிருக்கிறன். நீ எப்போது இவ்விஷயம் அவனிடம் பேச ஆரம்பித்தது?" என்றான்.

"ஒரு மாதத்திற்கு முந்திதான். அதற்குமுன் நான் அவனிடம் ஷண்முகநாதர் குடும்பத்தைப் பற்றிப் பேசினதே கிடையாது." என்றான் சுந்தரநாதம்.

"சரி. நீ சொல்லியது அவனுக்கு நல்ல வழி ஆயிற்று அகப்பட்டுக்கொண்டால் உன்மேல் பழிபோடலாம் என்று நினைத்திருக்கிறன் அவன். ஆகட்டும், அவன் சங்கதி அப்புறம் பார்த்துக்கொள்வோம். மறுபடியும் நீ அவனிடம் சேராதே. இந்தமாதிரி விஷயங்கள் ஒன்றும் ஆரம்பிக்காதே. இல்லாவிடில் உன் விஷயத்தை ஊரில் வெளிப்படுத்திவிடுவேன். உன்மேல் உண்மையில் குற்றமில்லாததினல் விடுகிறேன். நீ சுத்த புத்தியில்லா மடையன். எங்கேயாவது ஒருவனைச் சிநேகம் பண்ணி, அவன் பெண்ணைக் கல்யாணம் பண்ண, அவன் வீட்டுக்குத் திருடரை அனுப்பி, அவர்களைத் தான் ஜெயிப்ப

தாகப் பாவனை பண்ணுவானே?" என்றான் காளி. தான் பெருந்திருடன் என்பதை அப்போது சற்று மறந்தான்!

"எனக்கு அந்தப் பெண்ணிடம் ஒன்றும் பற்றில்லை. பெரிய பணக்காரன் வீட்டுப் பெண் என்றுதான் பார்த்தேன். இனிமேல் அப்படி ஒன்றும் நடக்காது. தாங்கள் இவ் விஷயத்தைப்பற்றி ஒன்றும் மணிமங்கலத்திலாவது வேறு எங்கேயாவது சொல்லாதிருந்தால், உங்களுக்கு என்னாலான உபகாரம் செய்வேன்." என்றான் சுந்தரநாதம். இவனுக்கு ஒரு ஞாபகம் வந்தது. தான் தன் எதிரிலிருப்பவனைச் சந் தோஷப்படுத்தலாம் என்று நினைத்தான்.

"உன்னிடம் எனக்கு ஒன்றும் உபகாரம் வேண்டியதில்லை. நான் சொன்னபடி நீ செய்யவேண்டும். இல்லாவிடில் உனக்கு பல ஆபத்துகள் வரும்." என்று அச்சுறுத்தினன் காளி.

"ஒரு செய்தி." என்று இரகசியமாய்ச் சொன்னான் சுந் தரநாதம்.

"நமக்குள் இரகசியம் வேண்டியதில்லை. இரகசியம் பண் ணித்தான் உன்கதி இப்படி ஆயிற்று. இனி ஓர் இரகசிய மும் வைத்துக்கொள்ளாதே. இரகசியம் என்பதே பிசகு. வெளிப்படையாய்ச் சொல்." என்றான் காளி.

"தங்களையும் தங்கள் கூட்டத்தாரையும் பிடிக்கப் பெரிய ஏற்பாடு ஒன்று செய்திருக்கிறார்கள் இந்த ஜமீனில்." என்றான் சுந்தரம்.

"நான் யாரென்று நினைக்கிறாய்நீ?" என்றான் காளி.

"எனக்கு நீங்கள் இன்னார் என்பது தெரியாது. காட்டு மயிலூர்க் காளி என்று எழுதிய கடிதத்திற்குப் பரிந்து வந் திருப்பதால் ஒருகால் காளியாகவாவது அவனைச் சேர்ந்தவ ராகவாவது இருக்கலாம் என்று நினைத்தேன். அப்படி இல்லா விடில் மன்னிக்க வேண்டுகிறேன். அப்படி இருந்தால் இந் தச் செய்தி பயன்படும். இளைய ஜமீன் சந்திரவர்மா சென் னைக்குப் போய் இதைப்பற்றி முயற்சி செய்கிறார். மணி மங்கலத்தில் மகாதேவர் பிள்ளை விஜயத்திற்கு இவ்விஷயத் தில் அதிகாரம் கொடுத்திருக்கிறது." என்று முடித்தான் சுந் தரநாதம். இவன் பேசிக்கொண் டிருக்கும்போது தன் ஆட் களைக் கவனிக்கச் செய்தான் காளி.

"இது மணிமங்கலத்தில் வேறு ஒருவர்க்கும் தெரியாது. இரகசியம்." என்று மேலும் சொன்னான் சுந்தரநாதம்.

"உன் இரகசியத்தை விட்டால்தான நீ உருப்படுவை. இனிமேல் இரகசியத்தை விடு. அது போகட்டும். வேறு என்ன விசேஷம்?" என்றான் காளி.

"ஒன்றுமில்லை." என்றான் சுந்தரநாதம்.

"சரி நீ போ. நான் சொல்லியபடி செய். உன் மானத்தைக் காப்பாற்றிக்கொள். போ." என, ஓர் ஆள் அவன் கண்ணைக்கட்டி காட்டில் அழைத்துச்சென்று திரும்பினன். மற்ற இரு திருடர்களையும், பிறகு தனக்கு வேண்டியிருப்பார்கள் என்று, தன்னிடமே அழைத்துச் செல்ல நினைத்தான்.

சுந்தரநாதம் புதிதாய்ச் சொன்ன இவ்விஷயத்தைப் பல முறை தன் இரு ஆட்களுக்கு ஓதி, "நான் முன்னே சொன்னது சரிதானே. இதை நம் கூட்டத்துள்ளார்க் கெல்லாம் சொல்லி, நான் முன்னே சொன்னபடி செய்ய நீங்கள் தூண்ட வேண்டும். கறுப்பன் என்பேச்சைக் கேட்கமாட்டேன் என்கிறானே, அவனிடம் இதைச் சொல். இல்லாவிட்டால் வருவது படுங்கள்." என்று வெறுப்பாய்ச் சொன்னான் காளி.

"நெசந்தாங்க. நீங்க எசமாங்க சொன்னதெல்லாம் நெசந்தாங்க. இப்ப அவுனே சொன்னானே. நீங்க சொல்லியா சொன்னான்? நாங்க எல்லாருக்குஞ் சொல்லி நீங்க முன்னே சொன்னபடி செய்யறோம். ஆமாம். இந்த திருட்டுத் தொயில் எத்தனை நாளைக்கி! எனக்குக்கூட இதுமேல் சீயிண்ணு இருக்குது. நீங்க எங்க மேலே வருத்தம் வைக்கவாண்டாம். இத்தனை ஆண்டு இருந்துபுட்டு இப்போ என்னத்துக்கு போற போது வருத்தம் எங்கசாமி." என்று இருவரும் காளி காலில் விழுந்து கைகட்டி வாய் பொத்தி நின்றனர்.

"சரி நீங்கள் சொல்வது உண்மை. உங்களை நம்பியேதான் நான் இந்தக் காரியத்தை ஆரம்பித்தேன். இனிமேல் உங்களாலேதான் இந்தக் காரியம் முடியவேணும். எழுந்திருங்கள். எல்லாம் உங்கள் நலத்தைத் தான் இதுவரையில் தேடினேன். இப்போது தலைக்குமேல் வெள்ளம் வருகிறபோதும், நீங்கள் தப்பவே வழி தேடுகிறேன்." என்றான் காளி.

அவர்கள் இதைக் கேட்டு "சாமி சாமி, எங்க அண்டே! நீங்க இல்லாப்போனா நாங்க எம்மாமோ துன்பப்படுவோம்.

உங்கசொல்லு எள்ளுமுக்குக்கூட தவரமாட்டோம். நாங்க கறுப்பன் மூப்பன் எல்லார்க்கிட்டேயுஞ் சொல்லி நீங்க சொன்னபடி எல்லாருக்கும் நகை நட்டை பங்கிட்டு அவங்கவங்க தொயிலைப் பார்க்கிறோம். நீங்க வருத்தப்படாதீங்க." என்று காளி காலில் விழுந்தார்கள் காளி, அவர்களைக் கைஅமர்த்தி, காரியதரிசியின் இரண்டு ஆட்களையும் கட்டவிழ்த்துக் குகைக்கு அழைத்துப்போக வேண்டுமென்று சொல்லிவிட்டு, பின்வருமாறு யோசிக்கலாயினன். சுந்தரநாதம் சொன்ன இரகசியம் காளிக்குச் சற்று மன இடர் தந்தது.

"ஐயோ. இவ்வளவும் மகாதேவரால் உண்டானதா? அல்லது ஜமீனே இவ்விதம் முயன்றனனோ? விஜயமல்லவோ இதற்கு அதிகாரியாம். இதில் நம்பிக்கைத்துரோகம் உண்டோ? என்ன! நானே மகாதேவரிடம் கூட்டத்தைக் கலைத்துவருவதாகத் தானே சொல்லி வந்தேன். அதற்குச் சரியாய் முயற்சியும் செய்துவருகிறேன். ஒருகால் நான் இவர்களுக்குத் தெரிந்திருக்கிறேன் என்று தைரியங்கொண்டு விஜயம் ஏற்றுக்கொண்டானோ? அல்லது,—ஓ ஓ! விஜயத்திற்கு நான் இன்னான் என்பது தெரியாது. முன் வந்தபோது என்னைக் காளியென்று மாத்திரந்தான் தெரிந்திருந்தான். மகாதேவர் அவனிடமும் உண்மை சொல்லாதிருக்கலாம். அல்லது தெரிந்தே என்னைப் பிடித்துத்தர மனம் இசைந்தானோ? ஐயோ, நான் அப்படி நினையேன். விஜயமாவது மகாதேவராவது சர்ப்பனை செய்வார்கள் என்று நான் நம்பவில்லை. அவர்கள் முகத்தில் வஞ்சனை இல்லை. ஆனாலும், எப்படி நான் இவர்களை முழுவதும் நம்புவது? ஒருகால் அப்படியிருந்தாலும் இருக்கக்கூடும். விஜயத்திற்கு என் உண்மையான சம்பந்தமும் வரலாறும் தெரியாவிட்டாலும், என்னைக் கலந்து அவன் காரியத்தை முடிக்க எண்ணியிருந்தால், அவன் என்னிடம் வந்து யோசனை செய்வான். அவன் என்னைப் பிடித்துக் கீர்த்திபெற நினைத்தால் என்னிடம் தனித்து வரமாட்டான்., வந்தாலும் தந்திரமாய் வருவான். ஆகையால், எது எப்படியிருந்தாலும் நான் இப்போது மணிமங்கலம்போவது சரியல்ல. உள்ளூரில் இருக்கும் கருந்திருடனை அறியாதவர்கள் வெளிக் கொள்ளைக்காரரைப் பிடிக்க முயல்கின்றனர்! விஜயத்திற்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றிவிட்டேன். ஆனாலும் இன்னம் அவர்களுக்கு உண்மை

தெரியவில்லை. இனிமேல் விஜயம் வந்து என்னைப்பிடிப்பது மெய்யானால், ஐயோ! எப்படி இதை நம்புவது? அவனுக்கு முன்னமே, நான், அவன் எடுத்துக்கொண்ட காரியத்தை முடித்து, அவனுக்குக் கீர்த்தி இல்லாமல் செய்வேன். எதற்கும், விஜயத்திற்கும் எனக்கும் இவ்விஷயமாயுள்ள சம்பந்தத்தை நான் தெரிகிறவரைக்கும், அல்லது என் கூட்டத்தாரைக் கலைத்து அவர்களை அவரவர் வீட்டிற்கனுப்பி, அவர்களைத் திருட்டுத்தொழிலினின்றும் விலக்கும் வரையிலும், நான் மணிமங்கலம் போய் மடையன்போல் அவர்களிடம் அகப்பட்டு அபகீர்த்திக்கு ஆளாகமாட்டேன். ஐயோ! இது வரையில் நான் இருந்த இந்த நிலைமைபோதாது என்று எனக்குக் கடவுள் நான் இப்போது இதினின்றும் விலக முயலும் சமயத்திலும் இப்படிச் செய்யப் பார்க்கிறார்! ஐயோ! என் தலைவிதியை யாரிடம் சொல்வேன்! நானே இந்தத் திருடர் தொழிலை ஏற்றுக்கொண்டேனோ? நானே நல்லவர்கள்சேர்க்கையை விட்டு இந்த இழிதொழிலை மேற்கொண்டேனோ? ஐயோ, தெய்வமே! என்விதி இப்படி இல்லாவிட்டால் நான் விஜயத்தைப்போல் அறிவுடையவனாய் இருக்கமாட்டேனா? ஆ கடவுளே! நான் இப்போது நல்லவழி நாடுகிறேன்: எனக்கு உறுதியைக் கொடுத்துத் துணைசெய்வாய். என்னால் கூடியதைச் செய்கிறேன். பிறகு கடவுள் எப்படி விட்டாலும் விடட்டும்." என்று இவ்விதமாக மனமயங்கி, நைந்து, வருத்தமுற்றுக் கண்ணீர் உதிர்த்தனன், காளி என்று விதி அழைத்த மீனாட்சி சுந்தரம். அவன் மனம் முற்றும் நெகிழ்ந்தது; வாய் பேசமுடியவில்லை; மனம் நினைக்கவில்லை; அப்படியே நின்றான் அவனும்.

## ௨௰. கண்ணகி.

Spite of despondence, of the inhuman dearth
Of noble natures, of the gloomy days,
Of all the unhealthy and o'er-darken'd ways
Made for our searching: yes, in spite of all
Some shape of beauty moves away the pall
From our dark spirits.—*Keats.*

மேற்கூறிய துணிகரமான செய்கை நடந்து ஒருவாரம் ஆயிற்று. சுந்தரநாதம் காரியதரிசியிடம் இப்போது பெருஞ்

சந்தேகம் கொண்டனனாயினும், அவனைவிட்டு நீங்க தைரியங்கொள்ளவில்லை. மனவலிமை இருந்தபோதல்லவோ ஒருவன் தான் சரியென்று நினைத்தபடி நடத்தல் முடியும்? மேலும், இவன் மனமும் களங்கத்தை அற ஒழித்த அன்றைக் கல்லவோ, களங்கமுள்ள பிறர் மனத்தினின்றும் சுத்த மனத்தோடு விலகுவது முடியும்? இங்கு வந்து காரியதரிசியிடம் காரியதரிசியின் அதிகேவல குணாதிசயத்தை மறைத்து, தனக்குத் தெரிந்தவரையில் தான் சம்பந்தப்பட்டதை உரைத்தலும், அக்கொடியன், தன் ஆட்கள் அகப்பட்டு விட்டதால் ஏதாயினும் தன்னைப்பற்றிய உண்மையைச் சொல்லியிருத்தல் கூடுமென்று நினைத்து, "அத்தடியர்கள் ஒன்றுஞ் சொல்ல வில்லையா? அவர்கள் பொய்யோ புளுகோ சொல்லித் தாங்கள் தப்பித்துக்கொள்ளப் பார்ப்பார்களே!" என்று உளவாய்க் கேட்டான். உடனே சுந்தரநாதம் அவர்கள் சொன்னவை யாவும் வெளியிட்டுத் தானும் சந்தேகப்படுவதாகச் சிறிது காட்டினன். "ஆ, நீ எனக்கு நல்ல பிராணசிநேகிதன்! இப்படி என்மீது அவநம்பிக்கை வைக்கத்தானா இத்தனை நாள் என்னோடு பழகினது? சரி. போம் போம். உம்முடைய கூட்டுறவு போதும். ஏன்காணும் இதை முன்னமே என்னிடம் சொல்லவில்லை? நீரும் அப்படுசண்டாளர் பேச்சை நம்பினீர் போலும்! உமக்கு உபகாரம் செய்ய வந்தது போதும். நிரம்பவும் நன்றாயிருக்கிறது. சரி சரி. ஓ ஹோ! இதையும் இக்கடித விஷயத்தையும் பற்றி நானே இனி ஷண்முகநாதரிடம் கலக்கிறேன். உம் அசட்டுவிவகாரம் போய், என்னையா சந்தேகிக்கிறீர்? இதுவல்லவோ சிநேகிதம்! இதுவல்லவோ பிராண சிநேகிதம்!!" என்று, வேறு காலங்களில் சிநேகிதன் என்று சொல்லாதவர் இன்று சுந்தரநாதத்தைச் சிநேகமயமாக்கி, அவனுக்கு இருந்த கொஞ்ச அறிவையும் அற மழுக்கித் தந்திரம் செய்தார் காரியதரிசியார்.

மேலும் அக்கபடக் கொடியோன் "அவன் யார் உமக்குத் தெரியுமா? அவன் யார்போல் இருக்கிறான்? அவனை நீர் யார் என்று கருதுகிறீர்?" என்று வெகு சாதுரியமாய்க் கன் திருட்டு விஷயத்தை அறிந்தவன் யாவன் என்று தெரிந்துகொள்ள முயன்றனன்.

"அவன் இன்னான் என்பது எனக்கு எப்படித் தெரியும்? ஆயினும் அவன் 'காடடுமயிலூர்க் காளியா' என்று அன்றிராத்திரி இழிவு உரைத்தானுகையால், அந்தப்பெயர் சம்பந்தப்பட்டிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். மேலும் தான் இன்னானென்றும், கடிதம் காளிபெயரால் எழுதினதைத் தவிர்த்து நம்மைப் பிடிப்பதன் நோக்கம் வேறு உண்டென்றும் அவன் ஒன்றும் தெரிவிக்கவில்லை." என்றான் காரியதரிசியிடம் பொய் புகல அறியாச் சுந்தரநாதம். அன்றைய இரவு காளியிடம் தப்பியோடிய காரியதரிசியின் சொந்தத் திருடர் சொன்னவைகளிலிருந்தும், வந்தவன் பக்காத்திருடனுகத் தான் இருக்க வேண்டும் என எண்ணினான், இன்னலையே இணையாகக் கொண்ட காரியதரிசி.

காரியதரிசியின் வஞ்சப் புகழ்ச்சியாலும் ஆழ்ந்த கபடத்தாலும், காளி சொன்ன வார்த்தைகளை ஒரு சிறிது மறந்தனன் சுந்தரநாதம். காளி தன் எதிரில் இருந்தபோது தான் நினைத்ததுபோல், அவன் எதிரில் இல்லாதிருக்கிற இப்போதுநினைக்க முடியவில்லை இப்போது இவன் எதிரில் இருப்பவர் காரியதரிசியே, காளியல்ல. ஆகவே இந்தக் கோழைக்கு ஊன்று கோல் அடிக்கடி எதிர் நிற்பவர் கருவதாயிற்று. அதனாலன்றோ இவன் முதல் முதல் மதுரையிலிருந்து வந்து மகாதேவருக்கு அடங்கி அவர் சேர்க்கையை அடைந்து ஜமீனில் பலவேலைகள் பார்த்து வந்தபோது, 'நல்லவர்' என்றும், 'பரமசாது' என்றும் பெயர் வாங்கினன். மகாதேவரும் இவ் அழகிய முகத்தினன் இப்பெயர்களும் வகிக்கவே, தன் அருமைப் புதல்விக்குத் தக்க தலைவன் ஆவான் என்று நினைத்தார். இதனாலே அன்றோ இவனுக்கு இவ் உயர் பதவியாய உதவி கர்த்தாவேலை அளித்ததும்! இப் பண்புகள் அமைந்த இவனை அன்றோ கண்ணகி நேசிப்பது! இங்ஙனம் காரியதரிசியோடு சேர்ந்து கொடிய விஷயங்களில் முதலிலேயே தலையிட்டிருப்பானேல், மதுரையார் மதுரைக்கே திரும்பிச் சென்றிருத்தல் அவசியமாகியிருக்கும். ஆனல் மகாதேவர் இவன் உள்ளத்தின் பலத்தை அறிந்தார். அதனாலே தான் அவர் பலதரம் சுந்தரநாதம் தன் வீட்டிலேயே தங்க வேண்டுமென்றும், காரியதரிசியோடு அவனுக்கு அதிக சேர்க்கை ஆகாதென்றும் தெரிவித்தார். ஆனல், அதைக் கேட்டான் அல்லன் அம்மானமில் மனத்தன்.

காரியதரிசிக்கு உதவி கர்த்தாவான இச்சிறு காலத்திற்குள், காரியதரிசியின் கள்ளத்தனத்திற்கும் அவன் உதவி கர்த்தாவாக அமைந்தான்.

ஆதலின் இச்சுந்தரநாதத்தை—தனக்கெனச் சித்தம் இல்லா இவ் அலைகடல் துரும்பை—இவ் ஓடு காலிற் பஞ்சை. இவ் அழகிய குலாலன் குடத்தை—இவனை அவ்வோர் ஊன்றிய படு கொடியனிடமிருந்து பிரித்து நல்லவர் பால் வைத்தபோதன்றோ நல்லவன் ஆவான். அப்பிரிவை எவரும் இயற்றவில்லை. காளி மாத்திரம் இதன் உண்மையை உணர்ந்து உரைத்தனன். ஆனால் அவனும் வெளிப்படையாக உரைக்கக் கூடவில்லை. காளியும் எவருக்கு என்ன சொன்ன போதிலும், இன்னும் தன் இரகசியத்தை முற்றும் விட்டுவிடவில்லை. வெளிப்படையாக உரைத்தாலன்றோ ஒரு தீச்செயலின் தீமை முழுதும் தெரிகிறது? இரகசியமாய் இருக்கிற தீமை அதன் பலன் முழுவதும் அளிக்க முடியாது. ஒவ்வொரு செயலுக்கும் பயன் உண்டு. செயல் எப்போது செயலாயிற்றோ, பிறகு அதனால் விளையும் விளைவை நிறுத்தல் இயலாது. தன் விளைவு முழுவதும் விளைத்தாலன்றி ஒரு செயல் மறையாது. ஆகையால் தனக்குள்ள தீமை முழுவதும் வெளிப்படுகிறவரையில் ஒரு தீச்செயல் இருந்துகொண்டேயிருக்கும். சுந்தரநாதமும் காரியதரிசியும் கடிதம் எழுதிக் கொள்ளையிட முயன்ற தீமை, இவ்விஷயம் வெளியாகி அவர்கள் மானம் அழிய நேரிட்டபோதுதான் அவர்களை விட்டோடும். ஆதலால், எவன் செய்யினும் அவன் மானத்தை அழிக்கக்கூடிய இத் தீச்செயலால், பிறர் இதை அறியாதிருக்கும் வரையில் தங்கள் மானம் அழியவில்லை என்று நினைத்துச் சந்தோஷப்படும்போது அவர்கள் இத்தீய தன்மையினின்றும் விடுபடுவது எங்ஙனம்? ஆனால் மனத் தூய்மை உள்ளவருக்கு, ஆன்மசாட்சி உடையவர்களுக்கு, எத்தீமையாவது அவர்களை விட்டு வெளிக்குத் தெரிவதும், அவர்களுக்கு மட்டுமே தெரிவதுமாகிய இவ்விரண்டும் ஒன்றே. இவர்களே உலகவழக்கைத் தம் மனத்துள் கொண்டவர். இவர்களே உலக உண்மையை அறிந்து அதன்வழி ஒழுகுபவர். இதனாலன்றோ இவர் மனமும் உலக மனமும் ஒப்பாகும் என்கிறது? ஆகையினாலன்றோ மனச்சாட்சிக்கு மாறாக நடக்காவிடில் மற்றப் பிராணிக்கும் மாறாக நடப்பது அரிது என்பது?

ஆகவே, நம் சுந்தரநாதமும் மறுபடியும் தீயவழிக்கண் மனநாடுவது இயற்கைக்கு விரோதம் அன்று. அவன் அன்றிரவு, விஜயம் 'ஒ கோ' என்று கூவினதைக் கேட்டனன். அது தன்னைத் தெரிந்துகொண்டதனுலாய ஆச்சரிய ஒலி என நினைத்தான் சுந்தரநாதம். அவ் இரவு சென்று ஒரு வாரம் ஆயினும், ஊர்க்கண் ஏதோ ஷண்முகநாதர் வீட்டெதிரில் கலகம் ஒன்று நிகழ்ந்ததென வதந்தியே தவிர, சுந்தரநாதத்தின் பெயராவது, காரியதரிசியின் பெயராவது, மற்று அக்காளியின் பெயராவது வெளிவந்திலது. ஒருகால் அதில் தன் சேர்க்கை தெரிந்தும் விஜயம் சொல்லாதிருக்கிருனே? அல்லது இன்னும், விஜயந்தான் ஏற்பாடு செய்து அம்மனிதர்களை அனுப்பி வைத்தானே? என்னும் சந்தேகங்கள் அவன் மனத்து எழுந்தன. மற்றும், தன்னைப் பிடித்துச் சென்ற அம்மனிதனே வெளிப்படுத்தினும் படுத்தலாம். ஆனுல் அது அவ்வளவு நிச்சயமில்லை. அவனும் வெளிவந்து சொல்லும் திறம் உடையவனுகக் காணப்படவில்லை. மேலும் அவன் தன்னிடம் அதிகமும் இரக்கமுற்றவன்போல் பேசிப் புத்தியும் புகட்டினன். ஆகையால், இதைப்பற்றிக் கவலையுறுவது வீணே என்று எண்ணி, விஜயம் சம்பந்தப்பட்ட மட்டிலும் தன் சந்தேகத்தை நிவிர்த்திக்க வேண்டுமென்றும், அப்படி முடியாவிட்டால் பிறகு வேறு யோசனை செய்யலாமென்றும் தீர்மானித்தான்.

ஆகவே, சுந்தரநாதம் ஷண்முகநாதர் வீட்டிற்குப் பலகால் சென்று, அவரோடும் காருண்யத்தோடும் அச்செய்கைக்குச் சம்பந்தப்பட்டதும் படாததுமான பல விஷயங்களைப் பேசினன். அவர்கள் அதன் விஷயம் ஒன்றும் தெரியாதவர்களாகவே இருந்தனர். விஜயத்தினிடத்தும் ஒருநாள் தெருவில் சந்தித்துப் பல வழிகளிலும் சம்பாஷணை செய்து பார்த்தான். அவனும் இவ்விஷயம் அறிந்தவனுகக் காணப்படவில்லை. ஆனுல் விஜயத்திற்கு இவ்விஷயத்தைப் பற்றி முழுவதும் இல்லாவிடினும் கொஞ்சமாவது தெரியுமாதலால், அவன் ஒன்றும் அறியார் பேசுவதுபோல் அன்றிப் பேசியதால், அவனுக்குத் தெரிந்தும் சாதுரியமாய் மறைக்கிருன் என்று எண்ணினுன் வஞ்சத்தின் வாயில் அகப்பட்ட பஞ்சையன்.

ஆதலின், இதைப் பூராயமாய் அறிதல் கண்ணகியின் உதவியால் கூடும் என நிச்சயித்தான். முதல் இரண்டு வருஷம் மகாதேவர் வீட்டிலிருந்து யாவரையும் நன்கு தெரிந்தவனல்லனோ சுந்தரநாதம்? கண்ணகி இவன்பால் எவ்வளவு பிரியமுடையாள்! இவன் அவளிடம் எவ்வளவு அன்பு அக்காலங் கொண்டிருந்தனன்! என்பதை ஞாபகப்படுத்தினன். கண்ணகியும் மற்றுமுள்ளாரும் இப்போதும் இவனை அவ்வண்ணமே நேசிக்கிறார்கள் என்பதைச் சந்தேகிக்கக் காரணமில்லை. சந்தேகிக்க வெளிக் காரணங்கள் ஒன்றுமில்லை எனினும், அவர்கள் முன் வருஷங்களில் தன்னை நேசித்த வண்ணம் இப்போது தன்னை நேசிக்க முடியாது எனத் தனக்குத்தானே உணர்ந்தனன் இவன். தான் அவர்களை இப்போது மனப்பூர்வமாய் நேசிக்காதபோது அவர்கள் எங்ஙனம் அதேவிதம் நேசிக்க முடியும் என நினைத்தனன். இதற்குக் காரணம் ஒன்றுமே இல்லை. இது காரணமில்லா ஓர் உணர்ச்சியே. இவ் உணர்ச்சியே நற்குணத்தைத் தீக்குணமும் உயர்ந்ததென்று கருதுவதற்குச் சான்று. ஆகையால், இவன் கண்ணகியைத் தன் வசப்படுத்த முன்பு இருந்த சிநேக உணர்ச்சி மாத்திரமே போதுமானதன்று என்று நினைத்தான். கண்ணகியின் களங்கமற்ற காதல் மாத்திரமே ஒருகால் தன் பொய்மைக்குக் குருடாய் இருக்கலாம் என்று எண்ணினன். ஆகவே, இவன் ஓர்நாள் விஜயம் வெளியிற் போயிருக்கும் சமயம் அறிந்து, மகாதேவர் வீட்டிற்குப் போய் 'விஜயம் இருக்கிறாரா?' என்றான்.

நெடுநாட்களாக இவனைப் பார்க்காத கண்ணகி, இவன் குரல் கேட்டதும் உள்ளிருந்து ஓடிவந்து "அண்ணா வெளியே போயிருக்கிறார்கள். இதோ வந்துவிடுவார்கள். நீங்கள் பெரிய உத்தியோகத்திற்குப் போனது முதல் இங்கு வருவது அரிதாயிற்று. ஏனோ அது?" என்று கேட்டாள்.

"வராமல் என்ன!" என்று மிகவும் பரிவாய்ச் சொன்னான் சுந்தரநாதம். உண்மையில் சுந்தரநாதத்திற்கு இப்போது அவளைப் பார்ப்பதைவிட வேறொன்றும் செய்யத் தோன்றவில்லை. களங்கம் இன்றி அன்பு பெருகும் அவளிடம் சிறிது நேரம் தன் கவலையை மறந்தான். அவள் முகத்தையே நோக்கி ஆனந்தித்தான். இந்த ஒரு வருஷமும் இங்கேயே கழித்திருக்கில் எவ்வளவு மகிழ்ச்சி? எவ்வளவு வித்தியாசம்?

"நீங்கள் நம் தோட்டத்தை இப்போது பார்த்ததில்லையே? எத்தனையோ புத்தம் புதிய செடிகளெல்லாம் நான் அங்கு இவ்வருஷம் வைத்திருக்கிறேன். நீங்கள் வந்தால் அவற்றை எல்லாம் காட்டுகிறேன்." என்றாள் களங்கமில்லாக் கண்ணகி. மற்றென் கோரி வந்தனன் சுந்தரன்? 'இதுவன்றோ அதிர்ஷ்ட காலக்குறி!' என்று சந்தோஷம் எய்தி, 'ஆ ஹா' என்றனன் சுந்தரநாதம். என்ற இரண்டு விநாடிக்கெல்லாம் சுந்தரநாதமும் கண்ணகியும், வீட்டிற்குப் பின்னுள்ள தோட்டத்தின் செங்கீரைப் பாத்திகளைக் கடந்து, மல்லிகை சாமந்தி முதலிய பூஞ்செடிகள் இருக்கும் இடத்தை அடைந்தனர்.

அங்கு அப்பூஞ்செடிகளின் இடையில் நின்று சுந்தரநாதத்தின் முக நோக்கி வார்த்தையாடும் கண்ணகியின் தோற்றம் என்னே! கண்ணகியின் பெயர் காரணப் பெயரே. இவளுடைய இருண்ட கண் வைரமென மின்னிற்று. சலவைக் கல்லில் செதுக்கிய முகமே போன்று ஒவ்வோர் உறுப்பும் வேறுபட்டுத் தனித்தனி அழகுடைத்தாய் விளங்கிற்று. வாள் போன்ற இவள் கூரிய கண்களைச் சற்று நிதானித்துப் பார்த்தல் எவர்க்கும் அரிது. அவை ஏதோ மின்னென விடுத்துப் பார்ப்பவர் மனதைப் பதங்கச் செய்தன. மேல் தெரிந்து வெளியில் நிற்பதே போன்ற கண்ணிமைகளும், நீண்டு நெருங்கிப் படியும் கண்மயிரும் அவ்விழிகளின் காந்தியைக் குறைக்கும் வலியில. நீண்டு வளைந்து வெருண்டோடும் புருவங்கள் கண்ணுக்கு அணிந்தாய்த் தங்கின. அச்சிறிய செக்கச் சிவந்த வாயும், வரிசை முத்துக்களும் உயர்ந்து சிறுத்த நெற்றியும் எதனைக் குறிப்பித்தன? உயர்ந்து பருத்து முகத்திற்கே உயர்ச்சிதரும் நாசி எவ்வளவு அழகோடும் அமர்தலோடும் வீற்றிருக்கிறது! கீழ்விழுந்து புரளுமெனத் தோன்றும் அம்மயிர்ச் சுருளால் பாதி மறைந்து தோன்றும் செவிகள் இரகசியத்திற்காக அமைந்தன எனத் தோன்றவேயில்லை.

கண்ணகி, சுந்தரநாதம் தங்கள் வீட்டை விட்டு வெளிப்போய் பின்னர், தான் செய்தன எல்லாம் மறைவின்றியும் தடங்கலின்றியும் சொல்லப் புகுந்தனள். தன்னரும் பூஞ்செடிகளுக்குத் தான் இட்ட பல பெயர்களையும் முறையே கூறினள். தான் சொல்வது ஒன்றும் சுந்தரநாதம் கேட்க மனமிலன் என்று அவள் நினைத்திலள். சுந்தரநாதமும், அவள் கண்களின்

ஒளியால் காயப்பட்டோ, அவள் மாசற்ற பேச்சின் பரிசுத் தத்தால் நனைக்கப்பட்டோ, ஓடு மான் எனத் தோற்றும் அவ ளது அங்க அமைவால் திப்பிரமை கொண்டோ, தான் நினை த்துவந்த காரியத்தைப் பற்றிப் பேச உறுதியற்றவனானன். அச்சுந்தரியைப் பேசவிட்டுத் தான் கேட்பதுவே சரியெனத் தீர்மானித்தான். தான் முன் இவ் இல்லை விட்டு ஏகியபோது இருந்ததைவிட எவ்வாறு அவள் உருவமும் அறிவும் செ ழிப்புற்று வளர்ந்திருக்கிறதென்று ஆச்சரியத்துடன் நோக்கி னன். சற்றுநேரம் சுந்தரநாதம் இவ்வண்ணம் கண்ணகியைப் பார்த்து, வந்த காரியத்தை எடுக்க வாய்வராது, அவள் அழ குக்கு இரையாயபோது, கண்ணகி, பழைய வழக்கப்பிரகாரம், "சுந்தரம்! உனக்கொரு சங்கதி சொல்கிறேன். கேட்கிறை யா?" என்றாள்.

சுந்தரநாதத்தின் மனம் படபடத்தது. "ஆ ஹா, கேட்கி றேன் சொல் பார்ப்போம்." என்றான் கண்ணகியின் கண் ணோக்கி.

"நீ ஒருவரிடமும் சொல்லக்கூடாது." என்றாள் கண்ணகி.

"நான் சொல்லவில்லை. சொல்" என்றான். அவனுக்கு இன்னம் மார்பு அடித்து ஓயவில்லை.

"நீ ஏன் இப்படிப் பார்க்கிறாய்? இங்கென்ன புலி இருக் கிறதா?" என்றாள் கண்ணகி: வியந்து வெறித்து அவள் முகமே நோக்கும் அவன் கண்களையும் வியர்வை அரும்பும் நெற்றியை யும் அவள் பார்த்தனள். அவனது மனதில் உண்மையில் புலி ஒன்று இருக்கிறது என்று சொல்லமாட்டாதவனாய், 'சரி சொல்.' என்றான் சுந்தரநாதம். ஆனால் மேலும் கண்ணகி சிரித்தவண்ணம் "என்ன சுந்தரம்! இப்படி என்னைப் பார்க் கிறாயே. வந்த நேரம் நீ என்னை இப்படிப் பார்த்தால், நான் எப்படிச் சொல்வது?" என்றாள்.

உடனே சுந்தரநாதம் தனது பிரமையினின்று ஒருவாறு நீங்க நிச்சயித்து "யாராவது மூக்கில் குன்றிமணி அணி வாரோ என்று தான் பார்க்கிறேன்." என்று கையால் தன் கண்ணைத் துடைத்தான்.

எனலும், கண்ணகி, "குன்றிமணியா! அம்மவோ! குன்றி மணி!" என்று கைகொட்டிப் பெருநகை நகைத்தாள். அப் போதுதான் அவனுக்கு உண்மை தெரிந்தது. தெரிதலும் சிறிது

வெட்கமடைந்தான். மேல் இருண்ட கண்களும் கீழ்ப்பவள வாயும் இருப்பின், விலையில்லா வெண்முத்தாயினும் வேறெங்ஙனம் தோன்றுமென்று அவன் நிதானித்து உணரலும், வெட்கம் மறைந்து உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கிற்று. ஆகவே, சிறிது நேரங்கழித்து, "குன்றிமணியல்ல: வெண் முத்துதான். என்ன சங்கதி? சொல்." என்முன்.

"நீ சிரித்தால் தான். முன்னெல்லாம் அடிக்கடி நீ சிரிப்பது எவ்வளவு நன்ருயிருக்கும்! இன்னெருதரம் நீ சிரித்தால் தான் நான் இதைச் சொல்வேன்." என்று குழந்தைப் பிடிவாதம் பிடித்தனள்.

ஆனல் இதற்குள் சுந்தரநாதத்திற்கு விஜயத்தின் ஞாபகம் வந்தது. ஆகையால் இப்போது சுந்தரநாதத்திற்குச் சிரிப்பது அவ்வளவு இலேசான காரியமில்லை. தன் நிலைமையைப் பார்த்துத் தானே சிரித்தால்தான் சிரிக்கலாம். எனினும் இக் குழந்தைப் பிடிவாதம் பொருது சிரிக்க முயன்றனன். பிறகு அவள் சந்தோஷித்து "அண்ணுவுக்கும் காருண்யத்திற்கும் கல்யாணம். நீ ஒருவரிடமும் இதைச் சொல்லாதே." என்ருள். இன்னும் விரைவாய்ச் சுந்தரநாதத்துக்கு இருதயம் அடிக்கத் தொடங்கிற்று. அவன் பதிலாகச் சரி என்பதற்குள் "உனக்கு எப்போது கல்யாணம் சுந்தரம்?" என்று அவனைப் பக்கமாய்ப் பார்த்துச் சொல்லி, "அப்பா என்னென்னமோ பேசிக்கொண்டிருந்தார்கள். நீ இதை ஒருவரிடமும் சொல்லாதே." என்றனள். என்று மொழிந்து தோட்டம் விட்டு அவள் வீடுபுகுந்ததும், தெருநோக்கிச் சென்முன் கண்ணகியின் கண்ணுல் மருண்ட சுந்தரநாதம்.

## உக. ச ந் து.

இன்மை என ஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும்.—திருவள்ளுவர்.

சுந்தரநாதம் கண்ணகி கண்ணுல் மாறுதல் அடையப் பெற்றனனுயினும், விஜயத்திற்கும் காருண்யத்திற்கும் கல்யாணம் என்றவுடனே, இதுவரையில் காருண்யத்தை மறந்து, விஜயத்தால் தனக்கு வரக்கூடிய ஆபத்தைப்பற்றியே கருதியிருந்தவன் காருண்யத்தைப்பற்றியும் நினைக்க ஆரம்பித்தான். அவர்களுக்குக் கல்யாணம் என்றதும், எந்தத் தர்க்க நியாயத்தாலோ,

தான் சும்மாயிருப்பது சரியல்ல என்று நினைத்தான் சுந்தரநாதம். உடனே காரியதரிசியினிடம் வந்து, தனக்கு விஜயத்தின் மீதுள்ள சந்தேகத்தையும், காருண்யத்தின் கல்யாணத்தைப் பற்றியும் தெரிவித்தான். காரியதரிசியாகிய கடுங்கள்வனும், விஜயம் கள்வரைப்பற்றி விசாரிக்க நேரிடுங்கால் தன் சமாசாரம் ஒருகால் வெளிவரும் எனப் பயந்தான். பிடிபட்ட தன்னிரு ஆட்கள் இன்னும் வாராததால் அவனுக்குச்சந்தேகம் முற்றுவதாயிற்று. சுந்தரநாதம் நினைத்ததைப் போலவே, தனக்கு எதிராகவந்த பெருங்கள்வன் விஜயத்திற்கு உட்பட்டிருந்தாலும் இருக்கலாம் என்று நினைத்தான். அப்படி இருந்து, விஜயம் இதை வெளியிடில், தான் வேரோடு அழிவது நிச்சயம் என அறிந்தனன். விஜயத்திற்கு விஷயம் முழுவதும் தெரியினும், சிறிதுகாலம், சந்திரவர்மா சென்னையிலிருந்து திரும்பிவரும் வரையாவது, அவன் வெளிப்படுத்தாதிருப்பது கூடும் என்று கடுங்கள்வனுக்குத் தகுந்த பற்பல எண்ணமெல்லாம் எண்ணினன். ஆகவே, சுந்தரநாதம், தன்னை அன்றிரவு விஜயம் அறிந்தோ அச் சத்தம் இட்டனன் என்று சந்தேகித்து, அதன் உண்மை அறியுமாறு ஆராய்ந்துகொண்டிருக்கையில், இக்காரியதரிசி தனக்கு நேரிடக்கூடிய இக்கொடிய ஆபத்தினின்றும் தப்புவது எப்படி எனச் சிந்தித்துக்கொண்டிருந்தனர்.

சுந்தரநாதம் காளியிடம் வெளியிட்டவண்ணம், காருண்யத்திடம் காதல்கொண்டிலனாயினும், காருண்யத்தின் பணப்பெருக்கும் அழகுமே இவன் மனதைக் கவர்ந்தன. ஆதலால், அப்பணமும் அழகும் குறைந்தக்கால், சுந்தரநாதத்திற்குக் காருண்யம் தெருவில் ஏகும் அநேக ஸ்திரீகளில் ஒருத்தி எனவே தோன்றுவளாயினும், தான், இவ்வருஷமுதல் இவ்விஷயத்தில் ஊக்கம் வைத்து எத்தனையோ தந்திரங்கள் செய்தும் பயன்படாது போவது சரியல்ல என்று எண்ணினன். ஆகவே காருண்யத்திற்கும் தனக்கும் நிலைபெற்ற நேசம் இருக்க முடியாவிட்டாலும், காருண்யத்திற்கும் தனக்கும் கல்யாணம் ஆய்விடுமானல், தான் எடுத்த காரியம் முடியுமென்று நினைத்தான். எவ்விஷயம் எப்படியாயினும், இதனால் எவ்வெவர்களுக்குத் தீங்கு நேரிடினும் அவனுக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லையென்றும்; மகாதேவர் தன்னை மதுரையிலிருந்து இங்கு கொண்

டுவந்து ஜமீன் அரண்மனையில் பெரிய உத்தியோகம் செய்து வைத்ததினாலேயே, தன் விருப்பத்தின்படி தான் கல்யாணம் செய்து கொள்வதை மறுக்க அவருக்குச் சுதந்தரமில்லை என்றும், தீர்மானித்தான். ஆகவே, காருண்யத்தைத் தான் எவ்விதமாவது கல்யாணம் செய்துகொள்ளவேண்டும் என்று ஒரு சிறு பிடிவாதம் உண்டாயிற்று, சுந்தரநாதத்தின் சிறிய மனதில். ஆகவே, இவ்விஷயம் நிறைவேறுதலை நேரே மகா தேவராவது விஜயமாவது தடைசெய்ய இயலாதென்றும், தான் ஷண்முகநாதரையும் காருண்யத்தையும் முன் தீர்மானித்தது போல் தன் வசப்படுத்தினாற்றான், தன் காரியம் கைகூடும் என்றும் நினைத்தான். ஷண்முகநாதரை ஒருகால் வசப்படுத்தினும், காருண்யத்தை எவ்விதம் இணங்கச் செய்வது என்பதே இவனுக்கு இப்போது ஏற்பட்ட கஷ்டம்.

இதற்கு என்ன செய்யலாம் என்று பலபல விதமாய் நினைத்துக்கொண்டு. ஒருநாள் சாயந்திரம், சுந்தரநாதம் மணிமங்கலத்தில், மேற்கிலுள்ள ஒரு சிறு சந்துவழியாய்ப் போய்க்கொண்டிருந்தான். அது பல வளைவுகள் உள்ளதும், முன்னும் பின்னுமாக ஒழுங்கின்றி அமைந்த சிறு கூரை வீடுகளைக் கொண்டதுமான கீழ்த்தொழிலார் வசிக்கும் ஓர் புறம். அங்கு ஒட்டர், குறவர், இருளர், வேட்டுவர் முதலான பல வகுப்பினர் வசித்தனர். அவர்கள் வசிக்கும் அந்தப் புறம் குப்பைகளாலும் குவிந்த எருக்களாலும் நிறைந்து, எப்பாகத்துள்ள எப்பொருளைப் பார்க்கினும் அவைகள் அழுக்குப்போர்வை போர்த்தே தோன்றின. பனைமட்டைகளாலும், தென்னை மட்டைகளாலும், ஈச்சம்பாய்களாலும், மூங்கில் மூடிகளாலும், வயற்புற்களாலும் வேயப்பட்ட அச்சிறிதும் பெரிதுமான குடிசைகள் ஒவ்வொன்றின் இடையில், சப்பாத்தியும் கள்ளி முதலான முட்புதர்களும் எழும்பின. சந்துகளின் புழுதியிலும் கூளங்களிலும் சேர்ந்து படுமுட்கள் இறைந்து கிடக்கும். இவைகளுக்கு இடையில் அநேக குழந்தைகளும் இல்வளர் பறவைகளும் விலங்குகளும் தனித்தனியாயும் கும்பல் கும்பலாயும் எங்கிநிற்கும். குறவர் வளர்க்கும் கழுதைகளும், ஒட்டர் தம் பிரியமுள்ள பலவித பன்றி இனங்களும், வேட்டுவர் வளர்க்கும் பலவித பட்சிகளும், இவர்களெல்லாருக்கும் அத்தியாவசியமான கோழிகளும், இவைகளின் குப்

பல் குப்பலான குஞ்சுகளும், எங்கே பார்த்தாலும் தங்கள் தங்கள் ஆரவாரங்களைச் செலுத்திக்கொண்டு திரிந்தன. பார்க்கச் சகியா நாய்களும் பூனைகளும் தங்கள் விரோதத்தை விட்டு அங்கங்கே உறைந்துகிடக்கும்.

இடிந்தனவும் குட்டிச்சுவர் பல உடையனவும் ஆன அப் பாழ்ங்குடில்களில் வசிப்பவர் எங்ஙனம் சுற்றிலும் நாம் பார்த்ததைவிட அதிக யோக்கியதை உள்ளவர்களாக இருப்பர்? மயிர்க்கற்றை சிலவே இறைந்து கிடந்த தலையைக் குடையென விரித்துக்கொண்டும், கந்தலானதும் அழுக்கேறிக்கனம்பொருந்தியதுமான பழைய பல சிறு துணிகளை அரையில் மாத்திரம் சுற்றியும், திரைந்து மெலிந்த கைகால்களில் இரும்பு பித்தளை செம்பு முதலிய உலோகங்களால் இயற்றிய பெரிய வளையங்களை அணிந்தும், தங்கள் கழுத்திலும் மார்பிலும் சங்குமணி கருவமணி சரங்கள் பலவற்றைத் தொங்க விட்டும் திரியும் ஸ்திரீகளும், குமரிகளாயினும் நாணம் தெரியாது நடக்கும் பெண்களும், அவரவர்கள் உண்ணற்கு வேண்டிய தானியத்தை இடித்தும், புடைத்தும், கூடை பின்னல் முதலிய பல வேலைகள் செய்தும், இடையில் தங்கள் தங்கள் மிருகங்களையும் பட்சிகளையும் பாதுகாத்தும், வேலைசெய்து களைத்து வரும் தங்கள் தலைவன் முதலியவர்களுக்கு இரைச்சலோடு சிகிச்சை செய்தும் காலங்கழித்தனர். பகல் முழுவதும் காட்டில் மண் சுமந்தோ, வேட்டையாடியோ, கிழங்கு முதலியன வெட்டியோ, மூங்கில் முதலியன கழித்தோ, உயிரைக் காப்பாற்றும் இவர்கள் பார்வைக்கு அழகாய் இரார். இயற்கை ஏதேனும் இவ் வறியர்களுக்கு அழகு அமைத்திருந்தால், அது இவர்கள் படும் துன்பத்தின் இடையில் தங்க இசைகிறதில்லை. வறியர் அழகு விஷயத்தில் அவ்வளவு ஆத்திரம் உடையவர்கள் அல்ல. என்னே இவர்களின் வாழ்க்கை! இவர்கள் விதி இருந்தவாறென்னே! யாது குற்றம் இயற்றினரோ இப் பாவிகள்? பொதுஜன வாழ்க்கைக்கு இன்றியமையாத இவர்கள் இவ்வண்ணம் தீராத்துன்பமுற்று உயிர்வாழுதலும் இன்றியமையாததோ?

இவ்வண்ணம் அமைந்த பாகத்துள்ள ஒரு சிறு சந்தில் சுந்தரநாதம் போய்க்கொண்டிருக்கையில், அவன் நாம் மேற்குறித்த விஷயங்கள் ஒன்றையும் மனதிற்கொண்டு சிந்தித்தானல்லன்,

உலகத்தோற்றத்தை அஃதிருந்தவாறே எடுத்துக்கொள்ளும் மாந்தர் பெரும்பாலரில் அவனொருவன். 'இவ் உலகத் தோற்றத்திற்கு என்ன காரணம்?' 'ஒன்று ஏன் இப்படி? மற்றொன்று அப்படி?' என்பன போன்ற கேள்விகள் அவன் மனத்தில் உதிக்கிற வழக்கம் இல்லை. அவன் ஏன் தான் இவ்வழி வந்தான் என்று வியப்புற்று வெறுத்தான். தான் சிந்தித்துக் கொண்டிருந்த எண்ணத்தைச் சற்றே விடுத்து, இதைவிட்டு ஏகுவன் என்று அவசரமாய்ப் போய்க்கொண்டிருந்தான்.

அப்போது ஓர் இடிந்த மூலைவீட்டினின்றும், தன்சிறு அழுக்குக் குழந்தைக்கு, இன்னும் அழுக்கானதும், அழிந்து பாழ்பட்ட அவலட்சண மார்பினின்றும் பால் கொடுத்துக் கொண்டே, அவசரமாய் வெளிவரும் கண்குழிந்த ஸ்திரீ ஒருத்தி, சுந்தரநாதத்தைப் பார்த்து, "ஐயா! இதைப் பார்த்துட்டுப் போங்களேன். இந்த அநியாயம் எங்கேயாவது உண்டா? கல்லுங்கட்டியும், துடைப்பமும் எலும்பும் உசர இருந்து விய்யுது. நாங்க ஒருத்தருக்கும் ஒண்ணும்பண்ணலியே. புள்ளை குட்டிக்கார எங்களுக்கு எடருவந்தா யார் பாப்பா? சாமி கொஞ்சம் பாருங்களேன்?" என்று அழுகையோடும் இரக்கத்தோடும் சொன்னாள். இது என்ன அதிசயம் என்று வெளியில் நின்றபடியே சற்று எட்டிப் பார்த்தான் சுந்தரநாதம். அவள் சொன்னபடியே வாயிலில் கும்பல் கும்பலாய் எலும்பு முதலியவை இறைந்துகிடந்தன. "இது யார்போட்டது?" என்று சுந்தரநாதம் கேட்டனன்.

உடனே அங்கு ஒரு பெருங்கும்பல் கூடிற்று. கிழவரும் வாலிபரும், ஸ்திரீகளும், பெண்களும், கழுதைகளும், குழந்தைகளும், நாய்களும், எல்லாம் ஒருவரோடொருவர் இடித்து முன்வந்து பார்க்க முயன்றனர். இவர்கள் சுந்தரநாதத்தைக் கண்டதும் சற்றே அஞ்சி விலகினர். "யாரோ முனியனுக்கு ஆவாதவன் போட்டிருக்கிறான்." என்றான் ஒருவாலிபன். "சூனியம் பண்ணியிருக்கிறாங்கோ யாரோ தெரியவில்லை. ஐயோ பாவம்!" என்றார்கள் ஒரு கிழவனும் ஒரு கிழவியும். "ஆமாமாம் சூனியந்தான். முன்னே மாரியாத்தா வூட்டிலே இப்படித்தானே வியுந்தது." என்றாள் ஒரு சிறு குட்டி. "முனியன் வூட்டிவில்லா வேளை இப்படிப் பண்றானே. அவனைத் தெய்வங் கேக்காதோ? ஐயோ புள்ளைக் குட்டிக்காரன்"

என்ருள் ஒரு ஸ்திரீ. சிறு பையன்களெல்லாம், வாயையும் கண்ணையும் பரக்கத் திறந்துகொண்டு, இதென்ன அதிசயம் என்று நினைத்தனர். அதற்குள் ஒரு கிழவன் சுந்தரநாதம் எதிரில் வந்து "அந்தச் செய்தி வேறேங்க. வாங்க நான் சொல்றேன்." என, கும்பலில் வழிவிலக்கிக்கொண்டு அவ்விருவரும் மற்றொரு சந்து வழியாய்ப் போய்விட்டனர்.

* * *

அன்றிரவு, சுந்தரநாதம் காரியதரிசியினிடம் காருண்யத்திற்குத் தன்னிடம் பிரியம் வரத் தான் ஒரு ஏற்பாடு செய்யலாமென்று நினைக்கிறதாகவும், அவ்விஷயத்தைப்பற்றிக் காரியதரிசி என்ன சொல்லுகிருர் என்று தெரிய விரும்புகிறதாகவும் சொல்லி, தான் புதிதாய்த் தெரிந்த விஷயத்தைத் தெரிவித்தான். காரியதரிசி "இதுவே சரி! உமக்கு எப்படிங்காணும் இவ்வழி தெரிந்தது? சபாஷ், நம் சிநேகிதர்!" என்று சுந்தரநாதத்தை ஆழ்த்தினர். சுந்தரநாதம் செய்யும் இந்த ஏற்பாட்டிலும், தனக்கு வரலாம் என்று நினைத்த அபாயத்தினின்றும் தான் தப்ப வழி ஒன்று இருக்கிறதென்று மின்னெனக்கண்டார் காரியதரிசி. உடனே சுந்தரநாதமும் "நான் சாமர்த்தியனுகத்தா னிருக்கவேண்டும்; ஆம் இந்த யோசனை எல்லாருக்கும் தோன்றுகிறதா? இன்று நான் சந்துவழி சென்றது நல்ல காலமே!" என்று எண்ணிச் சிறிது சந்தோஷ முற்றனன். இவ் விணெண்ண முடையான் களிப்புறுவதைக் கண்ட காரியதரிசி, இச்சமயம் தான் ஒருவிதத்திலும் அகப்பட்டுக் கொள்ளாமலே, சுந்தரநாதத்தைக்கொண்டே தனக்கு நேரிடக்கூடிய கொடிய ஆபத்தினின்றும் நீங்கலாம் எனத் தனக்குள் மகிழ்ந்து, வெளிக்குக் காட்டாது, சுந்தரநாதத்தையே தூக்கிப்பேசி, அவன் நலத்தையே கோருபவன்போல் பாசாங்கு செய்தார்: "ஆமாம். நீர் சொல்லுவதுதான் சரி. விஜயம் என்ன உம்மைவிடப் பெரியவனு? எந்த விஷயத்தில் நீர் விஜயனுக்குத் தாழ்ந்தீர்? நீர் சொல்லுவது நிரம்ப சரி. தாமதிக்காது இதைச் செய்யும். எல்லாம் நீர் சீக்கிரம் செய்வதில்தான் இருக்கிறது." என்று சுந்தரநாதத்தைப் பார்த்து அவன் சௌகரியத்தையே நோக்கி அகமகிழ்வான்போல் பகல்வேஷம் போட்டார் நமதுகாரியதரிசி.

இதைக் கேட்டுப் புளகம் எய்திய சுந்தரநாதம், "ஆனால், விஜயத்தினிடம் அந்தச் சந்தேகமட்டும் நீங்கவில்லை. நான் இவ்வளவு கஷ்டப்பட்டு மண முடிக்கும் தறுவாயில், விஜயத்தால் ஒருகால் தடைபடலாம்." என்று சிறிது யோசித்துச் சொன்னான். மறுபடியும், காரியதரிசியைப் பார்த்தும் பார்க்காதவனாய், "மேலும் எனக்கொரு எண்ணம் அடிக்கடி தோன்றுகிறது: 'விஜயம் இருக்கிறவரையில் காருண்யம் என்னை நேசியாள்.' என்று என் காதில் அடிக்கடி கேட்கிறதுபோல் இருக்கிறது." என்றான். காரியதரிசிக்கு அளவற்ற ஆனந்தம் உண்டாயிற்று. அதிக மகிழ்ச்சியில் ஒன்றும் பேசவராது சுந்தரநாதம் மேலும் பேசட்டுமென்று பார்த்திருந்தார். சுந்தரநாதமும் இப்போது சற்றுச் சிந்தித்தான். தான் மணிமங்கலத்துக்கு வந்ததுமுதல் செய்தனவெல்லாம் ஞாபகப்படுத்தினன். 'நான் செய்கிறதெல்லாம் சரியல்லபோல் இருக்கிறதே.' என்றும் ஒரு நினைவு உண்டாய் மறைந்தது. ஆகவே அவன் "எனக்கு உண்மையில் கண்ணகியிடம் பிரியம் இருக்கிறது. அவளும் என்னிடம் அதிகப் பற்றுக் காட்டுகின்றனள். மகாதேவர் விஜயம் முதலானவர்க்கும் அது சம்மதமாயிருக்கும். இப்படிக் காருண்யத்தை மணப்பதில் என்ன நலம்? நேற்றுக் கண்ணகியைக்கண்டு பேசியது முதல் எனக்கு இவ்விஷயத்தில் அதிக ஊக்கமில்லை. ." என்று கனவு காண்பவன் வாய் பிதற்றுவதுபோல் மெள்ளமெள்ளத் தனித்தனியாய்ச் சற்று சிந்தித்தவாறே பேசினன்.

இப்போதும்காரியதரிசிக்கு வாய் உலர்ந்தது, மார்பு அடித்தது, மனம் பதறிற்று. ஆனால் இவை சமயம் தப்பிப்போகிறதே என்ற பயத்தினால் உண்டாயின. தாம் மனத்தே கொண்ட எண்ணத்திற்கு வெகு சமீபத்தில் சுந்தரன் வந்தான் என முன் நினைத்தபோது அடங்கா ஆனந்தம் உண்டாயிற்று. இப்போது காரியதரிசி சற்று அயர்ந்தால் காரியம் ஒன்றுமே நடவாது: 'சுந்தரநாதம் காருண்யத்தைக் கல்யாணம் செய்துகொள்ள ஒரு முயற்சியும் செய்யான். கண்ணகியிடம் பிரியமுள்ளவனாகக் காணப்படுகிறான். மகாதேவருக்கு மாப்பிள்ளையாகவும் விஜயத்திற்கு மைத்துனனாகவும் ஆன பிறகு, சுந்தரநாதம் என்வழி வருவது அசாத்தியம். ஏ எ, ஒருகால் இந்த அசடனால் எனக்குப் பெரிய ஆபத்தும் உண்

டாகலாம். இவன் என்னிடம் இருக்கிற வரையிற்றுன் என் வழியில் போவான். அவர்களிடம் போனுல் என்னு டைய பேச்சைக் கேளான். ஆ ஆ! இவனை மெள்ள நம் வழியே திருப்புவதன்றே நம் சௌக்கியத்திற்கும் நம் சாமர்த் தியத்திற்கும் தகுதி! இவனை விடில் நம் காரிய முழுவதும் கெட்டு நாம் அழிவது திண்ணம்." என்று அதிக யோசனை யில் வீழ்ந்தார் காரியதரிசி. உடனே சுந்தரநாதத்தை இவ் வித எண்ணங்களில் மனம் செல்ல ஒரு நிமிஷமும் விடக் கூடாது எனத் தீர்மானித்து, தன் உள்ளக்கருத்து வெளிப் புலப்படா வண்ணம் கொஞ்சம் சிரிக்க முயன்று, சுந்தர நாதத்தின் முகத்தை உற்று நோக்கி, "சீச்சீ! இது என்னங் காணும் யோசனை! பெண்கள் மாதிரி புத்தி மாறுவது நமக்குத் தகுமா? இவ்வளவு சிறிய வயதில் ஒரு பெரிய உத்தியோ கத்திலிருக்கும் உமக்கு இவ்வளவு மனவலிமை இல்லையா? ஆ ஆ! நீர் மிகவும் மனஉறுதியுள்ளவர்; எடுத்த காரியம் முடிக் கும் வலிமையுள்ளவர்; எதற்கும் பின்வாங்காதவர் என் றல்லவோ நான் நினைத்தேன். யாராயிருந்தாலும் சிறு பிள்ளை சிறு பிள்ளையே. என்னங்காணும்! காருண்யத்தைக் கல்யாணம் செய்துகொள்ளவேண்டும் என்னும் விருப்பு உமக் கிருக்கில், விஜயம் இருந்தால் என்ன? மற்றெவர்தான் இருந்தா லென்ன? உம்மைவிட விஜயம் எந்த விஷயத்தில் உயர்ந்தவன்? அதுதான் எனக்கு எற்படவில்லை. மேலும் காருண்யமும் உம் மை நேசிப்பாள். அதற்கு வழியிருக்கிறது என்கிறீர். விஜயம் இருக்கிற வரையில் முடியாதென்றுல் அதற்கும் ஏதாயினும் நீர் செய்தல் கூடும். உமக்கு அவனிடத்தில் பெரிய சந்தேக மும் இருக்கிறது. அதையும் ஒழிக்க வழிதேடுமே. ஒன்றிற்கு வழி அறிந்த நீர் மற்றென்றிற்கு மட்டும் வழி அறியீரோ?" என்று, தன் நயவஞ்சகப் பஞ்சைச் சொற்களைச் சுந்தரநாதம் செவிவாய்ப் பெய்து, அவன் தன் வலையில் சிக்கினுன் என்று அவனைக் கூர்மையாகப் பார்த்தனர்.

காரியதரிசியினிடம் இருந்து இவ்வளவு பெரிய பேச்சு வருவதன் முன்னரும் பின்னரும் ஒரே நிலையில் நிற்றல் சுந் தரநாதத்திற்கு முடியாது. தனக்குச் சுபாவமாயுள்ள நற் குணம் சிறிது தோன்றினதும், காரியதரிசியின் நிக்குணமாகிய

பெருவெள்ளம் தோன்றி, அதை இருந்த இடம் தெரியாது மறைந்துபோகும்படி செய்தது.

'எடுத்த காரியத்தை விடல்' என்கிற சத்தம் சுந்தரநாதத்தைப் பயப்படுத்திற்று. எடுத்த காரியத்தை விடக்கூடாது போல் இருக்கிறது என நினைத்தான். அப்படி விடுவது மனிதன் பெருந்தன்மைக்குக் குறைவுபோல் இருக்கிறதென்றும் கருதினன். எடுத்த காரியத்தை விடக்கூடாது என்பதின் அர்த்தம் என்ன? ஏன் அப்படி விடக்கூடாது? அதன் பல காரணங்கள் என்ன? என்பனவற்றை அவன் சிந்தித்தானல்லன். இச் சத்தம் அடிக்கடி கேட்கிற சத்தமாய் இருக்கவே, அந்த மாதிரி நடப்பதுதான் சரிபோல் இருக்கிறதென்று உன்னினன். சுந்தரநாதத்துக்கு ஒவ்வொரு விஷயமும் 'போல் இருக்கிறது' தான். அவனுக்கென ஒன்றும் செய அறியான் என்றால், பிறகு கேட்பானேன்? நம் நாட்டில் பெண்களில் கொஞ்சங் குறைய யாவரும் புருஷர்களில் முக்கால் பங்கினரும் இவ்வகுப்பில்சேர்ந்தவர் அன்றோ? அர்த்தம்தெரியாமல் அடிக்கடி கேட்கும் சத்தமும் காணும் காட்சியும் அவர்களுக்கு எவ்வளவு அவசியமாய்த் தோன்றுகின்றன? இவ்வகையான கேள்விகளையும் காட்சிகளையும் ஆயிரக் கணக்காய் முழு அர்த்தத்தோடு உண்டாக்கக்கூடிய தம் மனவலிமையை அவர் அறிந்தாரல்லர், தம் அறிவை அவர் நம்பினாரல்லர். இப்படிப்பட்ட மனவலிமை தம்மிடம் உண்டோ என்று சந்தேகமும் உறாதவர் எத்தனை கோடி! இதுவே மூடநம்பிக்கை. இழிந்த கொள்கைகள் உதிப்பது இங்கேதான்.

ஆதலின் சுந்தரநாதம் "இல்லை யில்லை. நான் அவ்விதம் எடுத்த காரியத்தை விடவில்லை. என்னமோ அப்போது தோன்றியதைச் சொன்னேனே தவிர, வேறொன்றும் இல்லை." என்று அவசரமாய்ச் சொன்னான். "நான் போவதாயிருந்தால் விஜயத்திற்கும் இன்னொரு கிண்ணம் வாங்கிவருவேன்." என்றார் காரியதரிசி. அப்படியா என மருண்டு நோக்கினன் சுந்தரநாதம். உடனே காரியதரிசி இவனிடம் சில வார்த்தைகள் நமக்குக் கேட்கா வண்ணம் சொன்னார். ஆனால், இவ்வளவு தூரம் காரியதரிசியைப் பார்த்த நமக்கா இக்கொலைமகன் அர்த்தம் தெரியாது?

## உஉ. சூன்யம்.

Yes, this man is a beautiful human ruin; in the furrows over these weather-beaten eyebrows brood owls learned in mystic lore, and behind that forehead lurk wicked ghosts; at midnight the graves of dead desires reopen, pale shadows throng therefrom, and through the desolate cells of the brain glides Marguerite in disarray.—*Heinrich Heine.*

இரவு மணி பத்தாயிற்று. சந்திரன் தோன்றிப் பிரகாசித்து மறைந்தனன். ஆகாயவழியாய்ச் சூல்கொண்ட இருண்ட மேகங்கள் கரிக்கூட்டங்களே போன்று மலைகளின் உயர் சிகரங்களை நாடின. இவைகளால் மறைபட்டு இங்கொன்று அங்கொன்றே தெரிந்தன நட்சத்திரங்கள். மலைகளும் குன்றுகளும் ஒரே நீலமாயிருந்தன. பெருமரங்களும் கற்பாறைகளும் இருட்டில் புதைந்தன. சிறுத்தை, புலி, முதலியவைகள் நினைத்தமாத்திரம் எதிர்வந்து ஒவ்வொரு புதரிலும் தோன்றின. காலிற்படும் ஒவ்வோர் முள்ளையும் மனம் பாம்பாக மாற்றிற்று. பேய்களும் முனிகளும் மனிதனுக்கு அந்நேரம் அஞ்சினவில்லை. இச்சமயம் மணிமங்சலத்தின் வடதிசையில் ஆற்றின் அருகேயுள்ள சுடுகாட்டிற்குச்சமீபத்தில் உள்ள ஒரு சிறு ஆட்பாதையில் இருவர் போய்க்கொண்டிருந்தனர். ஒருவருக்கொருவர் அவர்கள் பேசினுர் அல்லர். விளக்கு இன்றி, கைகளில் பிடித்த இரண்டு சிறு மூங்கில் கழிகளோடு சத்தம் ஒன்றுஞ்செய்யாமலே போனுர்கள். முன்னே ஒருவன் வழிகாட்டிச் சென்றுன். பின்னல் மார்பு அடித்துத் தலைவலிகொண்டு மற்றொருவன் தொடர்ந்தான்.

இவர்கள் நெருங்கியே செல்லினும் ஒருவர்க்கொருவர் தெரியாமல் போவதுபோல் தோன்றிற்று. முன்னே போகிற மனிதன், ஒரே நடையாய் நிற்காமலும் யோசிக்காமலும் திரும்பிப்பாராமலும் அவ்வழியில் ஆயிரந்தரம் போனவன் போன்று செல்ல, பின்தொடர்பவன் அவனைப்பற்றி நிழல்போல் சென்றுன். இவர்கள் அச்சுடுகாட்டிற்கு நேர்வடக்கில் வரலும், அங்கு ஓர் பிணம் எரிந்து புகைவதைக் கண்டு, சற்றே தம்மை அறியாது நின்றனர். படீர் என்று சத்தமிட்டுக்கொண்டு மங்கி எரியும் தீ, சிற்சில சமயங்களில் உயர எழுந்து கொழுந்துவிட்டும், பிறகு எரியாது அவிந்தும் தோன்றியது. சுடு நாற்றம் எப்பக்கமும் நிறைந்தது. முன் செல்பவன் இதற்கு அதிக

மும் மனம் மருண்டானல்லன். ஆனால் பின் செல்பவன் பெரிதும்பயப்பட்டான். பிறகு தைரியமுற்றுச்சிந்திப்பவன்போல் இருந்தான். அப்போது பின் வருவன தெளிவாய் அவனுக்கு ஞாபகத்தில் வந்தன:

தவத்துறை மாக்கள், மிகப் பெருஞ் செல்வர்,
ஈற்றிளம் பெண்டிர், ஆற்றுப் பாலகர்,
முதியோர் என்னான், இளையோர் என்னான்,
கொடுந் தொழி லாளன் கொன்றனன் குவிப்ப—இவ்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்,
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து,
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ?*

ஞாபகம் வரலும், அவன் மனம் கலங்கித் தடுமாற்ற முற்றது. பேசாது நின்றான். ஆனால், முன் செல்கிறவன் சற்றுத் தளர்ந்த குரலில், கையை அந்த ஈமக்காட்டின் பக்கம் நீட்டி "அதான் கொள்ளிவாப்பிசாசு. பாத்திங்களா?" என்றான்.

"எங்கே? எனக்குத் தெரியவில்லை." என்றான் பின்வருபவன்.

"சித்த இருங்க. மறுபடியுங் காட்ரேன்." என்று சொல்லிப் பழையபடி நடக்க ஆரம்பித்தனன் முன்னவன். இன்னும் சிறிதுதூரம் போனதும் முற்செல்பவன் நின்று "அந்தக் குரலைக் கேட்டீங்களா?" எனக் கேட்டான்.

"குள்ளநரிக் கூச்சல்போல் இருக்கிறது." என்றான் மற்றவன். "குள்ளநரியு மில்லை, குறுநரியு மில்லை. அதுதான் பொண்பேய் அழுகுர குரல்." என்றான் பேய்விஷயம் தெரிந்தவன்.

மறுபடியும் கொஞ்சதூரம் போய்ப் பின் நடப்பவன் முன் போகிறவனை நிறுத்தி, "அதென்ன படுகறுப்பாய் உயரமாய் இருக்கிறதே? அதோ அது. இதற்கு நேராகப் பார்." என்று அதிகமும் பயந்தவன்போல் குளறினான்.

"அடே அப்பா! நீங்க அதைப் பாத்துட்டீங்களா? அது தான், அதுதான், சடாமுனி. ராவுலே வேட்டைமார்க்கம் போவார் அவர். நீங்க பயந்துட்டா, காலுங் கீழே இருக்கிற

* மணிமேகலை.

மண்ணை நெத்தியில் இட்டுக்கிங்க." என்று அபாயத்தைச் சொல்லி அதற்கு மருந்தும் சொன்னான்.

பிறகு இவர்கள் வெகு தூரம்வரையில் வாய்திறக்காமலே முன் வந்ததுபோற் போயினர். வழி வரவர காட்டுக்குட் சென்றது. புதர்களுக்கும் சப்பாத்துக்கும் இடையிலுள்ள குறுகிய வழியில் நடந்து உயர்ந்த ஒரு கருங்கல் குன்றின் மீது ஏறினர். அக்குன்றினின்றும் மறுபடியும் மெதுவாய் உட்கார்ந்தபடி இறங்கி ஒரு பள்ளத்தைப் போய்ச் சேர்ந் தனர். ஒரு சத்தமும் இவர்கள் காதில் படவில்லை. அப் பள்ளத்தூடே நடந்து மேற்குமுகமாகப் போயினர். வரவர மணற்பூமியாய் இருந்தது. செடி கொடிகள் ஒன்றுமில்லை. தூரத்தில் அவர்களுக்கு எதிரில் ஒயாத சிறு சத்தம் ஒன்று கேட்டது. அது வரவர அதிகமாயிற்று. "அந்தக் கொளத் திலேதான் குளிக்கவேணும்." என்றான் தெரிந்தவன். சரி என்றான் மற்றவன். உடனே இன்னும் சற்றுநேரத்திற்கெல் லாம் இவ்விருவரும் அவ் இடிந்த குளத்தின் தாறுமாறான படிக்கட்டுகளில் நின்றபடி ஜலத்தில் முழுகி எழுந்தனர். எழுந்து அக்குளத்தின் வடகரையிலுள்ள பெரிய மரக்கும்ப லின் மத்தியில் சென்றனர்.

அங்கே கால் உடைந்தனவும் தலை போனதுவுமான குதி ரைகளும் யானைகளும் நின்றன. உயர வெளவால் ஓயாச் சிறு கூச்சல் இட்டது. இவைகளெல்லாம் கவனிக்க அவர் களுக்கு நேரமில்லை. ''சடா முனிக்குக் கும்பிடு. வியுந்து கும்பிடு." என்று தானும் கீழே விழுந்து கும்பிட்டான் பெரிய வன். உடனே ஓர் ஆந்தை பெருங்குரல் இட்டது அடுத்த மாப்பொந்தில். இக்குரலைக் கேட்டு, சில பறவைகள், எழுந் தனபோல் சிறிய ஒலி செய்தன. "இது நல்ல சவுனம்." என் றான் ஒருவன். பிறகு அவ்விருவரும் வந்தவழியே திரும்பிப் பள்ளத்தாக்கைக் கடந்து, கருங்கற் குன்றின் கரடு முரடான ஈசானிய திசைக்குப்போய் அங்கே உட்கார்ந்து வடக்குத் திசைநோக்கிப் பார்த்தனர். '''விளக்குப் போடுரேன். அது தெரிஞ்சாதான் நீ வரணும்' இண்ணு அவ. நான் ஊர் தூங்கிற சமயம் வாரண்ணே. நாம் கொஞ்சம் மின்னே வந்துட்டம்." என்றான் வழிகாட்டி.

உடனே மற்றவன் "அடே அப்பா! உடம்பு சிலிர்க்கிறது. மயிர்க்கூச்செறிகிறது. இந்த ஊதற்காற்றென்ன இப்படி வீசுகிறதே!" என்று வாய்நடுங்கப் பேசினான்.

இதற்குப் பெரியவன் "அப்படி எல்லாம் சொல்லாதிங்க. கன்னிமார் குளத்துக்கு வர்ர நேரமாச்சு, மனசை உறுதிப்படுத்திக்கிட்டு, சோமனே நல்லாப் புயிஞ்சி மேலே போட்டுக்கிங்க. மணலே அப்படித்தான் உதறிடுங்க." என்று பயந்தவனைத் தைரியப்படுத்தினான். உண்மையில் கடைசியிற் பேசிய இவன் மிகவும் வயது முதிர்ந்த கிழவன். தோலெல்லாம் சுருங்கித் தசையின்றி எலும்புக் கூடாயிருந்தது அவன் தேகம். அறையிற் சுற்றிய சிறுகந்தலும் நனைந்திருந்தும், அவ் ஊதற்காற்றிலும் அவன் உடம்பு சிலிர்க்கவில்லை. பழக்கமும் ஏழ்மையும் என்செயா? சற்றுப் பொறுத்துக் கிழவன் "நான் அண்ணக்கிச் சொன்னாப்பல அவ பச்சை மலையாளம்போனவ. அவ சொன்னபடிதான் செய்யணும். நம்ம சங்கதி செயந்தான்: அதோ தோ, அதோ வெளிச்சம் தெரியுதே அதுதான்." என்று கையை நீட்டினான்.

மற்றவன் "ஆமாம் எழுந்திரு." என இருவரும் அவ் வெளிச்சம் நோக்கிப் போக ஆரம்பித்து, செடி கொடிகளைக் கடந்து, ஒரு வேலியைத் தாண்டி, அவ்விளக்கு எரியும் ஒரு பாழ்ங் குடிசைக்கு வந்து சேர்ந்தனர். உடனே உள்ளேயிருந்து வெம்பிய ஓசையொன்று "கறுப்பா! சொன்னாப்பல வந்தாட்டியே." என்றது. "ஆமாம். கதவைத் திற." என்றான் கறுப்பன். கதவு மறைவாய் திறக்கப்படவே இருவரும் உள் நுழைந்தனர். வாயிற்படி அரை ஆள் உயரமே இருந்தது. கதவு மூங்கில் கழியாலானது. கல்லையும் மண்ணையும் கலந்து கட்டியிருந்த கரடு முரடான பெரிய வெடிப்புடைய சிறு சுவர்கள், ஒரு மூலையில் முட்களை இட்டுக் கொளுத்திய தீயின் மங்கிய புகையுடைய வெளிச்சத்தில், கறுப்பனோடு உட்புகுந்த நம் சுந்தரநாதத்திற்கு, நரகத்தை உள்ளடைக்கும் மதில்களை போன்று இருந்தன. கற்கள் மூன்று சேர்த்து அமைத்த அவ் அடுப்பின்மேல் கரிய மண்சட்டி ஒன்று வைத்திருந்தது. அதில் ஏதோ தளதள எனக் கொதித்துப் பொங்கி வந்துகொண்டிருந்தது. மற்றொரு மூலையில் கறுத்த காட்டுப்பூனை ஒன்று படுத்துக்கொண்டிருந்

தது. இவைகளே சுந்தரநாதத்திற்கு முதலில் அடுப்பு வெளிச்சத்தால் தெரிந்தன. ஆனால் அவ் இல்லாள் உடனே ஒரு சிறு மண்ணகலில் கொஞ்சம் எண்ணெயிட்டுத் தன் துணியின் மூலையைக் கிழித்துத் திரியிட்டு எரித்து, வந்த புது மனிதன் யாவன் பார்க்கலாம் என்று அவன் முகத்திற்கு நேரே விளக்கை நீட்டிப் பார்த்தாள். உடனே இவள் தோளின்மேல் ஒரு தேவாங்கு உயரவிருந்து பொத்தெனக் குதித்தது. சுந்தரன் திடுக்கிட்டு ஒதுங்கினன். "அதொண்ணுமில்லே. என் பாப்பாத்தி! அது ஒண்ணும் பண்ணாது." என்று அதை எடுத்துத் தன் காலிடம் விட்டாள்.

அவள் ஒரு படுகிழவி, வயது அறுபது இருக்கலாம். இடுப்பில் மாத்திரம் வெள்ளைக் கோடிட்ட கறுப்பான கந்தல் துணியொன்று சுற்றியிருந்தாள். கையிலுள்ள நகங்கள் நீண்டு வளர்ந்திருந்தன. தலை மயிரே இல்லாது சொட்டையாய் இருந்தது. பற்களெல்லாம் விழுந்து தாடைகள் ஒட்டித் தோல் சுருங்கி மேலெல்லாம் தொங்கியது. சுந்தரன் இவளையும் இவள் அகத்தையும் பார்த்துப் பாதிபயமும் பாதிவெறுப்பும் அடையும்போது, அவள் கறுப்பனிடம் ஏதோ சைகை செய்தனள். உடனே அவள் இவ்விருவர்க்கு எதிரில் உட்கார்ந்து ஒரு மூலையிலிருந்த மண்டையோடுகளையும், எலும்புகளையும், வேர்க்கற்றைகளையும், துணிகளாலும் மயிர்களாலும் செய்த சில பதுமைகளையும் தன் எதிரில் இழுத்துப் பரப்பினள். பிறகு ஒரு அழுக்குத் துணிப் பையை எடுத்து அதில் கைவிட்டு அநேக சில்லறைச் சாமான்களை எடுத்து, "கறுப்பா! உனக்காக நான் இம்மாம் வேலைசெய்தேன்." என்று சொல்லி அவைகளையும் பரப்பினள். அப்போதே சட்டியும் பொங்கிற்று. உடனே இவள் எழுந்து அருகிலிருந்த மூளி அகப்பை ஒன்றை எடுத்து, சட்டியிலிட்டுத் துழவி, சட்டியைக் கீழே இறக்கி "உன் வேலை முடிந்தது, கறுப்பா!" என்றாள்.

உடனே கறுப்பன், சுந்தரம் இடுப்பில் வைத்திருந்த ஒரு பணப்பையைக் கையில் வாங்கினன். அதற்குள் அம்மந்திரக்காரி சட்டியில் உள்ளதை ஒரு மண்டை ஓட்டில் ஊற்றினாள். பிறகு அவ் ஓட்டைக் கையில் எடுத்து, அதை, நிறுத்திவைத்த ஒரு எலும்புப் பதுமைக்கு அர்ப்பணஞ் செய்தாள். பிறகு மற்றொரு வெள்ளெலும்பால் அம்மண்டை

ஓட்டினுள் துழவிக்கொண்டே மொண மொண என்று மந்திரித்தாள். பிறகு இவ்விருவர்களுக்கும் கேட்கும்படி "ஓம் மலையாள பகவதி!—ஓம் காளி!—சுவாகா! சுவாகா!! சுவாகா!!!" என்று கைகூப்பிச் சொல்லிவிட்டு மறுபடியும் கால் நாழிகை நேரம் மொண மொணத்தாள். பிறகு மண்டை ஓட்டைச் சுட்டிக்காட்டி "இதுதான் அந்தப் பொம்பளேக்கி. இதை நீயா கொடுக்கப்போறே? இதை அவள் குடிச்சுவிட்டால் உம்மேல் எப்பவும் புரியம் விடாது." என்றாள் சுந்தர நாதத்தைப் பார்த்து அவனும், தன்னைச் சுற்றிலும் எப்படி இருந்தாலும், காருண்யம் நினைவு மிகவே, கொஞ்சம் சந்தோஷம் அடைந்தவன்போல் இருந்தான்.

"இன்னொண்ணு சொன்னேனே அதெங்கே?" என்றான் கறுப்பன்.

கறுப்பன் கேள்வியைச் செவி ஏற்காது கிழவி "என்ன கறுப்பா! கொளத்திலே தலைமுழுவி சடாமுனிக்கு உழுந்து கும்பிடலே?" என்று தனது குழிந்த சர்ப்பக் கண்களில் கோபம் பொறி பறக்கக் கேட்டனள். சுந்தரத்துக்குத் திடுக்கிட்டு ஒன்றும் பேசமுடியவில்லை. முதலிற் பேசாதிருந்தனனேனும், கறுப்பன் பிறகு "நல்லா பார் மாரியாத்தா! என் தலையைத் தொட்டுப் பார்." என்று அவள் கையை எடுத்து இழுத்துத் தன் தலையில் வைத்தான்.

உடனே அவள் க்ங்ஃ என்று வறண்ட தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு "சரி! நீங்க போங்க. எனக்கு வேலை இருக்குது." என்று மூலையிலிருந்த பூனையைக் கூப்பிட்டாள்.

ஆனால் கறுப்பன் "இன்னொண்ணு சொன்னேனே அதக் கொடுத்தா தான் போவோம்." என்று அழுத்திச் சொன்னான்.

உடனே கையிலெடுத்த கறுப்பை அப்படியே நழுகவிட்டு "அது நான் தரமாட்டேன். உசர சாமி இருக்கலியா! நான் தரமாட்டேன். நீ எம்மாம் பணம் கொடுத்தாலும் தரமாட்டேன்." என்றாள் அவள்.

கறுப்பன் பணத்தைக் கையில் எடுத்து அவளிடம் காட்டி "எங்களுக்கு மாத்திரம் சாமி இல்லையா! நீ மாத்திரம் முனியன் வூட்டில், அண்ணைக்கி அவன் இல்லாதவேளை, அவன் உனக்கு ஆவாதபோனுக்க, எலும்பைப் போடச் சொல்லலாமா?" என்று மிரட்டினான்.

உடனே அவள் சுந்தரத்தைப் பார்த்து, "ஆனா ஒரு உயிரைக் கொல்லலாமா? சாமி உங்களைக் கேக்கும்." என்று சொல்லிக் கறுப்பனைப் பார்க்க, அவன் கண்கள் சுந்தரம் பக்கல் திரும்பிச் சிமிட்டின. ஆகவே தப்ப வழியில்லை என்று உணர்ந்து அவள் பையில் இருந்த ஒருவேரைக் கொடுத்து, "இதை எயைச்சி தண்ணிலே போட்டுக் குடிச்சா முடிவுதான்." என்றாள். அதைக் கைநடுங்க வாங்கிய சுந்தரமும் விஜயம் ஒழிந்தால் தனக்குக் காருண்யம் நிச்சயம் என்று நினைத்துத் தனக்கு இவ்வழி காட்டிய கிழவனோடு திரும்பினன் மணிமங்கலம் பக்கம்.

## உ௩. வனவிருந்து.

If weekness may excuse,
What murderer, what traitor, parricide,
Incestuous, sacrilegious, but may plead it?
All wickedness is weekness; that plea therefore
With God or man will gain thee no remission.—*Milton.*

மந்திர விஷயம் முடிந்து இருவாரங்கள் ஆயின. சுந்தர நாதத்திற்கு இன்னும தக்க சமயம் வாய்க்கவில்லை. ஆனல் இன்னும் சில தினங்களுக்குள் தனக்குத் தக்க சமயம் வரும் என்று எதிர்பார்த்தான். இதை இவன் சீக்கிரம் முடித்தற்பொருட்டுக் காரியதரிசி தூண்டும் தூண்டுதல் கொஞ்சமல்ல. "விஜயன் விஷயந்தான் முதலில் கவனிக்கவேண்டியது; இது முடிந்தால் காருண்யத்தின் மணம் தானே தொடரும்." என்றார் காரியதரிசி. ஆனல் சுந்தரன் மருந்தை வாங்கி வந்தனனே ஒழிய விஜயத்திற்கு அதை உடனே கொடுத்து முடிக்கவேண்டுமென்று தோன்றவில்லை. இப்படிப்பட்ட சமயங்களில்—காரியதரிசிக்குக் காததூரத்தில் இருக்கும்போது—அவன் மனம் தளர்வெய்தா திருக்கும் பொருட்டு, சுந்தரன் தனக்குள்ளேயே "நான் ஷண்முகநாதர் வீட்டிற்கு அன்றிரவு போனதை விஜயம் பார்த்தான், பார்த்தான்; பார்த்தான்." என்று சொல்லிக் கொள்வான். இஃதிப்படி யிருக்க.

ஷண்முகநாதர் கலகம் நடந்த அன்றிரவு முதல் "நாம் தனியே காருண்யத்துடன் இருக்கிறோம் என்று ஒருகால் இம்மாதிரி கலகங்கள் நடத்தல் கூடும். காருண்யத்திற்கும்

தக்க வயது வந்திருக்கிறது. அவளும் விஜயத்திடம் அதிக நேசம் பாராட்டுகிறாள். விஜயமும் இதற்கு இசையாநிற்பான். மகா தேவர்க்கும் இது சம்மதமாய்த்தான் இருக்கும். அத்தை பெண்ணுக்கும அம்மான் பிள்ளைக்கும் பொருத்தம் முத லியவை பார்ப்பதும் வேண்டுவதில்லை. ஆதலின் சீக்கிரம் கல்யாணம் நடத்துவதே சரி." என்று மனதிலே தீர்மானித்து, இவ்விஷயத்தை மகாதேவரிடம் வெளியிட்டனர். மகா தேவர்க்கு விஜயமும் காருண்யமும் ஆழ்ந்த காதலர் என்பது தெரியும். ஆகையின் அவருக்கு ஷண்முகநாதர் "அவர்கள் சம்மதியைக் கேட்பானேன்? அவர்கள் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தகுந்தவர்கள். காருண்யம் விஜயத்தை நேசிக் கிறாள். விஜயம் கல்யாணத்தை மறுக்கமாட்டான். நாம் சீக்கி ரம் முடித்தல் வேண்டும்." என்று சொல்வது நகைப்பை விளை வித்தது. "நீங்கள் இவ் இரு மணமக்களின் அத்தியந்த நேசத்தை அறியவில்லை போலும். விஜயமாவது மறுக்கிற தாவது!" என்றார் மகாதேவர்.

இவ்வண்ணம கல்யாணப்பேச்சு நடந்துகொண்டிருக்கும் போது வருஷாவருஷம் மகாதேவர் தன் சுற்றத்தார்க் கும் சிநேகிதர்களுக்கும் வனவிருந்து செய்து வைக்கிற நாள் வந்துசேர்ந்தது. மணிமங்கலத்திற்கு வடமேற்கில், சுமார் இரண்டு மைல் தூரத்துக்கு அப்பால், மலையைச்சார்ந்த பெருமரக்காட்டின் மத்தியில், மணிமுத்தாநதியின் தென் கரையில், பத்துகாணி விஸ்தீரணத்திற்கு, மரங்கள் புதர்கள் முதலியவை இன்றிச் சமமான பசும்புல் தரையை, ஏறக் குறைய இவ்வெளி முழுவதும், தென்னை மட்டைகளால் இட்ட பந்தல்கள் சூரிய வெப்பத்தைத் தணித்திருந்தன. பெரிதும் நீண்டு, புருஷர் சாப்பிடுவதற்கு என அமைத்த பந்தர் தென் பாகத்திலுள்ளது. சமைப்பதற்கு எனக் கட்டியது கீழ்ப்புறத் தில் உள்ளது. மேற்பக்கத்துள்ள சிறு பந்தலே மகளிருக் கென அமைத்தது. போஜனம் செய்தபிறகு இருந்து களிப் புறுவதற்கு, இவைகளுக்கு எதிரில், வடபாகத்தில், நாற்கோண வடிவாய், ஒரு பந்தல் அலங்காரமாய் அமைத்திருந்தது. இவ் வணம் குறித்த தினத்திற்கு முன்னமே தயார் செய்யப்பட்ட அவ்விடத்திற்கு, அன்று காலை காளைகள் கட்டிய பெரிய வண்டிகள் பல, காட்டின் மத்தியில் போகும் வண்டிப் பாதை

யின் வழியாய்வந்து, சமைப்பதற்கு வேண்டும் சாமான்கள் யாவற்றையும் கொண்டு சேர்த்தன. சமையல் ஆட்கள் முதலியவர்களும் வந்துசேர்ந்தார்கள். அடுத்த மணிமுத்தா நதியில் பளிங்கென ஓடும் தண்ணீரைப் பெரிய பாத்திரங்களில் மொண்டுவந்து இடத்தைச் சுத்தஞ் செய்து சமைக்க ஆரம்பித்தனர். சமயற்காரர்களின் ஒய்யாரமும், பரிபாஷையும், சமைக்கும் வேகமும், ஒருவர்க் கொருவர் விருது பேசுவதும், ஒருகால், அங்கு வந்து அப்போது பல விசித்திர வண்டிகளிலிருந்து இறங்கும் புருஷர்களையும் ஸ்திரீகளையும் பற்றி நாம் தெரிய விரும்புவதினின்றும், நம் கவனத்தைத் தம்மிடம் திருப்பா.

விருந்துக்கு வரும் யாவரையும் உபசரிக்க விஜயமே முதலில் தன் அழகிய குதிரைமீது ஏறிவந்து இறங்கினன். வருபவர் யாவரையும் சிரித்த முகத்தோடும், இனிய மரியாதை வார்த்தையோடும், அவரவர்க்குத் தக உபசரித்து வரவேற்றான். விஜயம் இன்று பார்ப்பவர் யாவருக்கும் தேவனேபோல் விளங்கினன். அவன் உடை வழக்கம்போல் அதிக ஆடம்பரம் இன்றிச் சிறப்புற்றே இருந்ததாயினும், அன்று, மார்பின் மீது அவன் அணிந்திருந்த சிங்காரப்பட்டு, பார்ப்பவர் கண்களைத் தன்னிடம் திருப்பி அதிசயிக்கச் செய்தது. பெரிய ஜமீன் கிழவர் வராவிட்டாலும், அவர் குடும்பத்தைச் சார்ந்த சில புருஷர்களும் ஸ்திரீகளும் குழந்தைகளும், சிறப்பான உடைகள் தரித்தும், விலை உயர்ந்த ஆபரணங்கள் அணிந்தும், வந்தனர். இளவரசி கோகிலம் அங்கு வரவில்லை. ஆனால் அவள் தோழி ருக்மணி சிறந்த பட்டுடை தரித்துச் செம்பொன் ஆபரணம் அணிந்து வண்டியினின்றும் இறங்கினாள். இவர்களோடு அநேகம் வேலையாட்களும் சேவகர்களும் வந்தார்கள். காரியதரிசியும் அவரைச் சார்ந்தாரும் சில வண்டிகளில் கொஞ்சம் ஆரவாரத்தோடேயே வந்து சேர்ந்தனர். பருத்த ஜமீன் காரியதரிசி, அவர்தம் கள்ளம் வடியும் உடையில், வீமன் சங்கரிக்கும் பகாசூரன் ஊர்கோலம் வருகிறான் என, ஊர்ந்தனர். பின்னேடு ஜமீன் சேவகர்கள் பலர் கூட்டமாக இருந்தனர். காரியதரிசி வந்து இறங்கியதும், மற்றொரு புறம் இருந்து வந்து நின்ற பெரிதும் சிங்காரித்த பலவண்டிகளினின்றும் பலர் இறங்கினர். மகாதேவரும் இவர்களில் ஒருவர். மகாதேவர் வண்

டியினின்றும் இறங்கித் திரும்பியதும், தன்னைப் பார்த்துப் பேச நினைத்து அருகில் நிற்கும் காரியதரிசியைப் பார்த்தனர். உடனே இவருக்குத் திடுக்கிட்டது. ஏதோ மறைந்த ஞாபகம் மறுபடியும் எழுவதே போல் இருந்தது. காரியதரிசியின் முகமும் மற்றைய உறுப்புகளும் இவர்மனதில் இணையில்லாக் கோதிப்பையும் வெறுப்பையும் உண்டாக்கின. அவர் தேகத்தை மேலுமேலும் உற்று நோக்கினர்.

"ஓ ஓ! இவரையே நான் அன்று கனவில் கண்டதும். காளி என்று நினைத்தது பெரும் பிசகே. இந்தக் கசடனையே நான் முன் கனவில் கண்டு பிறகு மறந்ததும். ஆ ஆ! இவனே அன்றோ காருண்யத்தையும் விஜயத்தையும் கனவில் தாக்கினான். விஜயன் காளியிடம் மறுபடியும் போவதை அவன் அறியாது தடுத்தேனே ஒழிய, இவனிடம் அவன் எதிர்படுவதைத் தடுத்தேனில்லையே. ஓ ஓ கனவுகண்ட பிறகு இதுகாறும் இவனைப் பார்த்தேனில்லை." என்ற எண்ணங்கள் அவர் மனதில் மின்னெனத் தோன்றின. இஃதெல்லாம் ஒரு விநாடியின் வேலையே. இங்ஙனம் மனக்கொதிப்புற்று நிற்கும் மகாதேவரைக் காரியதரிசி நோக்கி "தங்களைக் கண்டே ஒரு வருஷம் இருக்கும்போல் இருக்கிறது." என்றார்.

"ஆம் ஒருவருஷம் இருக்கலாம். நான் அடிக்கடி வெளியில் வந்திருப்பேனாகில் தங்களைக் கண்டிருப்பேன்." என்று மகாதேவர் சொல்லி மறுபடியும் திடுக்கிட்டார். "இவன் தீயனே. இவன் என் செயமாட்டான்?" என்று மாத்திரம் நினைத்தார். காரியதரிசி விஜயத்தைப் பற்றி எவ்வளவோ புகழ்ந்து பேசினர். மணிமங்கலத்திற்கு அவனே ஒரு மரகதம் என்று இவ்வாறு பேசிக்கொண்டிருந்தனர்.

பிறகு, மணிமங்கலத்துள்ள அநேகம் சுற்றந்தார்களும் சினேகிதர்களும் பல பல வண்டிகளிலும் வந்து, தங்களுக்கு முன் வந்திருப்பவரோடு பல பேச்சுகளைப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தனர். இப்போது தான் வந்த சிறு சிங்காரவண்டியிலிருந்து காரியதரிசியின் உதவி கர்த்தாவான சுந்தரநாதம் இறங்கினர். இவர், வந்ததும் காரியதரிசி எங்கே என்று மற்றொருவரையுங் கவனிக்காது, அவரிடம்நேரே போய் அவரைத் தனியே அழைத்து ஏதோ பேசிக்கொண்டிருந்தார். அப்போது அநேக வண்டிகளில் அநேக ஆடவரும் பெண்டிரும்

சிறுவர்களும் சிறுமிகளும் வந்து இழிந்தனர். இவர்களெல்லாரும் நமக்குத் தெரிந்த விஜயம் சுந்தரநாதம் முதலானவர்களுக்குத் தெரியினும், நமக்கு நேரே தெரியாமையால் இவர்களை ஒருவரோடொருவர் பேசவிட்டு, இப்போது தான் வந்து சேர்ந்த பெரிய எருதுகள் பூட்டிய வண்டிகள் பலவற்றினின்றும் இறங்கும் அவர்களைக் கவனிப்போம். புருஷர்களில் ஷண்முகநாதனரையும் பெண்களில் கண்ணகியையும் காருண்யத்தையுமே நாம் அறிவோம். இவர்களும் தங்கள் நிலைமைக்குத் தக்கபடி சிறந்த ஆடைகளை உடுத்துப் பல உயர்ந்த ஆபரணங்கள் பூண்டு வந்திருந்தனர். வந்த எல்லாரையும் விஜயம் அவரவர்க்குத் தக்கபடி உபசரித்து மரியாதையாய் வரவேற்றனன். விஜயத்தின் மீது படிந்த தம் சண்களை வேறுவழித் திருப்ப அநேகர்க்குச் சிறிதுநேரம் ஆயிற்று. காருண்யம் களிப்புக் கடலில் மூழ்கினளேனும், விஜயத்தை இக்கும்பலில் பார்க்க நாணினள். கண்ணகி "எங்கே சுந்தரநாதத்தைக் காணோம்?" என்று சுற்றிப்பார்த்தனள். தான் ஈந்த வெண்பட்டை விஜயம் அன்று அணிந்திருப்பது காருண்யத்திற்கு அளவற்ற மகிழ்ச்சி தந்தது. கண்ணகியும் "காருண்யம்! அதோ பார்த்தனையா? அண்ணா நீ தந்த பட்டை அணிந்திருக்கிறார்கள். அதென்ன அண்ணாவுக்கு அவ்வளவு அழகாய் இருக்கிறது!" என்று மகிழ்ந்தாள்.

இவ்வாறு வந்த பலரும், பல பந்தர்களைப் பார்த்தும்; சுற்றிலுமுள்ள முள்ளில்லாக்காட்டில் சிறிது நுழைந்தும்; ஒருவரோடொருவர் வேடிக்கையாய்ப் பேசியும், சிரித்தும், விளையாடியும்; சிறுவர்கள் பொய்ச்சண்டை இட்டும்; ஸ்திரீகளும் பெண்களும், புருஷர்கள் தூரவிருக்கிறார்கள் என்று தெரிந்த போது சிறு சிறு கீதங்களை விட்டுவிட்டுக் கூவுங் கோகிலமே போல், பாடியும்; சிறு பெண்கள் சிறு பையன்களைப் பார்த்து நகையாடியும்; காரியதரிசியைப் போன்றவர் தனித்துச் சுற்றிலும் பார்த்தபடியே இரகசியம் பேசியும்; சுந்தரநாதத்தை ஒத்தவர்கள் தந்திரங்களும் வஞ்சனையும் எவ்வாறு இயற்றலாமென்று யோசித்தும்; வயது முதிர்ந்தவர், நடுவிலுள்ள பந்தலின் கண் உட்கார்ந்து பழைய சமாசாரங்களைப் பேசியும்; சிறுமிகள், விஜயத்தைக் கண்டு அவனைச் சுற்றிக் கல்யாண மாப்பிள்ளை என்று பரிகசித்தும், காருண்யத்திற்கு 'அதோ

உன் கணவன்' எனக் காட்டியும், கண்ணகியைப் பார்த்து 'இவள் கண்ணுக்கல்லவோ ஒரு கணவன் தனியாய் வேண்டும் போல் இருக்கிறது. அதைப் பாரேன், அது எப்படி ஜொலிக்கிறது!' என்று சொல்லியும்: சிறு பையன்களும் இளவயதினரும் சுற்றிலுமுள்ள மரங் ளின் கிளைகளில் ஏறி ஊசலாடியும்; விஜயம், நான் எதிர்கண்ட எல்லாரோடும் அமுதமெனப் பேசி அவர்களை மகிழ்வித்து, காருண்யத்தோடு வார்த்தையாடக் கூசி, அவளிடம் சொல்வதெல்லாம் அவள் பக்கலிலுள்ள கண்ணகியிடம் உரைத்தும்; கண்ணகி, 'சுந்தரநாதம் அதோ மறைவில் இருக்கிறார். நான் எங்கே காணேன் என்றல்லவோ பார்த்தேன்!' என்று அவனைக் கண்டு களித்தும்; காலங் கழித்தனர்.

இன்று நடுப்பகலாயினும் சூரியன் வெப்பம் அதிகம் இல்லை. ஆகாயத்தில் கருமேகங்கள் பல தங்கின. வடமேற்குத் திசையாகக் காற்றும் பலத்து அடித்தது. அருகில் கற்களின்மீது குதித்து ஏகும் மணிமுத்தா நதியின் காலிரைச்சல் இசைக் கருவிகளின் ஓயாத நாதமே போன்றது. பாடும் பறவைகளெல்லாம் எப்பக்கம்போய் எங்கே பதுங்குவதெனத் தெரியாது தம் இனியகுரல் விட்டுச் செவியை நிரப்பின. சற்றுநேரம் ஆனபின்பு ஓடுநீரில் ஸ்நானஞ்செய்ய யாவரும் சென்றனர். ஆற்றில் நீரோடும் இடத்திற்கு அருகிலுள்ள பாசி படர்ந்த கருங்கற்களின் மீது, கும்பல் கும்பலாய் இருந்து, ஆடை தோய்த்தும், ஸ்நானம் செய்தும், விபூதி தரித்தும், பூஜைசெய்தும், ஜபம் இயற்றியும், சிறு பிள்ளைகள் ஓடு மீன்களோடு விளையாடியும் இருந்தனர். இவ்விதம் இரண்டொரு நாழிகை கழியவே, யாவரும் ஆற்றைவிட்டுக் கரை ஏறிப் புல் வெளியில் வந்து இருந்தனர். உடனே உபசாரம் செய்வார் அனைவரும் புருஷர்களுக் குத் தென்பாகத்துள்ள பந்தரில் தக்க இடங்கள் காட்டியும்; ஸ்திரீகளுக்கு மேலைப் பந்தரில் வேண்டிய சௌகரியங்கள் செய்தும்; வரிசையாய் இட்டிருக்கும் வாழை இலைகளில் வகைவகையாய் சமைத்திருக்கும் சமையல்களை நிரப்பியும்; எவர்க்கும் யாதொரு குறைவும் இல்லாமல் அங்கங்கே பலபேர் நின்று பார்வையிட்டு, வனவிருந்து வழக்கப்படி சந்தோஷகரமானதும் வேடிக்கையானது

மான சிறு பேச்சுகளைக் கடியாமலும்; தங்கள் கடமையை உள்ளன்போடு இயற்றினர்.

யாவரும் சாப்பிட்டானவுடன் தாம்பூலம் தரிப்பான் அலங்கரித்திருக்கும் மத்திய மண்டபத்தற்கு வந்து சேர்ந்தனர் புருஷர்களே முக்கியமாய் மத்தியில் விற்றிருந்து தாம்பூலம் தரித்தனரேனும், இங்கு ஸ்திரீகளுக்கு என பிரத்தியேக இடமில்லை. அங்கங்கே ஆடவரும் மகளிரும் கூட்டங்கூடி, வீணை கிராமபோன் முதலிய சங்கீத வாத்தியங்களையும், வேடிக்கைசெய்யும் விதூஷகனையும், கதை இயற்றுமவரையும் கேட்டுக் களிப்புற்றுத் தம்மை மறந்திருந்தனர். மற்றும் சிலர் ஓரிடத்தில் கூட்டங் கூட்டமாய் உட்கார்ந்தோ நின்றோ வெற்றிலை முதலியன அருந்தி விளையாட்டுக்சோலமாய் இருந்தனர். இவர்கள் இவ்வண்ணம் இருக்கையில் காரியதரிசியால் அடிக்கடி தூண்டப்பட்ட சுந்தரநாதம், மண்டபத்தல் இங்குமங்கும் திரியும்போது, கண்ணகியை ஒரு கும்பலில் கண்டான். தன்னைப் பார்க்கும் அவளுக்கு எதிராக வந்து, அவள் தன்னைப் பார்த்ததும், கையைக் காட்டித் தன் பின்னோடு வரச்செய்து, கொஞ்சதூரம் போய், விளையாட்டில் அமிழ்ந்திருந்த ஒரு பெரிய பெண்டிர்தம் கும்பலின் அருகில் நின்று, கண்ணகியைத்தன் அருகு அழைத்து, அவளிடம் பாயசம் இருந்த ஒரு பளிங்குக் கிண்ணத்தைக் கொடுத்து, புன்சிரிப்போடு "இதை விஜயம் கொடுத்தான் என்று காருண்யத்திற்குக் கொடு. வேறு ஒருவரிடமும் சொல்லாதே. சீக்கிரம் போ." என்று அவளை அனுப்பி என்ன செய்கிறுள் என்று பின்பற்றித் தொடர்ந்து போனன். ஒரு கடைசிக் கும்பலின் இடையிலிருந்த காருண்யத்தைக்கண்ணகி தனியே அழைத்துக்கிண்ணத்தைக் கொடுத்தாள் என்று தெரிந்ததும் சுந்தரத்துக்குப் பேரானந்தம் உண்டாயிற்று. "அத்தான் ஏன் எனக்குத் தருவார்கள்? போபோ! நீ விளையாடுகிறுய்." என்றுள் காருண்யம். பிறகு "அப்படியானல் உனக்கும் பாதி." என்று காற்பங்கையே கண்ணகிக்கு ஈந்தாள் காருண்யம்.

ஒரு பாதிவேலை முடிந்தது. மற்றொரு பாதி முடிய வேண்டியிருக்கிறது. காரியதரிசி கும்பலில் இருந்தபடி சுந்தரத்தை மிரளமிரளப் பார்த்தார். என்ன செய்வான் சுந்தரன்? ஒரு பக்கம் விஜயம், மற்றொரு பக்கம் தன் பலமில்லா

மனமும் காரியதரிசியும். அவன் யோசிக்கவில்லை. மறுபடியும் கண்ணகி வருவது கண்டான். இவன் உடனே கும்பவில் மறைந்து, விஜயம் தனியாய் ஒருபுறம் நின்று விளையாடும் சிறுர்களைக் கவனித்துக்கொண்டிருக்கும் சமயம் பார்த்து, காருண்யத்திடமிருந்து வருபவன்போல் பாவனைபண்ணி மறுபடியும் கண்ணகியைக் கண்டு, "விஜயம் எங்கே? அவர் என்னிடம் அகப்படவில்லை. இதை அவரிடம்கொடு. காருண்யம் கொடுத்தாள், என்று கொடு. ஒருவரிடமும் சொல்லாதே." என்று மற்றுமொரு பளிங்குக் கிண்ணத்தை அவளிடம் கொடுத்தான். சுந்தரன் முகத்திற்கு ஆசைப்பட்ட கண்ணகியும் இவன் ஏதோ விளையாடுகிறுன் என்று நினைத்து, அப்படியே விஜயத்தினிடம் கொடுத்தாள். அவன் சிரித்துக்கொண்டே காருண்யம் எங்கிருக்கிறுளென்று சுற்றிப்பார்த்து, அவள் தன்னைப் பார்த்துப் புன் முறுவல் பூத்தனளென்று தெரிந்ததும், உடனே அவள் சொல்லை அலட்சியம் செய்யாதவன்போல். பளிங்குக் கிண்ணததில் உள்ளதை முழுதும்குடித்தனன். பிறகும் காருண்யத்தைப் பார்க்காமலிருக்க முடியவில்லை. மறுபடியும் மறுபடியும் நகைத்தான் விஜயன். குடிப்பதை வெகு கவனமாய்ப் பார்த்திருந்தான் காரிய கரிசியாகிய கொலைமகன். சுந்தரநாதம் விஜயம் குடிக்கிறுனெனத் தெரியவே உடல் நடுங்கினன். அவன் நாஉலர்ந்தது. மார்பு அடித்தது. அவன் ஒன்றும் பேசாது ஒருபக்கம் நின்றுன். காரியதரிசி காரியம் கைகூடிற்றென்று கவலையை விட்டார்.

அங்கு அம்மண்டபத்தில் இருந்த யாவரும், குற்றமற்ற விளையாட்டுகளில், காலம்போவது தெரியாது, சந்தோஷமாய்த் தங்கள் வீட்டு விவகாரங்களையும் மற்றெவ்வித கவலையும் மறந்திருக்கும் அச்சமயத்தே, தற்செயலாய் மண்டபத்தின் மேற்பாகத்தில் விஜயமும் காருண்யமும் சந்தித்தனர். ஒரு மனமே போன்று சுற்றிலும் பார்த்து, யாவரும் தங்களைக் கவனிக்காது களிப்புறுகிறுர்கள் என்று தெரிந்ததும், மண்டபத்தை அடுத்துள்ள காட்டினுள் இருவரும் வேகமாய்ப் புகுந்தனர். புகுந்து அங்குள்ள பல மரங்களின் புதுமையையும், புற்களின் வளப்பத்தையும், பறவைகளின் ஆரவாரத்தையும், பெருமரங்கள் சில பூத்திருப்பதையும், அணில்கள் திரிந்து பாய்வதையும் கண்டு களிப்புற்றும்; ஒருவரையொருவர் அச்

சத்தோடும் நாணத்தோடும் நோக்கி மகிழ்வு எய்தியும்; மெல்ல நடந்து ஆற்றங்கரையின் மேலுள்ள ஒரு தோப்பின் கண்ணே வந்து பாயென விரிந்து மெதுவாயிருந்த பசும்புல்தரையின் மேல் உட்கார்ந்தனர்.

தான் உட்கொண்ட மருந்தின் வேகத்தினுலோ, தனக்கே இயற்கையாய் விஜயத்தின்மீதுள்ள அளவுகடந்த அன்பினுலோ, விஜயமும் அவளும் அவ் அழகிய இடத்தில் தனித்து இருந்ததினுலோ, விஜயம் அன்று மிக்க சுந்தரத்தோடு விளங்கினதினுலோ, காருண்யம் அச்சமும் நாணமும் மேலிட்டவளாயினும், விஜயத்தின் கமலமுகத்தை அவ்வளவு நேரம் ஆவலோடு பார்த்து அமைவோடு இருக்கும் உறுதி இன்றி, பொங்கி எழுந்த உழுவல் அன்பொடு விஜயன் செவ்விய கைகளைத் தன் கைகளால் பற்ற முயன்றுள். விஜயனும் மறுக்கும் ஆற்றல் இலானுய்க் காருண்யத்தின் அமுதப்பெருக்கில் அலைப்புண்டு, அவள் தன் மேற்கொண்ட அளவற்ற அன்புக்குத் தன் அன்பு ஈடில்லையென நினைத்துத் தனக்குள் வெட்கியவனுய், "என் அன்பே! என் காருண்யம்! என் உயிரே!" என்று வாய்குளறப் பேசி, உவகை ஊற்றென விளங்கும் அவள் நீண்டு பரந்த நயனங்களையும், ஆசை வார்த்தைகளை இரகசியமென உரைக்கும் பவழவாயையும், கறுத்த குழலால் பெரிதும் மறைந்த நெற்றியையும், திரண்ட நாசியையும் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாமல் ஆநந்தம் எய்தினன்.

காருண்யமும், விஜயத்தின் உயர்ந்து பருத்த தோள்களையும், பூரித்து அகன்ற மார்பையும், நீண்டு பருத்துச் சிங்க ஏறு என வலிவமைந்த கைகளையும், சிவந்து நீளமான அழகு அமைந்த கைவிரல்களையும், அவன் அரிய தேக அமைப்பையுமே கண்கள் உயரநோக்கும் ஆற்றலின்றிப் பார்த்துக் களிகொண்டு, பின்னர் நிமிர்ந்து, சற்று எடுத்துயர்ந்த கழுத்தையும், அதைச் சார்ந்து சிறுகாற்றில் அலையும் அலை குழலையும், உயர்ந்து காத்திரமான நெற்றியையும், பேசும் வாயையும், உயர்ந்த நாசியையும், மறந்து களிப்பால் கருணை சுரக்கும் கண்களையும், ஒவ்வொன்றுய்ப் பார்த்து, சற்றும் சிந்திக்க வலியில்லாளாய், "அத்தான் எனக்கு ஒரு வரம் தரவேண்டும். நீங்கள் தரமாட்டீர்கள் என்று சந்தேகமில்லை. ஆனுல் காலபேதத்தினுல் ஒருகால் நீங்கள் கைவிடலாம். அப்பா உங்களுக்கு மணஞ்செய்

யலாமென்றம், எனக்குத் தகுந்தவர்களென்றும், நீங்கள் சம்மதிக்கா விட்டால் ற்றுன் வேறு—இவ்விதம் பேசுகிறார்கள். அவர்களுக்கு நாம் எவ்வளவு பற்றுள்ளோம் என்பது தெரியவில்லை. அவர்கள் தெரியாத நிலைமையால் யாதாயினும் நமக்குக்கெடுதி நேரிடுமென்று எனக்குத் தோன்றுகிறது. இப்போது நம் மண விஷயம் பேசும்போதும் எனக்கு நிச்சயமில்லை. ஏனோ படு பாவி! என் மனத்தில மாத்திரம் அப்படித் தோன்றுகிறது? என் கழுத்தில் இக்கைகள் மாங்கல்யம் அணிந்த அன்றுதான் என் மனம் கவலை அறும். என் அத்தான்! யார் எது நினைத்தாலும், யார் மறுத்தாலும், யார் உங்களுக்கு என்ன செய்தாலும், நீங்கள் என்னை எப்போதும கைவிடமாட்டீர்கள் என்ற வரம் ஒன்றுதான் வேண்டும் பிறகு எனக்கு என்னவரினும் நான் அஞ்சேன். அத்தான்! எனக்கு இவ்வொரு வரம கொடுங்கள்." என்று மெல்லியதும் அசைவுள்ளதுமான தனது இனிய குரலால் இரங்கினள்.

இவ்வணம் காருண்யம் மொழியும்போது விஜயன் மனம் என்னென்னவோ நினைத்தது. காருண்யத்தை யாரோ ஒருவன் மணந்து செல்வதாகவும், தான் தனித்த பெருங்காட்டில் திரிவதாகவும், காருண்யம் உதவியின்றி வருந்துவதாகவும், தன் அறையில் பெருங் கும்பல் கூடுவதாகவும், தான் இரவில் தனியே காருண்யம் வீட்டிற்குப்போய் அவளைக் காணது வருந்துவதாகவும், குதிரை வீரர் பலரோடு மலைகளில் தான் திரிவதாகவும், இவ்விதமான பலப் பல எண்ணங்கள் ஒரு நிமிஷத்தில் அவன் மனதில் தோன்றி மறைந்தன. காருண்யம் பேச ஆரம்பித்தது தெரியுமேயன்றி அவள் எப்போது நிறுத்தினாள் என்பது தெரியாது, அவள் அகன்ற கண்களைப் பார்த்து ஏதோ தான் இன்னம்கேட்பதுபோல்தோன்றினன். அப்போது காருண்யம் அவன் இரண்டு கைகளையும் மறுபடியும் தன் கைகளில் எடுத்து "என்ன அத்தான் யோசிக்கிறீர்கள்? எனக்கு வரந்தர மனமில்லையா?" என்றாள்.

"என் அன்பே! உனக்குத் தரவா மனமில்லை! என் காருண்யம்!" என்று விஜயம் ஒடுங்கினவன் பேசுவதுபோல் சொல்லி, தன் விரலில் அணிந்திருந்த சிறு மோதிரம் ஒன்றைக் கழற்றி, அவள் விரலில் இட்டு "இதுவே நான் செய்யும் மணம். நமக்கு மணமாய்ப் பல நாட்கள் ஆயினவென்று உனக்குத் தெரியா

தா? காருண்யம்! இந்தக் கைகளை என் உயிருள்ள வரைக்கும் விடேன். நான் விடேன். நான் விடேன்." என்று பாதி காருண்யத்திற்கும் பாதி தனக்குஞ் சொன்னான். காருண்யம் "என் உடலே! என் உயிரே! என் உள்ளமே!" என்று ஆநந்தக் கண்ணீர் சொரிய அன்புமயமாய்த் தோன்றினள்.

உடனே வானம் இருண்டது. மரங்கள் பலவும் பேரிரைச்சல் இட்டன. காற்று முகத்திலும் தேகத்திலும் கடுவேகமாய் வீசி அலைச்சல் தந்தது. ஆடைகள் பறக்க ஆரம்பித்தன. மேற்பக்கமுள்ள மலையின் சார்பாய் பெருமழை பெய்வதே போல் ஜோ என்ற சத்தம் உண்டாயிற்று. பந்தல்களிட்ட மண்டபப்பக்கமுள்ள ஜனங்கள் பலரும் மழை மழையென்று உரக்கக் கூவினர். உடனே விஜயம் திடுக்கிட்டு "நீ சீக்கிரம் மண்டபத்தைச் சேர்ந்து அப்பாவிடம் இரு. நான் வருகிறேன். நீ போ. நான் வேறுவழியாய் வருகிறேன். சீக்கிரம் போய்ச்சேர்." என்று அவள் தயங்குவதைப் பார்த்துத் திடப்படுத்தி, அவள் மண்டபஞ்சேர்ந்து ஜனங்களிடம் சேரும் வரையில் பார்த்துவிட்டுத் தான் இருந்த இடத்தைத் திரும்பிப் பார்த்தான். காருண்யத்தின் சித்திரவேலை செய்த பட்டுச் சவுக்கம் அருகிலுள்ள புதரில் தொத்தியிருந்தது. உடனே அதை எடுக்குமாறு சென்றனன். அவ் ஒற்றாடை பெருங் காற்றால் வீசப்பட்டு பறந்தேபோயிற்று. அங்கங்கே சற்றுத் தங்கி, ஆற்றின்கண் பறந்து, அப்புறம் போய்விழுந்து, ஒரு முட்புதரில் சிக்கிக்கொண்டது. இது ஓடுவதைக் கண்டு பாதி சிரிப்பும் பாதி வெளித்தோன்றா சிறு விசனமும் உறும் விஜயம் வேகமாய் ஓடி ஆற்றைக்கடந்து அதை எடுக்கச் சென்றனன்.

இதனிடையில் மலை நகர்வதேபோல் பேரிரைச்சல் இட்டு மலைக்கண்மட்டும் பெய்த மழை இவ்விடமும் பரவிற்று. கோடை காலத்தில், திடீரென்று. இம்மலைச் சாரல்களில் பெய்யும் பெருமழைகளில் இது ஒன்று. ஆகாயத்தினின்றும் கூர் மழுங்கிய அம்புகள் பல்லாயிரம் அடுக்கடுக்காய், இடமின்றி நெருக்கமாய், இடைவிடாது விடப்பட்டதே போன்று, பெருமழைத்துளிகள் எங்கணும் விழுந்தன. திடீரென்று காதுசெவிடாகும்படி பேரிடி இடித்து, அடுத்துள்ள மலைக்குகைகளிலும் குடையெனக் கவிந்த பெரு விருக்ஷங்களிலும் தங்கி அதிர்ந்

தது. மழைத்துளிகள் வரவரப் பருத்து வெள்ளிய பளி ங்கு கற்களென வீசின. பருத்து வானளாவிய மரங்கள் சண்டமாருதத்தால் அலைக்கப்பட்டுப்பேய்பிடித்தனவேபோல் தலை தெரியாமல் வேரோடே ஆடின. நாரற்ற பெரிய கிளைகள் படீரெனக் கடுஞ்சத்தமிட்டு ஒடிந்து வீழ்ந்து கீழகப்பட்ட யாவற்றையும் நாசமாக்கின. தண்ணீர் எங்கணும் பரவி ஓடிற்று. மழை ஆரம்பித்த அரை நாழிகைக்கெல்லாம் ஆற் றில் உதிரமெனச் சிவந்து, வெண்ணுரை வீசி, வெள்ளம் சுழித்தோடிற்று. காய்ந்த மரத்துண்டுகளும், மலையின் கண் உள்ள பலவித காய்களும், சருகுகளும், செடி கொடிகளும், சப்பாத்தி முதலியவைகளும் வெள்ளத்தால் கொண்டுவந்து கரைகளிலும், மேடுகளிலும், ஆற்றின் மத்தியில் உயர்ந்திருக் கும் கற்குவியல்களிலும் ஒதுக்கப்பட்டன. மந்தைகளினின் றும் தனித்த ஆடுமாடுகள் ஒவ்வொன்று, நீந்த வகை தெரியா மல் புரண்டு குதித்தோடும் மலையாற்றால் அடித்தேகப்பட் டன. வரவர ஆற்றின் வெள்ளம் அதிகரித்து, இருகரையும் ஜலம் பரவி தேங்குவதுபோல் தோன்றிற்று. காலம் மாலையே ஆயினும் வெளிச்சம் மிகவும் மங்கிற்று. மலையின்பால் ஓடி அதன் சிகரங்களில் ஒளி செய்யும் மின்னல்கள் ஆயிர மாற் றுப் பொன் கம்பிகள் என எரிந்தன. விலங்குகளும் பறவை களும் தந்தம் இடமறியாது ஊளையிட்டும் கதறியும் இருந் தன. எங்கே பார்க்கிலும் ஒரே இருட்டாயும் அவ் இருட்டில் எங்கே பட்டாலும் ஒரே ஜலக் காடாயும் இருந்தது.

மழைக்குறி தெரிந்ததும் ஜனங்களில் பெரும்பாலார் தத் தம் வண்டிகளைச் சித்தஞ்செய்து ஊர்வழிச்செல்ல ஆரம்பித் தனர். மகாதேவர் முதலியவர்களும் யாவரையும் சீக்கிரப் படுத்தி, அவரவர் வண்டிகளில் ஏற்றிச் சீக்கிரம் போமாறு அவசரப்படுத்தினர். ஜமீன் குடும்பத்தார் முதலியவர்களும் தக்க சௌகரியத்தோடு செல்ல ஆரம்பித்தனர். காருண்யம் கண்ணகி முதலியவர்களும் ஷண்முகநாதரோடு வண்டியில் ஏறினர். அப்போது "அத்தான் எங்கே?" என்றாள் காருண் யம். விஜயத்தைக் காணாமல் இங்குமங்கும் சுற்றிப்பார்த்து, மகாதேவரும் "விஜயம் எங்கே? விஜயம் எங்கே இருக் கிறான்?" என்று பலரையும் கேட்டு 'விஜயா! விஜயா!' என்று கூவினர். இதற்குள் சுந்தரநாதமும் காரியதரிசியும் அவர்

முன்னே போனுர்போல் இருக்கிறது என்றுர்கள். காருண்யம் உள்ளிருந்தபடியே "இல்லே. இல்லே. அவர்களே இங்கு அரை நாழிகையாய்க் காணும்." என்றுள். "ஒருமணி நேர மாய் நான் அண்ணுவைப் பார்க்கவே இல்லே." என்றுள் கண் ணகியும். உடனே மகாதேவர் ஷண்முகநாதர் முதலியோர் விஜயத்தைப் பார்த்தனர். விஜயம் தெரியாததால் காரியதரிசி சொன்னபடி அவன் முன்னே தான் போயிருக்கவேண்டும் என்று நினைத்து அவர்கள் ஊர்வழிச் செல்ல ஆரம்பித்தனர்.

## உச. பிரிவாற்ருமை.

Known and unknown, human, divine!
Sweet human hand and lips and eye,
Dear heavenly friend that canst not die,
Mine, mine, for ever, ever mine!—*Tennyson.*

**வ**னவிருந்து நடந்து இருபது நாட்கள் ஆகின்றன. இன்னும் விஜயத்தைப் பற்றி ஒன்றும் தெரியவில்லே. உயிரோ டிருக்கின்றனனு அல்லனுவென்பதே சந்தேகம். மகாதேவ ரும் ஷண்முகநாதரும் பல ஆட்களே எத்திசையிலும் அனுப் பித் தாமும் கூடவிருந்து மணிமங்கலத்தைச் சார்ந்த காடு முழுவதும் தேடினர். எதிர்ப்படும் எவரையும் விசாரித் தனர். ஆற்றங்கரைகள் எல்லாம் அலேந்து பார்த்தனர். வயற்புறம் குன்று முதலிய இடங்களெல்லாம் வண்டு எனத் திரிந்தும் ஒரு சிறிதும் ஏற்படவில்லே. ஆயினும் இன்னும் தேடுவதை விட்டனரல்லர். மகாதேவர்மட்டில், தாம் விஜயனே இழந்தார் என்ற விசனத்தால் உலக விவகாரம் முற்றி லும் நாளுக்குநாள் மறந்து, தன் சுபாவ புத்தியை விட்டு, பித்தனேபோல் ஆயினர். இவ்வண்ணம் அவர் எவ்விஷயமும் மறந்து "விஜயா! விஜயா!" என்று எப்போதும் சொல்லிக் கொண்டே யாவர் எவ்விதத் தேறுதல் கூறியும் செவிகொ டாது, வேளேக்கு உணவு உண்ணுது, நித்திரை புரியாது, தன் அறிவை இழந்ததும் அல்லாமல் தேகபலத்தையும் சௌக் கியத்தையும் இழந்து, எழுந்துலாவச் சக்தியின்றிப் படுக்கை யிலிருந்தார்.

இராத்திரி காலங்களில் திடீரென எழுந்து படுக்கைஅறை யில் உள்ளாரை வென்று வெளிவந்து, 'விஜயா!" எனப் பெருங்

குரல் இடுவர். உடனே உணர்ச்சியின்றிக் கீழே விழுவர். கண்ணகியைக்கூட இவர் இப்போது அறிந்தார் அல்லர். "என் மனததுக்கு இசைந்த மாணிக்கத்தை இழந்தேன்." என்று பல கால் ஏங்கி அழுவர். வேறு ஒரு காரியமும் செய்யார். தன் பக்கததுள்ளார் ஒருவரையும் அறியார். அவர்கள் எது சொல்லினும் கேளார். யாராயினும் ஒருவர் இவரைப் பார்க்க வந்தால் 'விஜயனல்லவே!' என்று வெறிக்கப் பார்ப்பரே அன்றி வேறொன்றும் அறியார். 'விஜயன் வர வில்லையே?—விஜயன் ஏன் என்னுடன் இத்தனை நாள் பேசவில்லை?—எங்கிருக்கின்றனனோ? என்னிடம் சொல்லாது எங்கேயும் போகமாட்டானே. நீ எப்போதாவது பார்த்திருக்கிறாயா எனக்குத் தெரியாமல் அவன் போனதை?—ஒ ஒ அவனைப் பார்த்ததில்லையா? அவன் பால்முகம் உனக்குத் தெரியாது? அவன் மணிக்கண் கருணை உங்களுக்குத் தெரியுமா?—இதோ வந்தான் விஜயன்! வழிவிடு. நான் அவனைப் பார்க்கவேண்டும். என் சிந்தாமணியை நான் பார்க்கவேண்டாமோ?—ஆ ஆ! என் விஜயன் என்னோடு கோபிக்கிறான். இனிமேல் என்முன் வரமாட்டான். . . நான் எப்போதாவது விஜயத்தைக் கடிந்தேனோ?—ஒ, ஆமாம். அன்றைக்கு அவன் சிறு குழந்தையாயிருக்கும்போது திட்டினேன். ஒருகரம் திட்டினேன். ஆனால் என் மரகதம் என்னிடம் கோபிக்கமாட்டானே! ஒ ஒ, ஒ ஒ" என்று பலகரம் ஓயாது பேசுவர்.

ஒருநாள் காருண்யம் அழுது சிவந்த கண்ணும்,பொங்கும் மனமும் உடையவளாய் மகாதேவரிடம் வந்து, அவரைப் பார்த்துத் துக்கித்தாள். மகாதேவர் அவளை உற்றுப்பார்த்து "விஜயத்தை நீயாவது பார்க்கவில்லையா? அவன் உன்னிடமும் சொல்லவில்லையா? . ஒ ஒ உனக்கு அந்த முத்து வேண்டாமோ? . . அப்படியானல் போ. சரி. அப்படியானல் போ." என்று காருண்யத்தைத் தன்புறம் விட்டுத் தள்ளினர். எல்லாரும் "காருண்யம்' "காருண்யம்" என்று அவரிடம் சொன்னார்கள். அவர் உடனே, "காருண்யம்! காருண்யம்! இது யார்? நான் கேட்டதுபோல் இருக்கிறதே . . . விஜயம் ஆ, என் விஜயம் முகம், கண், வாய், தோள், மார்பு, கை ஆ, அவன் கைகள் உனக்குத் தெரியுமா! ஒ அவன் பாதம் இப்படி—இல்லை. இல்லை. விஜயம் இங்கு இல்லை—விஜயம் படிக்கி

ருன்—விஜயத்தின் புஸ்தகங்கள் எத்தனை? நீ எண்ணு." என்று காருண்யத்தைப் பார்த்தபடியே சொல்லி, மறுபடி அவளைத் தன்னருகில் அழைத்து "முகம்—விஜயமே ஆகிலும் நீ விஜயமில்லையே. ஆ ஆ! என் அமுதம் அழிந்தது.—என் முத்து முறிந்தது . . விஜயம். ஆமாம் விஜயம்." என்று பல படப் பேசி, அவர் தம்மை மறந்தே இருந்தனர். படு இருட்டில் தோன்றும் மின்னல்கொடியே போன்று, பழைய எண்ணம் ஒரு சிறிதே அவர் தம் மருள் கொண்ட மனத்தின்கண் உதித்தது

காருண்யமோ: 'விஜயம் திரும்பிவரவில்லை; காட்டில் காணமற் போயினன்.' என்று கேட்டதும், அவளுக்கு ஒன்றும் தோற்றவில்லை. அவள் அவ்விஷயத்தின் முழு அர்த்தத்தையும் உணர்ந்தாள் அல்லள். 'அத்தானைக் காணேன்: நான் மூழ்கிவிட்டேன்.' என்று மாத்திரம் நினைத்தாள். மகாதேவர் தன்பிதா முதலாயினோர் தேடும்போது 'இன்று அவசியம் வருவார்கள் என் அத்தான். இதோ அவர்கள் ஆழி. இது தக்க சான்றன்றோ?' என்று நினைத்தாள். பலநாள் தேடியும் விஜயம் வராதிருக்கவே, அவளுக்கு முதலில் தோன்றிய மருட்குணம் போய் அவள் தன் சுயமனம் களங்கமில்லாது தோன்றியது.

விஜயன் வாராததற்கு அவளால் ஒரு காரணமும் நினைக்கக் கூடவில்லை. இறந்தான் என்று மற்ற யாவரும் நினைத்ததுபோல் நினைக்க இவள்மனம் ஒப்பவில்லை. 'விஜயம் இறக்க முடியாது.' என்றே நினைத்தாள். "எங்கேயாவது போயிருப்பார்கள். வருவார்கள். எத்தனை மாதங்களாயினும் வருவார்கள்.' என்றே எண்ணினள். தேடப்போன ஆட்கள் ஒவ்வொருவரையும் விவரமாக விசாரித்து, அத்தான் ஏன் இவர்கள் கண்களில் புலப்படவில்லை என்பதற்குக் காரணம் சொன்னுள். ஷண்முகநாதர் ' இல்லை. அவனை ஆறுதான் அடித்துக்கொண்டு போயிருக்கவேண்டும்." என்று ஒருவரோடு பேசிக்கொண்டிருக்கும்போது, காருண்யம், "நீங்கள் பார்த்தீர்களோ, அப்பா? என்னத்திற்குப் பொய் வீணே சொல்கிறீர்கள்!" என்று அவள் மனதில் நினைத்தபடியே பேசினுள். ஒருநாள் கண்ணகி இவளிடம் வந்து "அண்ணவை எங்கும் காணவில்லையாம். என்ன பண்ணுகிறது? காருண்யம்!" என்று தேம்பித் தேம்பி அழு

தாள். "காணேம் என்று யார்சொன்னூர்கள்? யாரோ ஒருவர் அத்தானைப் பார்க்காவிட்டால் அத்தானே இல்லையோ? நீ அவர்கள் சொல்வதை நம்பாதே: அத்தான் இருக்கிறூர்கள். நீ அழாதே." என்று அவளுக்கு ஆறுதல் சொன்னுள்.

காருண்யம் மகாதேவரைப்போல் எல்லாவற்றையும் மறந்து, சுபாவ மனத்தை இழந்து, 'அத்தான் இல்லை.' என்ற ஒரு ஞாபகத்தையே மேற்கொள்ளாவிடினும், அவளும் தன் சரியான புத்தியில் இல்லை. அவள் யாவரையும் தெரிந்தனளேனும், விஜயம் விஷயத்தைப் பற்றி அவர்களிடமெல்லாம் சீர்கெடுதலின்றிப் பேசினளேனும், அவளும், ஒரு விஷயத்தை மறந்தாள். அத்தான் இல்லையென்பதை முற்றிலுமே மறந்தாள். அத்தான் இருக்கிறூர்கள் என்பதை முழுவதும் நம்பினுள். இதுதான் அவள் முழுமனதும்: இவ் ஓர் எண்ணமே. அவளிடம் பேசுபவர் யாவரும் இதைப் பற்றியே பேசினூர்கள் ஆதலால், அவள் தக்க காரணங்களோடும் பேச்சுச் சீரோடும் அத்தான் இருக்கிறூர்கள் எனப் பேசியபோது, ஒருவரும் அவளை மகாதேவரைப்போல் மனமிழந்தவள் என்று சொல்லவில்லை. ஆனுல் உண்மையில் அவள் 'அத்தான் இருக்கிறூர்கள். நான் பார்ப்பேன். என்னிடம் வருவார்கள்.' என்பனபோன்ற எண்ணங்கள் தவிர மற்றவைகளுக்கு மனம் இழந்தவளே.

காருண்யம் இவ்விதமான மனமுடையவள் ஆனது, மகாதேவரைப்போல் அவளுக்கு விஜயத்தினிடமிருந்த ஆற்றூணுக் காதலினுலோ, அல்லது சுந்தரநாதம் கொடுத்தனுப்பிய பளிங்குக் கிண்ணத்தின் அவிழ்தத்தினுலோ, நாம் அறியோம். அது எப்படியிருந்தாலும் சுந்தரநாதத்தையாவது, அவன்மேல் தான் புதுக்காதல் கொண்டிருப்பதாகவாவது காருண்யம் நினைக்கவில்லை. உண்மையில், சுந்தரநாதம் முதலியவர்கள் விஷயமெல்லாம் இவள் அடியோடே மறந்துவிட்டாள். ஆனுல் சுந்தரநாதம் ஒரு நாள் அவளிடம் வந்து. தன் மருந்தின் சக்தியைப் பார்க்கலாம் என்று பேச ஆரம்பித்தபோது, காருண்யம், மிக்க தாராளமாய் இச்சில நாட்களுக்குள்ளேயே முன் கொண்டிருந்த மௌனத்தை விட்டு, விஜயம் உயிரோடிருக்கும் விஷயத்தைத் தக்க காரணங்களோடு ஸ்தாபித்தாள். சுந்தரநாதம், அவள் இப்போது அவனிடம் தாராளமாய்ப்

பேசினது மருந்தின் சக்தியென்றும், விஜயத்தைப்பற்றிப் பேசினது ஊரிலுள்ள மற்றெல்லாரும் பேசுவதுபோற்ருன் வேறு ஒன்றும் அதிகமில்லை யென்றும், நினைத்தான். தான் மந்திரவாதிக்குக் கொடுத்த பணம் வீணுகவில்லையென்றும், விஜயம் இப்போது இருந்தாற்கூட தன் கல்யாணத்திற்குத் தடையில்லையென்றும் கண்டுகொண்டான்.

காரியதரிசியோ எனில், தான் இப்போது எதிர் ஒருவரும் இல்லா இந்திர பதத்தில் இருப்பதாகப் பாவித்தார். 'ஒரு தலைதுள்ளிப் பையன் ஒழிந்தான். இன்னொருவன் இருக்கிருன். அதற்கும் நமக்குஒருவழி அகப்படும்.' என்று பலமுறை சொல்லி, தன் கல் நெஞ்சை இரும்பு நெஞ்சாக்கினுர். காரியதரிசிக்கும் சுந்திரநாதத்திற்கும் விஜயம் காணுமற்போனதின் காரணம் செவ்வையாய்த் தெரியும். "மயக்கம் வந்து நினைவு அற்றுக் கீழ் வீழ்ந்திருப்பான். வெள்ளம் உடனே வந்து அடித்துக்கொண்டு போயிருக்கும். இவ்வளவுதான்." என்ருர் கரிய காட்டுப்பூனையையே ஒத்த காரியதரிசி.

"அதை நினைக்க நினைக்க என் மனம் பதறுகிறது." என்ருன் சுந்தரம்.

சற்றுப்பொறுத்து, "அப்படி எல்லாம் மனம் பதறப் படாது. சுத்த கோழை நெஞ்சு காணும் உம்முடையது. இதனுல் உமக்கு எவ்வளவு லாபம் பார்த்தீரா?" என்ருன் இதுவரை இலாபமே கண்ட கள்வன்.

"காருண்யத்திற்குக் கொடுத்த அது ஒன்று மாத்திரமே போதும். ஐயோ! விஜயன் எவ்வளவு இலட்சணமாய் இருந்தான்! உண்மையில் நமக்கு ஒரு கெடுதியும் அவன் செய்யவேயில்லை—இருந்தாலும்" என்ருன் காரியதரிசியின் கடு உண்ட மடையன்.

"எல்லாம் ஆய்விட்டது. இனிமேல் இதைப்பற்றி ஒன்றும் உரையாதீர். எடுத்த காரியத்தை மாத்திரம் முடியும். நானும் ஷண்முகநாதருக்குச் சொல்லுகிறேன். மகாதேவருக்குப் பைத்தியம் பிடித்தான பிறகும், விஜயம் இறந்த பிறகும், ஷண்முகநாதருக்கு அப்பக்கம் பிடிப்பு இல்லை. இனிமேல் நாம் சொன்னபடி கேட்பர். இனியாவது நீர் அவரை அடிக்கடி சந்தித்து, தினம் ஒவ்வொரு வார்த்தையாய்ச் சொல்லி இன்னும் மூன்று மாதங்களில் கல்யாண ஏற்பாடு செய்து

விடும். இதற்குள் காருண்யம் உம்மைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தானே சம்மதிப்பாள். உம் தந்திரமே தந்திரங் காணும்!" என்முன் மறுபடியும் திருடுவதற்கு மனம் திருப் பின தீயன்.

## உரு. கல்லறை.

But, my friends, I think that it is a much harder thing to escape from wickedness than from death; for wickedness is swifter than death... And now I shall go hence, sentenced by you to death; and they will go hence, sentenced by truth to receive the penalty of wickedness and evil.- *Socrates* in The Apology.

விஜயம் காணுமற்போய் ஐந்து மாதங்களுக்கு மேல் ஆகின்றன. கோடைகாலம் போய் மாரிகாலம் வந்து ஏகும் சமயத்தில் இருந்தது. காளரிமலைத் தொடர்களில் மோழை மலை என்றொரு பெருஞ்சிகரம் இருக்கிறது. அதற்குப் பின் பலமலைகள் அடுக்கடுக்காய் இருக்கின்றன. இப்பெரிய சிக ரத்திற்கும் மற்றும் மூன்று பெருமலைகள் கூடும் இடத்திற்கும் இடையில், பெரும் பள்ளம் என்று பெயரிடப்பட்ட ஒரு பள் ளத்தாக்கு, பதினன்கு காணி சதுரம் பரவுகிறது. இதன் ஈசானிய மூலையில் மிகப்பருத்த கருங்காலி மரங்களும், மூங் கில் புதர்களும், வான் அளாவிய தேக்குமரங்களும், வேங்கை விருக்ஷங்களும், ஒரே கும்பலாய்த் தங்கி, ஒன்றோடொன்று சிநேகிதர்களைப் போன்று ஊடுருவி, சூரியன் கதிர் கீழ்விழா வண்ணம் தங்கள் கிளைகளாலும் இலைகளாலும் தடுத்து, பல காட்டுச் சிறு கொடிகளைத் தங்களுக்கு மாலைகளாக அணிந்து, அவ்விடத்தைக் காக்கின்றன. சூரியனுக்கு மாத்திரமே அன்றி வருணனுக்கும் இவைகள் வழி விடுவதில்லை. இவைகள் தங்கு மிடங்களில் ஆறடி உயரம் வளரும் சோனைப் புற்கள் வளர்ந்து, திரைந்து, படுத்து, தம் மக்களுக்கு இடம் தருகின் றன.

இவ்விருட்சங்களில் அதிக உயரம் வளர்ந்திருக்கும் வேங் கையடி என்னும் விருட்சத்தின் உச்சியில் ஏறிப் பார்த்தால், கண்ணுக்கு எட்டின தூரம், மலைகளும், குன்றுகளும், காடு களும், பள்ளத்தாக்குகளும், காறுகளும், வெகுதூரத்தில் குடிசைகள் எனத் தெரியும் ஊர்களும், சிறுகுழியில் ஊறும் நீர் எனத் தெரியும் ஏரிகளும், செங்கீரைப் பாத்திகள் எனத்

தோன்றும் செந்நெல் வயல்களும் காணலாம். சற்று அங்குத் தங்கி யாதாயினும் ஒரு மலைச்சரிவை உற்றுப்பார்த்தால் ஆடுகளென மந்தைமந்தையாய் ஓடும் மான்களும், திருடர்கள் எனப் பதுங்கும் சிறுத்தைகளும், குளிர் காலத்திற்குக் கம்பளம் போர்த்த என மரமேறும் கரடிகளும் தெரியும். இன்னும் சற்று சமீபத்திலேயே நோக்கினுல் காட்டுக்குரங்குகளும், செந்நாய்களும், முயல்களும், முள்ளம்பன்றிகளும், பெரும் பன்றிகளும் புதர்களுக்கு இடையில் சதா ஓடிக்கொண்டு திரிவதைப் பார்க்கலாம். மாரிகாலங்களில் மஞ்சு தங்கும் அம்மலைச் சிகரங்கள் வானுற வளர்ந்து வானிற் கலந்து மறைவதாகவே காணப்படும். மலைச்சார்புகளில் உள்ள வெளியான புல் நிலங்களில் மேயும் ஆடுமாடுகள் சிறு புள்ளிகள் எனத் தோன்றும். நாம் விவரித்த கீழிடத்தைச் சூரியன் பார்த்ததேயில்லை. எப்பக்கமும் வீடெனக் கவிந்த கற்களால் அவன் மறைபட்டு, மேலும் பக்கத்திலும் உள்ள கற்களால் சிதறுண்ட அவன் சிறு திவலைகளே இங்கு நுழைகின்றன. கதிரவன் உதிப்பதையும் படுவதையும் மலைச்சிகரங்களை அம்மாயாவாதி பொன்னுக மாற்றும்போது அறியலாம். அவன் எப்போதும் பொன்னே என அங்கே கருதப்படுகிருன். அவன் தன் வெள்ளிய கிரணங்கள் பச்சை இலைகளில் விழுந்து பசுமை அடைகின்றன.

இவ்வண்ணம் காவலுறும் இம்மரங்களின் சிறு வழியாக மெல்லப் புகுந்து உட்செல்லுவோமாயின் மத்தியிலிருந்து ஒரு வழி கீழ்நோக்குகிறது. அக்கீழ்நோக்கும் வழி செங்குத்தாய் நிற்கும் இரண்டு பாறைகளுக்கு இடையில் செல்லுகிறது. அவ்வழியே நெடுந்தூரம் போனுல் அனல்போல் காற்று வீசுகிறது. வெளிச்சம் மங்கலாய்த் தெரிகிறது. மலை உயரத்தினின்றும் சமபூமிக்கு வந்தோம் என்று நினைக்கும் படி அவ்வளவு அடியில் இவ்வழி கொண்டுபோகிறது. இது வரைக்கும் தலைக்குமேல் பெரும் பாறையே. அஃது ஒரு நீண்ட பெரும்பாறை. பிரம்ம ராக்கதனே போல் சாய்ந்திருக்கிறது. அங்கே சென்றதும் ஒரு கதவு திறக்கிறது. இடம் விசாலிக்கிறது. சத்தம் சிறிது இடினும் எதிரொலி எழும்புகிறது. இப்பாந்த இடமும், அதன் ஆறு புறங்களிலும், சாம்பல் நிறமான பெரிய கற்களால் சூழப்பட்டு அவை

களால் ஆக்கப்பட்டு இருக்கிறது. அவ்விடத்தினின்றும் மற்றொரு வழி வடபாகம் உயர ஏறுகிறது. அதன் வழியாய்ச் சென்று அங்குள்ள மற்றோர் கதவைத் திறக்கில் ஓர் அறை மேன்மாடியில் இருப்பதுபோல் நல்ல குளிர்காற்று உள்ளதாய் இருக்கிறது. இக்கல்லறை ஒரே சமயத்தில் இருபது பெயர் வசிக்கக்கூடிய அவ்வளவு விசாலமாய் இருக்கிறது. இதன் நான்கு பக்கங்களிலும் பாறையே. பக்கங்கள் இரண்டும் திறந்து தூரத்திலுள்ள இரண்டு பெருங்கற்களால் வெளியினின்றும் மறைந்திருந்தது அது. இவ் அறைக்கண்ணேயே சில சிறு சாமான்கள் மனிதன் சௌக்கியத்திற்கு என வெளியிலிருந்து கொண்டுவந்திருந்தன.

இவ் அறையில் பரப்பியிருந்த ஒரு கம்பளத்தின்மேல் இருவர் இருந்தனர். ஒருவன் சற்றே சாய்ந்து படுத்திருந்தான். மற்றவன் அவனுக்கு எதிர்ப்புறம் உட்கார்ந்து படுத்திருப்பவன் முகத்தை உற்றுப்பார்த்து உவகை உறுபவன் போல் தோன்றினன். இதுவரையில் கண்ணை மூடி ஓய்ந்திருப்பவன் போல் இருந்த அவன், இப்போது கண்ணைத் திறந்து, "இப்போது எப்படி இருக்கிறது உடம்பு?" என்றான்.

"இப்போது சற்றுத் தெளிவாய் இருக்கிறது. சீக்கிரத்தில் சௌக்கியமாகும். முன்போல் இதைக் குடித்துவிடு." எனப் புகன்று, பச்சை நிறமான சாறு உள்ள ஒரு சிறு கிண்ணத்தை அவன் உதட்டினிடம் வைத்து மெதுவாய் அதை உட்செலுத்தினன் மற்றவன்.

"நான் எழுந்து உட்காருகிறேன்." என்று நோயாளி சொல்ல, "சரி உட்கார்." என்று தலையணைகளை அவன் பின் வைத்து, "இதன்மேல் சாய்ந்துகொள்." என்றான் மற்றவன்.

சற்றுப் பொறுத்ததும் எழுந்து உட்கார்ந்து, "இன்றைக்கே நான் வெளியே போய் உலாவலாம் போல் இருக்கிறது. கைகால் பிடிப்பும் அசதியும் தோன்றவில்லை. பலக்குறைவாய் மட்டும் இருக்கிறது. எல்லாம் இன்னும் பத்து நாளைக்குள் முன் போல் ஆய்விடும் என நினைக்கிறேன்." என்றனன் அவன்.

"இன்னும் ஒரு வாரத்திற்குள் உன் உடம்பு பழைய நிலைமையை அடையும். ஆனல் நீ அவசரப்பட்டு எங்கும் வெளியே செல்லுதல் கூடாது. இம் மாரிகாலத்து மலைக் காற்றே உனக்கு ஆகாது." என்றான் மற்றவன்.

அவர்களில் இளையவன் சற்றுப் பொறுத்து, தன் தேக முழுவதும் பார்த்து, "சுந்தரம்! நீ முதலில் என்னைப்பார்த்த போது எப்படி இருந்தேன் சொல்." என்று அவன் முகநோக்கினன்.

அதற்கு அவன் "உடம்பு முழுவதும் நனைந்து வாயில் இரத்தம் வடிய ஒரு மரத்தடியில் கிடந்தனை. நல்லகாலம்! கடவுள் துணையாய் நான் விடியற்காலையில் அங்குவர நேரிட்டது. அப்படிப்பட்ட நிலைமையிலேயே இளவெயில் சிறிது பட்டிருப்பின், ஆ! உயிர் நிற்காதே." என்று, நினைப்பே பயம் தருவது போல் பேசினான்.

"எதனால் அப்படியிருந்தது? உனக்குத் தெரியுமா?" என்றான் மற்றவன். இவனே நம் விஜயம்.

"விஷக்காலி வேரை அரைத்துக் குடித்தால்தான் அப்படிவரும்." என்று மறுமொழி சொன்னான் மீனாட்சி சுந்தரம்.

"நானெப்படி அதைக் குடித்திருப்பேன்?" எனத் தன்னையே கேட்பவன்போல் தோன்றினன் விஜயம்.

"யாராவது உன் பகைஞர் உனக்கு விருந்தன்றைக்கு இட்டிருக்க வேண்டும். உனக்கு யார் பகைஞன்?" என மீனாட்சி சுந்தரம் கேட்டான்.

"எனக்கு யார் பகைஞன்! ஒருவரும் இல்லையே." என்று யோசித்தான் விஜயம்.

"விருந்து நடந்த அன்று நீ ஒன்றும் தித்திப்பாய்க் குடிக்கவில்லையா? நினைத்துப்பார்." என்றான் மீனாட்சி சுந்தரம்.

"ஓ ஓ! ஆம் ஆம். ஆனால் அது கண்ணகி யன்றோ கொடுத்தாள்." என்று ஞாபகப்படுத்தினன் விஜயம்.

"கண்ணகியும் ஏமாறியிருக்கலாம். இத்தீத்தொழில் புரிவார் இவரென்று யாரையாவது குறிக்க முடியுமா?" எனக் கேட்டான் மீனாட்சிசுந்தரம்.

"எனக்குப் பகைஞர் ஒருவரும் இல்லையே. பிறகு நான் யாரைக் குறிக்கிறது?" என யோசித்தனன் நம் விஜயம்.

"சரி! உனக்கு நேரேயுள்ள பகைவர் இருக்கட்டும். ஷண்முகநாதர் வீட்டில் அன்றிரவு களவு செய்ய வந்தவர்கள் இன்னாரென அறிவையோ?" என்று கேட்டான் மீனாட்சி சுந்தரம்.

"ஓ! அவ்விஷயம் எனக்கு ஒன்றும் தெரியாது. நீ அடுத்த நாட்களில் வந்து தெரிவிப்பாய் என்று நினைத்தேன். ஆனல் நீ வரவேயில்லே. இப்போதாவது எனக்கு அதன் விவர மெல்லாம் சொல்." என்று தேகத்தை மற்றொரு புறம் திருப் பிச் சௌகரியமாய் அமைத்துக் கொண்டான் விஜயம்.

உடனே மீனுட்சிசுந்தரம் தனக்கு அவ்விஷயத்தைப் பற்றித் தெரிந்தன யாவும் ஒன்றும் விடாது சாங்கோபாங்க மாய்க் கூறி முடித்தனன். இவை முழுவதும் விஜயத்திற் குப் புதியனவாயும், வியப்பையும் வெட்கத்தையும் தரக் கூடியனவாயும் இருந்தன.

இவை கேட்டலும் விஜயம் திகைத்து, "சுந்தரநாதமும் காரியதரிசியுமா இவ்வண்ணம் இயற்றினர்? நன்று! நன்று!! இவர்கள் திறம். காருண்யத்தைக் கல்யாணம் பண்ண அவள் வீட்டில் பொய்க்களவு ஆடுவதோ? சுந்தரநாதம் இதென்ன மடமை? இதென்ன வஞ்சனே? இதுவோ கல்விக்கு அழகு! மற்று அக்காரியதரிசி—அவன் என் செய்தனன்? கள்ளத்தனம் உடையவன். காரியதரிசியும் கருங்கள்வனும் ஒருவனே! அவன் இருக்கும் ஊரினும் இடுகாடு நன்றே. பதின்மடங்கு நன்றே. ஆதலின் சுந்தரநாதத்தின் புது வேஷத்திற்கு அவனே தலைமையான காரணம், அவனே அன்றோ சந்திரவர்மா முதுகில் பிடிக்கவேண்டும். ஆ ஆ இப்படியாயிருந்தன விஷயங் கள்!." என்று, தன்விஷயத்தை மறந்து, தான் கேட்ட செய்தியிலேயே தன் மனமுழுதும் செலுத்தி, அமைவு அடை யானுய்ச் சற்று நிதானித்து, "அப்படியானல் மனிதர் யாவ ரும் வேஷ தாரிகளே. ஒவ்வொருவனும் தன்சுய ரூபத்தை மறைக்கக் கற்றுக் கொள்ளுகிறுன். இதற்குத் தான் உலக வாழ்வு, உயிர்வாழ்க்கை என்று பெயரோ? நன்று நன்றே! இக்காரியதரிசியை அப்பா நல்லவர் அல்லர் என்று நினைத்தது உண்டு. மற்று இவ்வகையான திருட்டுக்கு அதிபதி என்று ஒரு வரும் அறிந்திலர். இக்கொடியனின் சாமர்த்தியம் என்னே? எவ்வளவு கபடமாய்த் தன் உயரிய பதவியிலிருந்து களவாடி வருகிறுன்! சரி சரி! இந்த நாகனல் தான் சுந்தரநாதம் பாழ்பட் டிருக்க வேண்டும்." என்று சிந்தனேயோடு வியப்புற்றுப் பேசினன்.

பிறகு சற்று ஞாபகப்படுத்திக்கொண்டு அதிகமும் மன வருத்தமுற்ற முகத்தோடு சுந்தரத்தை நோக்கி "நீ என் மணிமங்கலத்திற்கு உடனே வந்து இவ்விஷயங்களெல்லாம் சொல்லாது போனாய்?" என்று கேட்டான்.

அவன் தான் முன்னமேயே சொன்ன விஷயத்தைத் திருப்பிச் சொன்னான். "ஓ ஓ! நீ எங்கள்பேரில் சந்தேகம் கொண்டனையோ? . . ஆனால் நீ செய்ததுதான் சரி. இல்லாவிடில் அக்காரியதரிசியே உனக்கு ஏதாவது இடையூறு செய்திருத்தல் கூடும். அவன் ஞானமே இல்லா ஈனன். வஞ்ச நெஞ்சப் பாதகன். அந்த நயவஞ்சகன் சுந்தரநாதத்தைக் கொண்டு, தான் தப்பிப்போக ஏதாவது வழிதேடினும் தேடி இருப்பன். எப்படிப் பார்க்கினும் நீ செய்தது சரியே." என்று வெகு யோசனையோடு தன் வலிவற்ற மூளையை வருத்தினன் விஜயம்.

விஜயம் இப்போது மொழிந்த வசனங்களில் எத்தனை தரம் திருடன் கள்வன் என்று இழிவாய் உரைத்திருந்த போதிலும், மீனாட்சிசுந்தரத்துக்கு இவை தனக்கு இழிவு தருமெனப் படவேயில்லை. அவன் அத்தொழிலை விதிவல்லமையால் ஏற்றுக்கொண்டனனாயினும், அவனுக்கென அறிவு வந்து, அவன் நிலைமை இடங்கொடுத்தபோது, அத்தொழிலின் தீமையை அறிந்து அவனே கடிந்தனன். மீனாட்சிசுந்தரத்துக்கு விஜயத்தின் வார்த்தை நயமும், யோசனையும், உயர்ந்த அறிவும் அவனிடம் போாவல் உண்டாக்கின. விஜயத்தினிடமிருந்து தான் எல்லா விவகாரங்களும் பெருந்தன்மையும் கற்றுக்கொள்ளலாம் எனச் சந்தோஷித்தனன். விஜயம் தனக்குச் சொந்தம், தனக்கு நெருங்கிய சகோதரன், என்ற ஒரு நினைப்பே அவனுக்கு ஆநந்தம் உண்டாக்கிற்று. தான் கூடிய சீக்கிரத்தில் இப்பாழ்ந் தொழிலை விட்டு மணிமங்கலத்தில் பெருந்தன்மையும் உயர்ந்த அறிவுமுடைய தன் பந்துக்களிடம் கூடி வாழலாம் என்று எண்ணும்போதெல்லாம் அவன் தேகம் மயிர்க்கூச் செறிந்தது. விஜயமும் தான் இவ்வாறு பேசுகிறது மீனாட்சி சுந்தரத்துக்கு வருத்தம் தரும் என்று கருதவே இல்லை. மீனாட்சி சுந்தாத்தின் எண்ணத்தைத் தன் தந்தையால் தெரிந்தபின் அவனைத் தன் சகோதரனாகவே பாவித்து அவன் விதிக்கு நொந்தான்.

மறுபடியும் விஜயன் தன் தமயனை நோக்கி, "நான் இவ் வேலையை ஏற்றுக்கொண்டதும், உன்னிடம் ஏன் தெரிவிக்க வில்லை யென்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டுத் தான் யோசித்தான்.

"அதன் காரணம் எனக்கும் தெரிய வேண்டியது தான். அதுதான் எனக்கு அப்போது விளங்கவில்லை." என்முன் சுந்தரம்.

"என்னை இவ்வேலையில் ஏற்படுத்தியவர் இப்போது சென்னையில் இருக்கும் சந்திரவர்மா. அவர் இரகசியமாய்த் தம் பிதாவன்றி மற்றொருவர்க்கும் தெரியாது எனக்கு இவ்வேலை யை அளித்துத் தனக்கு உதவிசெய்யக் கேட்டுக்கொண்டார். ஆகையால் அவர் வருகிற வரைக்கும் இதை நான் வெளியிட் டால் யாருக்காவது தெரியுமே அல்லால், இல்லாவிடில் தெரி யாது. ஆனல் நான் அப்பாவிடமிருந்து, நீ அவர்களிடம் ஒரு நாள் வந்து உன் தீர்மானத்தைச் சொன்னது முதல் யாவையும் அறிந்த பிறகு, சந்திரவர்மா முதலிய எங்களால் இந்தக் கள் வர் கூட்டம் பிடிபட்டதென்முல், உன் பெருந்தன்மையும் பேறிவும் தெரியாது. இதுவரையில் சுமந்ததோடு இனியும் நீ வீண்பழி சுமக்க நேரிடும் என்று நினைத்து, உன்னலேயே இக்கள்வர் கூட்டம் அடங்கிற்றென்பதையும், மற்றுமுள்ள உன் சரித்திர முழுவதையும் பொதுஜனத்திற்குத் தெரிவித்த லே உன்னைக் கனப்படுத்தும் என உன்னி, நான், சந்திரவர்மா வருகிற வரைக்கும் வெளியிடுகிறதில்லை யென்றும், அவர் வந்தாலும் அவருக்கு எனக்குத் தெரிந்த விஷயங்களெல்லாம் சொல்லி, உனக்கு அநியாயமாய் விதிவசத்தால் நேர்ந்ததை நீ உன் பேறிவாற்றலால் வென்றதனல் உன்னைக் கனப்படுத்து மாறு அவரைக் கேட்க வேண்டுமென்றும் நினைத்திருந்தேன். இதுவே நான் உன்னை வந்துபார்க்காததின் காரணம். உண் மையில் இவ்விஷயம் உனக்குத் தெரியக்கூடாதென்றே நினைத் திருந்தேன்." என்று மெல்ல மெல்லப்பேசி விஜயம் தன் எண் ணமெல்லாம் தெரிவித்தனன்.

இதை முழுவதும் கவனித்துக் கேட்ட மீனுட்சி சுந்தரம், தன் மீது விஜயத்திற்குள்ள முழு நம்பிக்கைக்காகவும் பிரியத் திற்காகவும் களிப்புற்றுக் கண்களில் நீர் பெருக 'விஜ

யம்! உன் பெருந்தன்மைக்கு நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்!" என்று பரிவான குரலுடன் சொன்னுன்.

இதனிடையில் மௌனமாயிருந்த விஜயம் மீனுட்சி சுந்தரத்தைப் பார்த்து "இவ்விஷயம்--எனக்கு இவ்வேலை சந்திர வர்மா அளித்தது—சுந்தரநாதத்திற்கு எப்படித் தெரிந்தது? இது எப்படிக் காரியதரிசிக்குக்கூடத் தெரியும்? இது இரகசியமாய் சந்திரவர்மா செய்யும் வேலையல்லவோ?" என்று அவனைக்கேட்பது போல் இவனே யோசித்தான்.

"கடித மூலமாய் பெரிய ஜமீனுக்கு இவ் உத்திரவு வந்திருப்பின் காரியதரிசிக்கு அதை எடுக்கத் தெரிந்திருக்காதா?" என்ருன் மீனுட்சி சுந்தரம்.

"இவ்விஷயம் இருக்குமென்ருவது அவர்கள் சந்தேகிக்க இடமில்லை. ஒருகால் தற்செயலாய் அவர்களுக்குத் தெரிந்திருத்தல் கூடும்." என்று எண்ணினன் விஜயம். மறுபடியும் சற்றுநேரம் மௌனமாயிருந்து கொஞ்சம் ஆச்சரியப் பட்ட முகத்தோடு "நான் கண்விழித்து, அன்றைக்கு உன்னை இன்னுன் என்று அறிந்தது முதல் எத்தனை நாளாகின்றது?" என்று கேட்டான் விஜயம்.

"கண்களைத் திறந்து எதிரிலிருப்பவர் இன்னுரென்று தெரியாமலே நீ பேச ஆரம்பித்து இரண்டுமாதம் இருக்கும். ஆனுல் நீ என்னை அறிந்து சுமார் இருபது நாட்களே ஆகின்றன." என்று மெதுவாய்ச் சொன்னுன் மீனுட்சிசுந்தரம்.

"உன்னை எப்போது எப்படி அறிந்தேன் என்பது ஒன்றும் என் ஞாபகத்தில் இல்லை. ஆனுல் நான் இங்குவந்து இரண்டு மாதங்களுக்கு மேல் இருக்கும் போல் இருக்கிறது. மழைக் காலமும் கடந்தது போலிருக்கிறதே! என்ன!" என்று விஜயம் சுற்றிலும் பார்த்து ஆச்சரியப்பட்டான்.

"உன்னை மணிமுத்தா நதிக் கரையிலிருந்து எடுத்து வந்து சுமார் ஐந்து மாதம் இருக்கலாம்." என்று சுந்தரம் தன் மெதுவான குரலிற் சொன்னுன்.

"என்ன ஐந்து மாதங்களா! இதுகாறும் அப்பாவுக்கு என் நிலைமை தெரியாதோ?" என்று கேட்டான் விஜயம்.

"நீ இங்கு இருக்கிருய் என்பதாவது, நீ உயிரோடிருக்கிருய் என்பதாவது அவர்களுக்குத் தெரியாதென்று நினைக்கிறேன்." என்ருன் மீனுட்சிசுந்தரம்.

"ஐயோ! அவர்கள் என்ன நினைக்கிறார்களோ? அப்பா எப்படி இருக்கிறார்களோ? அந்தோ! என்னால் பல பேர்க்குக் கெடுதி விளைந்திருக்கக்கூடும்." என்று மறுபடியும் வருந்தினான் அவன்.

சற்றுப் பொறுத்து "ஐந்து மாதங்களாகவா எனக்கு மருந்து ஊட்டுகின்றனை? ஐந்து மாதங்களாகவா என்னை இங்கே பாதுகாக்கின்றனை? சுந்தரம்! உனக்கு நான் கைம்மாறு செய்யவும் கூடுமோ? உன் பொறுமைக்கும் தயாள குணத்திற்கும் பெருந்தன்மைக்கும் கடவுள் அருள்புரிவாராக. ஐயோ! நீ பிறந்தது முதல் வீட்டிலேயே இருந்திருந்தால் . . கடவுளுக்கு அப்படி மனம் இல்லைபோலும் . . ." என்று கண்களில் நீர் தாரைதாரையாய் வடிய சுந்தரத்தின் விதிவசத்திற்கு ஆறாது மனம்வருந்தினன் இளையவன்.

விஜயம் வருந்துவது கண்டு சுந்தரமும் மனம் சகிக்காமல் துக்கித்தனன். சுந்தரத்திற்குப் பேச நா எழவில்லை. தான் வீட்டிலேயே இருந்திருந்தால் விஜயத்தைப்போல் கல்வி கற்று, அறிவாளனாய் எவ்வளவு மனிதரை ஆதரித்திருக்கலாம் என்பன போன்ற பலப்பல எண்ணங்கள் அவன் மனத்தெழுந்து, பழைய தொழிலால் வன்மையடைந்த நெஞ்சத்தை மெழுகே யென உருக்கிற்று.

சற்றுநேரம் இருவரும் மௌனமாயிருந்த பிறகு, விஜயம் கண்களைத் துடைத்துக்கொண்டு சுந்தரத்தை நோக்கி, "சுந்தரம்! என்னை முதலில் மரத்தடியில் கண்டது முதல் இதுவரையிலும் நேர்ந்தன யாவும் என்னிடம் சொல். ஒன்றையும் ஒளிக்காதே. யாவும் சொல்." என்று இரங்கினன்! சுந்தரமும் தன் மனத்தை ஆற்றுவதற்கு இதுவே நல்லவழி என்று தன்னைத் திடப்படுத்திக்கொண்டு விஜயத்தை நோக்கி,

"வனவிருந்திற்கு முந்தியநாள் நானும் இங்கிருக்கும் இவ்விருவரும் அந்தவழி போகும்படி நேரிட்டது. அப்போது அப்பந்தல்கள் மணிமங்கலம் மகாதேவர் வன விருந்திற்கென அமைத்தனர் என்று சொல்லக்கேட்டேன். உடனே எனக்கு அவர்கள் அங்கே செய்வனவற்றைப் பார்க்க வேண்டுமென்று ஓர் எண்ணம் உண்டாயிற்று. ஆகவே அடுத்த நாள் மத்தியானத்திற்கு நாங்கள் மூவரும் காட்டினிடையில் புகுந்து அவ்வழியே வந்தோம். அங்கே ஜனங்கள் பேசும்

ஓசை முதலியன ஓயாது கேட்டன. ஆகையால் அங்கே போவதுகூடாதென மறுபடியும் திரும்பி வந்தோம். கொஞ்சதூரம் வருவதற்குள் பெருமழை பெய்து ஆற்றில் வெள்ளம் வந்தது. உடனே மரங்கள் நிறைந்த அவ் ஆற்றங் கரையிலேயே மரங்களின் மீதேறி இரவு முழுவதும் கழித்தோம். விடிந்ததும் நாங்கள் எழுந்து ஆற்றைக் கடக்கப் போகும்போது மரத்தடியில் நீ படுத்து உழல்வதைக் கண்டோம்.

"எங்களுக்கு முதலில் இன்னதென்பதே ஏற்படவில்லை. உடனே நான் அருகில் வந்து பார்க்க இரத்தமும் நீருமாய் தரை எல்லாம் தோய்ந்திருந்தது. உன் முகம் கீழ்ப்புறம் இருந்தது. உடனே உன்னைத் தூக்கி நிமிர்த்தினேன். அப்போது என் கைகால்கள் உதறின: பேசமுடியவில்லை. ஓ என்று பெருங்கூச்ச லிட்டேன். உடனே என்னையே தைரியப்படுத்திக் கொண்டு மார்பிலும் மூக்கிலும் கையை வைத்துப் பார்த்தேன். உயிர் இருக்கிறதென்று தெரிந்ததும் உதிரம் வடிவதற்குக் காரணம் என்னவென்று அந்த இரத்தத்தையும் உன் உடம்புக் குறிகளையும் பார்த்தேன். உடனே என்னோடிருந்த ஆள் ஒருவனும் நானும் ஒரே குரலில் 'விஷக்காலி' 'விஷக்காலி' என்றோம். இதற்கு எனக்கு ஒரு மருந்து தெரியும். இங்குமங்கும் ஓடிப்பார்த்து அதைப் பறித்து வந்து கசக்கிச் சாறுவிட்டேன். உடனே இரத்தம் நின்றது. அப்போது தான் சூரியன் உதித்தது. உடனே உன்னை வேஷ்டி முதலியவைகளால் செவ்வையாய் மூடித் தூக்கிக்கொண்டு எங்கும் நிற்காமல் நேருக்கு நேராய்க் காட்டில் புகுந்து இவ்விடம் கொண்டு வந்து சேர்த்தேன். உடனே இங்கிருந்த பலரையும் விஷக்காலிக்கு மருந்தென்ன என்று விசாரித்துத் தெரிந்த அதையே விடாமல் ஒருநாளைக்கு ஆறுவேளை போட்டும்; சாதத்தை வெந்நீரில் பிசைந்து வடிகட்டி அதனை வாயில் பெய்தும் சிலநாட்கள் சென்றன. இப்போது இரத்தம் வருவது நின்றது; மார்பு சரியாய் அடித்தது; மூச்சும் சரியாய் வந்தது; ஆனால் கைகால்கள் உதறின. கண்கள் மிரண்டன. இதேமாதிரி இன்னும் ஒருமாதம் ஆயிற்று. அதற்குள் என் கூட்டத்தார் எல்லாருக்கும் எனக்குத் தெரிந்த விஷயத்தைச் சொல்லி, இங்கு சேகரித்த பொருள்களை எல்லாம் அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து, அவரவர் வீட்டிற்குப் போகும்படி

அவர்களை அனுப்பினேன். ஆனால் அவர்களில் இருவர் மட்டும் என்னை விட்டுப் பிரியோம் என்றுசொல்லி இங்கேயே இருக்கிறார்கள். காரியதரிசியின் இரண்டு ஆட்களையும் என்னிடம் நிறுத்தினேன். அவர்கள் எல்லாரும் என்னை வாழ்த்தியே ஏகினர். நானும் அவரவர்க்குத் தக்கபடி திருட்டுத் தொழிலின் பல தீமையையும் அபாயத்தையும் அவர்கள் அறியுமாறு சொல்லி, அவர் அத்தொழிலினை விடவேண்டிய அவசியத்தையும் செவ்வையாய்க் கற்பித்தேன்.

"அடுத்த இரண்டு மாதங்களும் உனக்கு உன் நினைவு இல்லை. மூச்சுமாத்திரம் வந்துகொண்டிருந்தது. ஆனால் கையில் இரத்த ஓட்டம் இல்லை. தேகம் வெளுத்து ஒட்டியது. ஆனால் நாளுக்கு நாள் உடம்பு சீர்பெறுவதை, எப்போதும் உன் முகத்தையே பார்த்திருந்த நான் அறிந்தேன். அப்போது 'விஜயம் இருக்கிறான். உயிர் பெற்றெழுவான்.' என்று சந்தோஷப் படுவேன். சில சில சமயங்களில் கண்கள் வெளிவருவதைப்போல் தெரியும். இன்னும் சில சமயங்களில் மூச்சு வரமுடியாது தங்கும். அப்போதுதான் நான்கையைப் பிசைந்து "விஜயம் விஜயம்" என அழுவேன். ஆனாலும் எனக்கு விஷக்காலியின் குணம் தெரியுமானதால் நீ சரியாய் முன்போல் ஆகிறதற்குள் ஆறுமாதம் செல்லுமென நினைத்தேன். நல்ல காலமாய் நீ மூன்றுமாதம் ஆனதும் கண்களை விழித்துப் பார்க்க ஆரம்பித்தாய். இன்னும் ஒரு மாதம் ஆனதும் "அப்பா அப்பா" என்று சில சமயங்களிலும் 'காருண்யம்' என்று சில சமயங்களிலும் பேசினாய். சிற்சில நிமிஷங்கள் தவிர மற்றபொழுதெல்லாம் நீ தூங்குவதேபோல் இருந்தனை. இருந்தாலும் எனக்கு வரவர சந்தோஷமே அதிகரித்தது. இன்னும் பத்துப் பதினைந்து நாட்களானதும் கண்விழித்தபோது நீ என்னை உற்றுப்பார்த்து 'யார்' என்று யோசனை செய்வதுபோல் இருந்தது. மற்றும் சில நாளைக்குள் 'யார் காளியா?' என்று கேட்டாய். நான் ஆமாம் என்றேன். ஆனால் இந்த வாரத்தில் நீ ஒரு தரம் விழித்து என்னைப் பார்த்து தாகத்திற்கு வேண்டியபோது 'நீ காளியல்ல. சுந்தரந் தானே உன்பெயர்?' என்றாய். எனக்கு வெகு சந்தோஷம் உண்டாயிற்று.

"மகாதேவர் உன்னிடம் என் விவரமுழுதும் சொல்லி யிருப்பார் என்றெண்ணினேன். உடனே நீ இன்னம் பத்து நாளில் சௌக்கியப்பட்டு விட்டால் எல்லாம் பேசலாம் என்று சந்தோஷமானேன். நேற்றும் அதற்கு முதல்நாளும் நீ பாதி நேரம் விழித்து உன்னைச்சுற்றிலும் பார்த்து இவ்விடமெல் லாம் விசாரித்தாய். நான் எல்லாம் சொன்னேன். நீ சரி யென்று மறுபடியும் உறங்கிவிட்டாய். இன்றைக்குத் தான் கடவுள் கிருபையால் இவ்வளவு தூரம் செவ்வையாய்ப் பேசு கிறாய். இன்னும் பத்துநாளைய ஓய்வு உனக்குத் தேகபலம் தரும். இப்போதுதான் ஓடி ஒளிந்த மனமெல்லாம் வந்து, தன் பழைய நிலைமையை அடைந்திருக்கிறது. எல்லாம் கடவுள் செயல்." என்று சொல்லி நிற்கும்போது அவன் கருணை நிறைந்த கண்களினின்றும் பனித்துளிகளை போன்று நீர் ததும்பிச் சொரிந்தன.

விஜயம் இவற்றை யெல்லாம் நன்கு கவனித்துக் கடைசி யாய் அவன் இன்னது சொல்வதென்று அறியாமல், "சுந்தரம்! அரை நிமிஷத்தில் ஓடிப்போகவிருந்த உயிரை நீ சொல்ல முடியாக் கஷ்டப்பட்டுக் காப்பாற்றினை. உன்னிடம் நம் தந் தையும் காருண்யமும் என்னைவிட அதிக நன்றி பாராட்டு வார்கள். இதற்குக் கைம்மாறு செய்யும் திறம் மனிதனுக்கு இல்லை. எல்லாம் வல்ல தனித்தலைமைக் கடவுள் உனக்கு நல்ல வழி காட்டுவாராக." என்று அசைந்து மெலியும் குரலி னால் சொல்லி முடித்தனன்.

பிறகு சுந்தரம் ஏதோ உணவுப் பொருள் கொண்டு வந்து வைக்க அவைகளை உண்ண முயன்றபடியே விஜயம் "சுந்த ரம்! உனக்கு ஊர் செய்தி செய்தி தெரியாதா?" என்றான்.

"என் கூட்டம் முன் இங்கு இருக்கும்போது முத லில் ஒருமாதம் உன்னைக் காடு மேடெங்கும் தேடினாரென்று கேள்விப்பட்டேன். பிறகு ஒன்றும் தெரியாது." என்றான் சுந்தரம்.

"அப்பாவும் காருண்யமும் எப்படி இருக்கிறார்களோ என்று தான் நான் பயப்படுகிறேன்." என்றான் விஜயம்.

"நான் உன்னை அப்போதே மணிமங்கலத்திற்குக் கொண்டு போய் விட்டுவிடுவேன். ஆனால் உனக்கும் உன்னைச் சேர்ந் தாருக்கும் தெரியாமல் இப்போது விஷம் வைத்ததுபோல்,

பகைஞர் தீங்கு செய்யக்கூடும் என்று நினைத்தே, சௌக்கியம் ஆகாமல் என்னிடம் விட்டு உன்னை எங்கும் அனுப்பலாகா தென்று தீர்மானித்தேன். இப்போது காட்டில் என் வேலையும் முடிந்தது. உன்வேலையும் முடிந்தது. உன் உடம்பு சற்று நலமானதும் மணிமங்கலத்திற்குப் போகலாம்." என்று மிக வும் பரிந்த குரலில் சொன்னான் சுந்தரம்.

"எனக்கு யார் விஷம் வைத்திருப்பார்கள்? நீ என்ன நினைக்கிறாய்? நான் காருண்யத்தின் பட்டுச் சவுக்கம்—பட் டுச்சவுக்கம் ஒன்று என்னிடம் இருந்ததா?" என்று இடையிற் கேட்டான். இதோ இருக்கிறதென்று உள்ளிருந்து கொண்டு வந்தான் சுந்தரம். இதைப் பார்த்ததும் விஜயத்துக்குத் துக் கமும் சந்தோஷமும் ஒரே தடவையில் எழுந்தன. இருந்தா லும், தன் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, "காற்றில் அடித்துப்போன இதை ஓடிப்போய்க் கையில் எடுத்தேன் உடனே கைகால்கள் நடுங்கி மடிந்தன. அப்போது கரையே ஊர்ந்து ஒரு மரத்தடியைச் சார்ந்தேன். உடனே எனக்கு வயிறு மிகவும் வலித்தது. அப்புறம் எனக்கு ஒன்றும் தெரி யாது. ஆ ஆ இதென்ன மாயம்!" என்று உடல் நடுங்கப் பயந்து வியப்படைந்தான் விஜயம்.

"காரியதரிசியாய் இருந்தால் தான் இருக்கலாம். அவனுக் குக்குத்தான் உன்னிடம் பயம் இருந்திருக்கும். நீ கள்வரைப் பிடிக்க ஆரம்பித்தால் ஒருகால் அவனும் பிடிபடலாமே? சுந்த ரநாதம், தானே இது செய்யத்தக்கவன் அல்லன். அவனுக்கு ஒரு வீட்டை அநியாயமாய்க் கொள்ளையிட மனம் இல்லாத போது இவ்விதம் செய்ய மனந்துணியான்." என்றான் சுந் தரம்.

"சரி! எது எப்படி இருந்தாலும் இருக்கட்டும். நாம் எப்போது ஊருக்குப் போகிறது? எனக்கு இப்போதே போனா லும் போகலாம் என்றிருக்கிறது" என்றான் விஜயம்.

"விஜயம், நீ இப்போது வெளியில் போவது சரியல்ல. மணிமங்கலம் சமாசாரம் அறிய வேறே ஏற்பாடு ஏதாயினும் செய்வோம். நீ சற்று உறங்கு." என்று சொல்லி மீனாட்சிசுந் தரம் விஜயம் தேகத்திற்குச் சிகிச்சை செய்ய ஆரம்பித் தான்.

## உசு. காருண்யத்தின் கஷ்டம்.

He who could see Virtue would be wonderfully ravished with the love of her Beauty.—*Plato.*

இஃது இவ்வண்ணம் இருக்க, மணிமங்கலத்தில் இப்போது காருண்யத்தைத் தவிர மற்றெவரும், விஜயன் உயிரோடிருக்கின் இனி வருவான் என்று நம்பவில்லை. வன விருந்தன்றைக்கே வந்த படு வெள்ளத்தில் பறந்து போயினன் என்பதேபொதுவாய்ஜனங்களின் நம்பிக்கை. இதில் ஷண்முகநாதர் கண்ணகி முதலியவர்களும் சேர்ந்தவர். மகாதேவர் தன் அறிவை இழந்து 'விஜயம்' என்ற ஒரு எண்ண மாத்திரமன்றி மற்றொன்றையும் அறியார். சுந்தரநாதமும் காரியதரிசியும் பொது ஜனமேபோல் அபிப்பிராயப் படுவதாய் வெளியில் தோன்றினரேனும் விஜயன் விஷபலத்தால் இறந்தபிறகு, வெள்ளம் கொண்டுபோயிருக்கவேண்டும் என்று தெரிந்தார்கள். காருண்யம் மட்டும் எந்த அறிவாலோ, எந்த நம்பிக்கையாலோ, எந்த மருந்தாலோ, எவ்வித சக்தியினுலோ, 'அத்தான் எங்கேயோ சென்றிருக்கிறார்கள். எவ்வளவு நாட்கள் கழிந்தாலும் என்னிடம் வருவார்கள்.' என்ற நம்பிக்கையில் குறையாமல் இருந்தாள். ஆகிலும், சிற்சில சமயங்களில், தான் தனியே இருந்து 'அத்தான் மறைந்ததற்கு யாவை காரணங்களாய் இருத்தற் கூடும்?' என்று விசாரிக்கப் புகும்போது ஜனங்களின் அபிப்பிராயத்தை முழுதும் செவிகொடாது தவிர்ப்பது தன்னையே ஏமாற்றும் வித்தையாகும் என்று நினைப்பது உண்டு. ஆனல் இது சிற்சில சமயங்களிலேதான். இந்நிமிஷம் சென்றபிறகு பழைய நம்பிக்கை இன்னும் அதிக பலங்கொண்டு அவளை அணுகும். அப்போது அவள் "எப்படி எனக்கு எல்லாக் காரணங்களும் தெரில்கூடும்? நான் அறியாது எத்தனையோ கோடி காரணங்கள் இருக்கலாம்; அவைகளை நான் இப்போது அறிந்தால் ஒருகால் அத்தான் மறைந்திருப்பதின் ஏதுவை அறியலாம்." என்று சொல்லிக்கொள்வாள். இப்படிப் பல மாதங்கள் சென்றன.

ஆனல் பிறர் காருண்யத்தை இவ்வண்ணமே நினைத்து மனதை ஆற்றிக்கொண்டு தொந்தரவு இல்லாமலிருக்க விடவில்லை. பொதுஜன அபிப்பிராயங்கொண்ட ஷண்முகநாதரை

ஒரு நாளைக்குப் பலதரம் கண்டு பேசுவான் விஜயத்தின் மறைவின் உண்மையான காரணம் அறிந்த சுந்தரநாதம். முதல் ஒன்றிரண்டு மாதங்களில் விஜயம் எவ்வளவு நல்லவன் என்றும், காருண்யத்திற்கு எவ்வளவு ஏற்ற கணவனுய்இருந்திருப்பன் என்றும், விஜயம் இறந்ததனுல் எத்தனை பெயர்களுக்கு மன விசனம் என்றும், காருண்யம் உடம்பு மெலிந்து வெளுத்து ஒன்றும் பேசாமலிருப்பதற்கும் அதுவே காரணம் என்றும், அவளுக்கு ஏதாயினும் ஒன்று அவசியம் செய்யாவிடின் எப்படி அது அவள் உயிர்க்கே தீங்கு விளைக்கும் என்றும், காரியதரிசி அதைப்பற்றி என்ன நினைக்கிறுர் என்றுமே அவரிடம் பேசிவந்தான். இவ்வகைப் பேச்சு ஷண்முகநாதர் மனதில் செவ்வனே பதிந்து அஸ்திவாரம் போல் ஆனதும், சுந்தரநாதம் இனிமேல் கட்டடம் கட்டுவது தகும் என்று ஆரம்பித்தனன். ஷண்முகநாதர்—மகாதேவர் பலமற்ற ஷண்முகநாதர்—சுந்தரநாதம் இதுகாறும் சொன்னதை ஏற்று, காருண்யத்தின் உயிர்க்குத் தீங்கு வாரதபடி ஏதாயினும் ஒன்றைச் செய்வதின் அவசியத்தை உணர்ந்து, இன்னதுதான் செய்யவேண்டும் என்று அறியாது மயங்கும்போது, சுந்தரநாதம் அம்மயக்கத்தை நீக்கவேண்டியது அவசியமே.

மயக்கத்தை உண்டு பண்ணினவனே எத்தொழிலிலும் மயக்கத்தைத் தீர்க்கிறவனும். ஆன்மாவை ஆதியில் பீடித்த மாயையைத் தெரிந்தவர்களே அம்மாயையை நீக்க வழி சொல்லுகிறுர்கள். நாம் பெரிய அபாயத்திலிருப்பதாக நாமே கற்பிக்கிறேம்; பிறகு அதனின்றும் விலகுவதற்கு வழிதேடுவது அவசியமாகிறது. ஆகையினுற்றுன் அறிஞர்கள் பலர், தம்மைக் கட்டும் வலையைத் தாமே பின்னி, பிறகு அதைப் பிரிப்பதில் காலம் போக்குபவரை வீணர் என்றும், விஷயங்களின் உண்மையை உணராதார் என்றும் உரைக்கின்றனர். நிலம் எருவிட்டுப் பரிபக்குவம் அடைந்ததென உண்மையாய் நினைத்த சுந்தரநாதம் தான் மிக்க ஆவல்கொண்டுள்ள செந்நெல்லை விதைக்க ஆரம்பித்தனன். இப்போது இவன் ஷண்முகநாதரைக் கண்டபோதெல்லாம் தனக்குக் கல்யாணம் ஆகவேண்டும் அவசியத்தைப்பற்றியும், அதை மணிமங்கலத்திலேயே செய்துகொண்டால் தனது ஜமீன் உத்தியோகத்திற்கு எப்படிப் பொருத்தமாய் இருக்குமென்றும், எப்படிச் சுந்தரநாதம்

ஷண்முகநாதரிடம் அதிகப் பிரியமுள்ளவனென்றும், காரிய தரிசி, தனக்கு எவ்வளவு பிரியமாய் மணிமங்கலத்திலேயே, கூடுமானால் ஷண்முகநாதர் வீட்டிலேயே, மணஞ்செய்வது சரியென்கிறார் என்றும் சொல்லி முடிவை ஷண்முகநாதரே உணர்ந்துகொள்ள விட்டுவிடுவன்.

இக்காலங்களில் ஷண்முகநாதர் சுந்தரநாதத்தின் இனிய வசனத்தினாலும் சுந்தர உருவத்தினாலும் சிறிது மயங்கி, "சுந்தரநாதம் காருண்யத்திற்குத் தகுந்த புருஷன் தான். இவன் குடும்பத்தைப் பற்றிய விஷயம் நாம் ஒன்றும் அறியோம் ஆனாலும், மகா தேவரே ஒருகால் தன் கண்ணகியை இவனுக்குத் தருவதாகவே யோசித்திருந்தனர். ஆகையால் இதைப்பற்றி யோசிக்க வேண்டியதே." என்று தம்முள்ளேயே சொல்லிக் கொள்வர். மேலும் சுந்தர நாதம், 'முன் எனக்குக் கண்ணகியைத் தருவதாக இருந்ததை உத்தேசித்து, மகாதேவர் படுக்கையில் இருக்கும் இப்போது, காருண்யத்தை எனக்கு மணம் புரிவது சரியல்லவென்று ஒருகால் ஷண்முகநாதர் ஐயமுறலாம்.' என்று நினைத்து, அவரிடம் "கண்ணகி சற்றே சிறியவள். அவள் வீட்டிலும் இப்போது விஷயங்கள் ஒன்றும் சரியாயில்லை. ஆனால் எனக்கு விவாகம் சீக்கிரம் ஆவது அவசியம் எனத் தோன்றுகிறது. ஒருகால் மணிமங்கலத்தில் நான் கோரிய படி மணப்பெண் கிடைக்காவிடினும், மதுரையிலாயினும் சென்று மணம்புரிவது அவசியமாய் இருக்குமென்று நினைக்கிறேன்." என்று சொல்லி, தன்னை வலிய அழைத்துக் காருண்யத்திற்கு மணம்புரிவது எவ்வளவு இன்றியமையாதது என்று ஷண்முகநாதருக்குக் காண்பித்தான். இப்படிப் பல வாரங்கள் கழியவே, காரியதரிசியும், தம் கோரிக்கையை நிறைவேற்றின தமது சுந்தரநாதத்திற்கு உண்மையாகவே தாம் உபகாரம் செய்யவேண்டும் என்னும் கருத்துடையவராய், ஷண்முகநாதரைச் சந்தித்து, "சுந்தரநாதம் இப்போது கல்யாணம் செய்து கொள்வதாக இருப்பதால், காருண்யத்தை அவருக்கு மணமகளாக ஈந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்." என்று சொல்லி அவர் கருத்தை அறியப் பார்ப்பர்

இங்ஙனம் நான்கு மாதங்கள் பாடம் கேட்ட ஷண்முகநாதர் இவ்விஷயத்திற்கு இசையாதிருக்க என்ன காரணம் இருக்கிறது? "விஜயம் இருந்தால், எது எப்படி இருந்தாலும்

யார் என்ன சொன்னாலும், அவனுக்கே காருண்யத்தைக் கொடுத்திருப்பேன். இப்போது விஜயமோ, அந்தோ! அக்காளை இறந்து ஐந்து மாதங்களுக்குமேல் ஆகிறது. பார்ப்பதற்கு ஓர் எலும்புகூட கண்ணிற்கு அகப்படவில்லை. ஆகவே அதைப் பற்றிச் சிந்திப்பதில் ஒரு பயனும் இல்லை. காருண்யமோ இப்போது விசனத்தால் ஏங்கி மெலிந்து உருக் குலைந்திருக்கிருள். அவளை இப்படியே தனியே இன்னும் சிலநாட்களுக்கு விட்டுவைத்தாலும் அவள் உயிர்க்கே அபாயம் வருவது திண்ணம். ஆகவே விஜயம் பிரிந்த இவ்விசனத்தை ஒழிக்க ஏதாவது ஒன்று செய்யவேண்டும். வேருெரு விஜயத்தைக் கொண்டு வந்து அவளுக்கு மணம் செய்விப்பதைவிட வேறு என்ன செய்யலாம்? இச்சுந்தரநாதமோ எல்லா விஷயங்களிலும் ஏறக்குறைய விஜயத்தைப் போலவே இருக்கிருன். ஒருகால் மகாதேவர் மனநிலை மாருதிருந்தால், நாம் இம்மணம் செய்வது அவருக்கு மனவருத்தத்தைத் தரும். அவரோ ஒன்றையும் அறியாது உறங்குகின்றனர். சுந்தரநாதமோ கண்ணகியைத் தான் மணஞ்செய்கிற தில்லை என்கிருன். ஆகையால், நான் காருண்யத்தின் நலத்தைக் கோருவது உண்மையா யிருந்தால், இச்சுந்தரநாதத்துக்கு அவளை மணம் செய்துகொடுப்பது என் கடமை. சீக்கிரம் இக்கடமையைச் செலுத்துவதற்கும் மேற் சொல்லிய பல விஷயங்களே காரணமாகின்றன. ஆதலின் சுந்தரநாதம் இஷ்டப்படி உடனே முகூர்த்தம் முடிப்பதுதான் காருண்யத்தின் பிதாவாகிய எனது கடமை." என்று முடிவுக்கு வந்தனர் ஷண்முகநாதர்.

ஆகவே, இப்போது மணிமங்கலத்தில் காருண்யம் மணவினையின் பொருட்டுப் பல வேலைகளும் முடிவாகின்றன. காரியதரிசி களவாடவிருந்த அவ்வளவு பெருந் திரவியமுடைய ஷண்முகநாதர், தன்னருமைப் புதல்வி காருண்யத்தின் மணவிஷயத்திற்குத் தன் பொருள் போதாதென நினைத்துச் செலவிட்டனர். சுந்தர நாதமோ, மணிமங்கலத்தார் இக்கல்யாணமே அவ்வூரில் இதுவரையில் நடந்த மணங்களிலெல்லாம் உயர்ந்தது என்று சொல்லும் வண்ணமாய் இருக்கவேண்டுமென்று, தன் உதவிகர்த்தாவின் பொருள்களையெல்லாம் கல்யாண அவசியங்களின் பொருட்டு உபயோகப்படுத்தினன். மேலும், காருண்யத்தைத் தான் அடைவது அவள் பொருளுக்

காகவல்ல, அவளுக்காகவே என்று தோன்றவேண்டும் என்னும் ஆசையினுலும், இவன் தன் பொருளோடு முன் வந்தனன். இது, தன் உண்மையான சொருபத்தைப் பிறர் அறிந்தார்கள் என்றபின், மனமே தன்னைக் காக்க முயலும் ஒரு தந்திர நினைப்பு. காரியதரிசியும் "சுந்தரம் கல்யாணத்திற்கு நான் செலவிடா திருப்பேனு?" என்று சொல்லிக்கொண்டே இருந்தார்.

முற்கூறியவற்ருல், ஷண்முக நாதர் இக்கல்யாண விஷயத்தில் காருண்யத்தின் சம்மதியைக் கேட்கவில்லையென்றும், கேட்டால் அவள் சம்மதியாள் என்று அவர் நினைத்து, அவள் சௌக்கியத்திற்காக ஏற்பாடுகள் செய்வது அவளுடைய பிதாவாகிய தம்கடமை என்று முடிவுக்கு வந்தனர் என்றும் ஏற்படும். உண்மையில் இதற்குமுன் பலகால் சொல்லியபடி, ஷண்முகநாதர், மணவினையினுல் மகிழ்ச்சி உண்டாவதற்கு அன்பு எவ்வளவு அவசியமானது என்பதை அறியார். சுந்தரநாதத்திற்குக் காருண்யத்தைக் கல்யாணம் செய்வது தம் கடமை என்று அவர் நினைப்பதின் காரணம் யாதோ எனில்: மணம் முடிந்தபிறகு காருண்யம் விஜயத்தை மறந்துவிடுவது நிச்சயம் என்றும், அப்படி மறந்துவிடுவது நிச்சயம் ஆனபோது சுந்தரநாதத்தைப் பிறகு காதலிப்பதும் நிச்சயம் என்றும், ஆகவே, அவள் பின் சௌக்கியமுறுவதும் நிச்சயம் என்றும்; இவ்விஷயங்களை அவள் இப்போது அறியாதிருக்க, தாம் அறிவதாற்ருன், இவ்விவாகத்தை அவள் சௌக்கியத்தின் பொருட்டுத் தாம் செய்வது தம் கடமை என்று அவர் உணர்ந்தது. இப்படிப்பட்ட கடமை மணங்கள் உலகிலுள்ள பெரும்பாலரான பெண்களுக்குத் தீமை புரிவனவே அன்று. காருண்யத்தைப்போன்ற சில சிறுமிகளுக்கே இவை ஆலகால விஷமெனக் கணக்கிலாத் தீங்குகள் இயற்றுகின்றன. இப்படிப்பட்ட சில சிறுமிகள் கஷ்டப்பட்டால் அது உலகத்திற்கு ஒரு பெரிய நஷ்டமல்ல என்றே மணத்தின் பெயர் கொண்டு காதல் பிறப்பிக்கும் குழந்தை மணங்களும், மணமக்கள் அறியாது மாதா பிதாக்களே செய்யும் மணங்களும், நம் தேயத்தில் நிலைத்து, நம் மதங்களுக்கே இவ்வித மணங்கள் அத்தியாவசியமாம் என நினைக்கும்படி அவ்வளவு வயிரமேறிப் பலத்துவிட்டன. அதே காரணத்தினுற்ருன் நம்மவர் உண்

மையான காதல் என்றும் ஒன்று உண்டோ? என்று ஐயப் பாட்டு பாடுகின்றனர்.

காருண்யம் விஜயம் மறைந்திருப்பதைப் பற்றி எப்போதும் சிந்தித்துக்கொண்டிருந்ததால், இக்கல்யாண விஷயம் நெடுநாள் அவளுக்குத் தெரியாதிருந்தது. தெரிந்தபிறகும் அவள் அதைத் தடுக்க முயலாமல், தான் சிந்திக்கும் தொழிலையே மேற்கொண்டிருந்தாள். ஆகிலும் ஒரு சமயம் தன் தந்தையினிடம் "அத்தான் இல்லாதபோது எனக்கெப்படி அப்பா கல்யாணம் நடக்கமுடியும்?...அத்தான் வந்தபிறகல்லவோ எனக்குக் கல்யாணம்." என்று கேட்டாள். இதற்கு அவள் தந்தை ஒன்றும் புகல வகையறியாமல், "என்ன காருண்யம்! உனக்கு என்ன சொன்னாலும் தெரியவில்லை. விஜயம் இறந்து ஐந்து மாதங்களுக்குமேல் ஆகிறது; இன்னும் நீ விஜயம் வருவானென்று நினைக்கின்றனையே! உனக்கு நான் என்ன சொல்வது!" என்று அவள் சுந்தரநாதம்பெயரைச் சொல்லாமலிருப்பது போலவே அவரும் சொல்லாதிருப்பர். உண்மையில் இப்போது காருண்யம் தனக்கு எப்படி கல்யாணம் நடக்கக்கூடும், விஜயம் இல்லாதபோது தனக்குக் கல்யாணம் என்று சொல்வது என்றால் எப்படிச் சரி என்று நினைத்தாளே ஒழிய, தனக்கும் சுந்தரநாதத்திற்கும் கல்யாணம் என்பதைப்பற்றி அவள் ஒரு சிறிதும் நினைக்கவில்லை. விஜயம் மறைந்திருக்கும் இப்போது தனக்குக் கல்யாணம் என்று சொல்வதே அவள் மனத்தின் முழுவலிமையையும் ஏவல் கொண்டது. தனக்கும் மற்ற யாருக்கும் மணம்? அந்த மணம் பொருத்தமானதா, அன்றா? என்பதை அவள் ஒரு நிமிஷமும் கருதினவளல்ல. ஆகவே அவளுக்குச் சுந்தரநாதமும் தெருவில்போகும் மற்றெவனும் ஒன்றே. சுந்தரநாதத்தினிடம் முன்பு இருந்ததைவிட வெறுப்பாவது விருப்பாவது அதிகம்கொண்டிலள். அவன் இப்போது வந்து அடிக்கடி பேச முயன்றால், மற்ற யாரிடமாவது தான் பேசுவதுபோல் அவனிடமும் விஜயம் விஷயத்தையாவது மற்றதையாவது பேசிவந்தாள். சுந்தரநாதம் இதைப் பலவிதமாக அர்த்தம் பண்ணினன்.

ஷண்முகநாதர் வீட்டில் இப்போது நடக்கும் மணத்தைப் பற்றிய விஷயங்கள் காருண்யத்தை நேருக்குநேர் சம்பந்தப்படுத்திக் கொள்ளாதவரையில் காருண்யம் அவைகளைக்

கவனிக்காமலே, தன் தந்தையிடம் எப்போதாவது தனக்கு எப்படிக் கல்யாணம் நடத்தலாம் என்று கூறுவள். ஆனல் கல்யாண நாள் குறுகினபோது, காருண்யம் நன்ருய் அலங்கரித்துக் கொள்ள வேண்டுமென்றும், முகத்தில் விசனக்குறியின்றி சந்தோஷமாய்ச் சிரித்து விளையாட வேண்டுமென்றும், விஜயத்தின்மேலுள்ள ஆசையை விட்டுவிட வேண்டுமென்றும், அவளைப் பெண்டிர்கள் பலரும் வருத்தியபோது, அவளுக்குத் தன் உண்மையான நிலைமை செவ்வனே தெரிந்தது. இனித் தான் சும்மா இருத்தல் தகாதென அறிந்து, 'இக்கல்யாணம் நடவாதிருக்க வழி தேடவேண்டும், இல்லாவிடில் நான் இதினின்றும் தப்ப எது அவசியமானலும் அதைச் செய்யவேண்டும்.' என்கிற முடிவுக்கு வந்தாள். இம்முடிவுக்கு வந்தவுடனே தன் தந்தையிடம் தன் கருத்தைத் தெரிவித்தாள். அவர் அதற்கு மாருகச் சாங்கோபாங்கமாய் சுந்தரநாதத்தைக் கல்யாணம் செய்துகொண்டு எவ்வளவு சுகமாக வாழலாமென்றும், இன்னும் கல்யாணம் ஒருவாரமே இருப்பதால், காருண்யம் பைத்தியம் கொண்ட மாதிரி ஒன்றும் தடைசொல்லக் கூடாதென்றும், காருண்யம் தம் எண்ணத்திற்குத் தடைசெய்வாள் என்று தாம் ஒருபோதும் நினைக்கவில்லையென்றும், அவர் செய்வது முழுவதும் அவள் சௌக்கியத்திற்காகவே யென்றும் தெரிவித்தார். காருண்யம் யாவற்றையும் கவனித்துக் கேட்டாள். அவளுக்குத் தன் தந்தையினிடம் இதைப்பற்றி வாதிக்க மனம் இசையவில்லை. ஆகவே பிறகு ஒன்றும் பேசாமல் கல்யாணத்தை நிறுத்த முடியாதபோது, தான் அதினின்றும் தப்ப, ஒரே வழிதான் இருக்கிறதென உணர்ந்தாள்:—

"இவ் உடம்பிற்காக ஆசைப்பட்டன்ருே எனக்குக் கல்யாணம்செய்ய விரும்புகிருர்கள். இவ் உடம்பை ஒழித்துவிட்டால், பிறகு என்னை எவரே தொந்தரவு செய்வார்கள்? இதுவரைக்கும் அத்தான் வருவார்கள் என்றே இருந்தேன். ஆனல் அத்தான் வரவில்லை. ஆனலும் என்ன? அத்தான் எப்போதாயினும் வருவார்கள். அதுவரையில் நான் இந்த உடம்பைக் காப்பாற்றலாம். "உன்னைக் கைவிடமாட்டேன்." என்று இம்மோதிரம் அளித்தகனவான் வராதிருப்பரா? ஆனல் இவர்கள் இன்னும் ஒரு வாரத்தில் மணம்பண்ணி என்னை அத்தானுக்கு இல்லாது செய்துவிடுவார்களே! அந்தோ இதுவோ

அத்தான்கதி! எவ்வளவு நாள் சென்று வரினும், எங்கே என் காருண்யம்? என்றல்லவோ வருவார்கள் அத்தான். நமக்குக் கல்யாணம் முன்பே ஆய்விட்டது என்றல்லவா மொழிந்தார் கள். இங்ஙனம் கல்யாணமான என்னை மறுபடியும் கல் யாணம் செய்ய விரும்புகிறார்களே இவர்கள் மடமை எவ் வளவு! அத்தான்! என்னால் உங்களுக்கு மனவருத்தம் வரு மென்றல்லவோ இப்பாழுடலை இவ் ஐந்து மாதமாய் வளர்க் கிறேன். இவ் உடம்பு உங்களுக்கல்லவென்று ஒரு நிமிஷம் நினைப்பேனானால் கொடும்பாவியிலும் கொடியவளன்றோ நான்? உங்களை இன்னொரு முறை கண்டுகளித்து, அங்ஙனமே இறப் பேனானால் எனக்கு அதுவே சொர்க்கம். இவ் உடம்பு மனம் முதலியவைகளெல்லாம் உங்களுக்கென அளித்தானதும், மறு படியும் எங்ஙனம் நான் இதை விற்றலும் அழித்தலும் கூடும்? இவர்கள் யாவரும் குருடர்போல் தோன்றுகின்றனர். ஒருவ ராயினும் நம் உண்மைக்காதலை உணர்ந்திலர். அத்தான்! இவ் உடம்பை நான் விற்காது இருக்கக்கூடும் வரையில் உங்களு டையதென்று காப்பாற்றுகிறேன். இதை நான் விற்க நேரி டில் நான் என்செய்வேன். இது உங்களுடையதேயாயினும் இதை இப்போது அழிப்பதல்லவோ உங்கள் சந்தோஷத்தைக் கோரும் எனது கடமை. அத்தான்! நீங்கள் இப்போது எங் கிருந்தாலும்சரி, எவ்வித நிலைமையிலிருந்தாலும்சரி, நான் உங்கள் உடைமையென்பது உண்மையானால், நீங்கள் உங்கள் வார்த்தை பிசகாத வடிவிளக்கானால், நீங்கள் உங்கள் நலத்தை யும் உங்கள் மானத்தையும் பாதுகாக்கும் புருஷனாயிருந்தால், உங்களை இவ் ஆபத்தினின்றும் விடுவித்துக்கொள்ளுங்கள். நான் பெண்பேதை: என்னால் செய்யக்கூடுவன யாவும் செய் தேன். இனிமேல் என்னால் ஆவது ஒன்றும் இல்லை. இவ் உடம்பு, இம்மனம், இவ் உணர்ச்சி, இவ் உயிர், யாவும் உங்க ளுடையன. நீங்களன்றி எனக்கு உயிர் வேறில்லை; எனக்கு வேறு உடம்பும் இல்லை; என்று சந்தேகமின்றி நான் உணர்ந்தபிற கும் நீங்கள் வந்து என்னை இவ் ஆபத்தி னின்றும் விடுவித்து ஏற்காவிடில், மற்றென்னதான் நீங்கள் செய்கிறது? ஒ ஆண் தகையே! நீங்கள் இதற்குள் வருவீர்கள்; வந்தென்னை ஏற்பீர் கள் என்றே நம்புகிறேன். இல்லையானால் இவ் உடம்பைப் பிறர் எவரும் கவராவண்ணம் செய்துகொள்வேன். அத்தான்!

இன்னும் ஒருவாரமே இருக்கின்றது. எங்கிருப்பினும் என் வார்த்தையைக் கேட்டு வருவீர்கள். என் காருண்ய விளக்கே! கல்வி யூற்றே! இன்பப் பெருக்கே! என் இறையே!" என்று காருண்யம் மனம் உருகி, தன் உடம்புக்குத் தீங்கு வருமள வும் கூடுமாயின் தான் உயிரோடிருந்து, அதை விஜயத்திற்கு ஒப்பிக்கவேண்டுமென்று உறுதிகொண்டு, நடக்கும் கல்யாண விஷயங்களை எப்போதும் போல் பார்த்துவந்தாள்.

இங்ஙனம் உறுதிசெய்து சற்றே களைப்பாறும் வேளையில், கண்ணகி தன் வீட்டினின்றும் ஓடோடியும் வந்து "காருண் யம்! அண்ணா இருக்கிறார்களாம். இன்னும் ஒருவாரத்தில் வந்துவிடுவார்களாம். இரண்டு நாழிகைக்கு முன் குறிசொல் வோன் ஒருவன் சொன்னான். இவ்வண்ணம் அப்பாவிடம் சொல்லவே, அவர்கூட இவன் சொல்வதை அறிவதுபோல் குறிகள் காட்டினர். இவன் மிகவும் கெட்டிக்காரன். விஜயம் இன்னும் ஒருவாரத்தில் வராவிடில் தான் இரு நூறு ரூபாய் இறுப்பதாகச் சொல்லுகிறான். ஆனால் அவனை எல்லாரும் நம்பவில்லை: பொய் சொல்லுகிறான் என்கிறார் கள். ஆனால் எனக்கு அவன் முகத்தைப் பார்க்கிறபோதே அவன் சொல்லுகிறது சரியென்று படுகிறது. காருண்யம், அண்ணா இங்கு வந்துவிடுவார்கள். இன்னும் ஒருவாரந்தான் இருக்கிறது. நீ கல்யாணம்—" என்று கண்ணில் ஜலந் தாரை தாரையாய் வடியக் கண்ணகி உரைத்தாள். காருண்யத்திற்கோ இது விஜயத்தைக் கண்டு பேசியதுபோல் ஆயிற்று. "அத் தான்! அத்தான்!! என் கண்ணே! எனக்கு நீங்கள் வருவது முன்னமேயே தெரியுமே. அத்தான்! என் அரசே! என் அணியே!" என்று சொல்லிக்கொண்டே கண்ணகியைப் பார்ப் பவள்போல், விஜயம் தன்னிடத்திற்கு வருவதாகவும், அவன் தன்னைப் பார்த்து, பேசமுடியாது கண்ணீர் சொரிவதாகவும், மனக்கண்ணால் நிஜரூபமாகப் பார்த்தாள். உடனே இவள், 'அத்தான் வருவார்கள்; என்னை இக்கவலையினின்றும் நீக்கு வார்கள்.' என்ற தைரியத்தால் சந்தோஷமுற்றுத் தோன்றினள். அப்போதே கண்ணகியை நோக்கி "வா, நாம்போய் அக்குறி சொல்பவனைப் பார்ப்போம்." என்று அவளை அழைத்துக் கொண்டு, இருவரும் தோட்ட வழியாய்க் கண்ணகி வீட்டிற் குச் சென்றார்கள்.

இவள் சென்றதும், சுந்தரநாதம் அதிக அவசரத்தோடு ஏதோ மனக்கலக்க முற்றவன்போல் காருண்யத்தைப் பார்க்க வந்தான். காருண்யம் இல்லாதிருக்கவே சற்று அங்கேயே உட்கார்ந்து அவளுக்காகக் காத்திருந்தான். உடனே ஷண்முகநாதர் வந்தார். அவரிடம் ஏதோ புதுவிஷயம் ஒன்றைப் பற்றிப் பேசி, சந்திரவர்மா சென்னையிலிருந்து இன்னும் மூன்று தினங்களுக்குள் வருவாரென்றும், அவர் வந்தால் தனக்கு வேறு வேலை முதலிய தொந்தரவு இருக்குமென்றும், கல்யாணத்தை இன்றைக்கு மூன்றும் நாளுள்ள முகூர்த்தத்திலேயே வைப்பது சரியாயிருக்குமென்றும், காரியதரிசி இவ்விதம் அவரிடம் சொல்லச் சொன்னாரென்றும் தெரிவித்தான். ஷண்முகநாதரும் சரியென்று வெளியே சென்றார்.

உடனே காருண்யம் வந்து சேர்ந்தாள். இவள் போவதற்குள் அக் குறிகொண்டு எதிர்கால முரைப்போன் போய் விட்டான். ஆகையால் இவள் முழு நம்பிக்கையோடும் 'அத்தான் வருவார்கள், அத்தான், என் ஆருயிர்த் தலைவன்.' என்று சொல்லிக்கொண்டு தன் வீட்டுக்கு வந்தாள்.

உட்புகுதலும், சுந்தரநாதம், இவளிடம் ஒரு பட்டுச் சவுக்கத்தைக் காண்பித்து, "இது யாருடையது?" என்றான்.

"ஓஹோ! அத்தான்! அத்தான்!! எங்கே இருக்கிறார்கள்? சொல்லும் சொல்லும்." என்று அந்தத் துணியை அவனிடமிருந்து பற்றிக் கண்ணில் ஒற்றினள்.

உடனே சுந்தரநாதம், "காருண்யம்! இந்தத் துணி நம் ஆற்றில் முப்பது மைலுக்கப்பால் ஒரு சப்பாத்தியில் ஐந்து மாதத்திற்குமுன் கிடந்ததாம். அதை அயலூரான் எவனோ எடுத்து வைத்திருந்தான். அவன் இன்று இங்கு வந்திருந்தான். நான் இதை விஜயம் அன்று, விருந்தன்றைக்கு, அணிந்திருக்கும்போது பார்த்தேனாதலால் அவனுடையது என்றறிந்து, இதைக் கொண்டு வந்தவனை விசாரித்து, சங்கதி தெரிந்து கொண்டேன். விஜயம் இறந்து வெள்ளம் அடித்துக்கொண்டு போகும்போது சிக்கிக்கொண்டது போலும் என்றான். இப்போதுதான் உனக்கு நிச்சயப்பட்டது விஜயம் இறந்தது." என்று சொல்லி, மௌனமா யிருந்தான். இப்பேச்சுக்கு இடையில் தன் தலையைக் குனிந்துகொண்டவன் இப்போது

எதிர் நிற்பவனை நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. ஆகவே சற்று நேரத்திற்குள் இவன் போய்விட்டான்.

இப்போதுதான் வானமுது அருந்தித் தழைத்துக் கொழுந்துவிட்ட செழுஞ் செடியின்மேல் இடிவிழுந்ததை ஒத்தது காருண்யத்திற்குச் சுந்தரநாதம் சொன்ன செய்தி. 'அத்தான் உயிரோடிருக்கிறார்கள்; இன்னும் ஒரு வாரத்தில் வருவார்கள்.' என்று ஆநந்தப்படும் அப்போது 'விஜயம் இறந்தே ஐந்துமாதம் ஆகிறதென்றும், அவன் அணிந்திருந்த பட்டுச் சவுக்கம் கொண்டுவந்ததே அதற்கு அத்தாட்சி என்றும் அறிந்தபோது அவளுக்கு உண்டான துக்கத்திற்கு அளவில்லை. "ஐயோ அப்படியானால் அத்தான் உண்மையாய் இறந்தே விட்டார்களோ! இறந்த பிறகுதான் என்னை மறந்து இத்தனை நாளும் வராதிருக்கிறார்களோ! அந்தோ பாவி! நான் வந்த வாறு இதுவோ? என் அத்தானுக்கு முடிவு இங்ஙனமா இருந்தது? அவர்கள் உயிர் போகும்போது என்னென்ன நினைத்தார்களோ? ஐயோ அத்தான்! அத்தான்!! அத்தான்!!!" என்று ஆற்றாது அழத் தொடங்கினாள். உடனே அப்படியே தன்னை மறந்து மூர்ச்சையானாள். சிறிது காலம் கழித்து வீட்டிலுள்ளார் வந்து அவளுக்கு உபசாரஞ்செய்ய விழித்து எழுந்தனள். தான் மூர்ச்சித்த விஷயமும் துணி விஷயமும் மறந்து, கண்ணகி சொன்ன ஜோஸியன் வார்த்தை தெளிவாய் ஞாபகத்திற்கு வந்து, 'அது சரியாய்த்தான் இருக்கும், இதில் ஏதோ சூது இருக்கிறது.' என்று நினைத்து, அந்தப் பட்டுத் துணியைத் தன்பெட்டியில் மறைத்துவிட்டு, இவ் இரு எண்ணங்களுக்கு இடையில் அகப்பட்டு ஊசலாடி வருந்தியிருந்தனள்.

## உஎ. விஜயத்தின் மன எழுச்சி.

அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில்
எந்தையும் உடையேம்; எங்குன்றும் பிறர்கொளார்:
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
வென்றெறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே.—பாரிமகளிர்.

மேற்சொன்னபடி காருண்யம் அன்பின் வெள்ளப் பெருக்கால் அலைப்புண்டு, துன்பக்கடலில் ஆழ்ந்து, வருத்தமுற்று ஏங்கும் அன்றிரவு, விஜயம் சிற்றுணவுகொண்டு தனது

கல்லறையில் சிறிதே உலாவினன். பல மாதங்களாகச் செய லற்றிருந்த அவனது அவயவங்கள் உரம்பெற்றுப் பழைய நிலைமையை ஒருவாறு அடைந்தன. விஜயம் பல விஷயங் களைப்பற்றியும் சிந்தித்தனன். களவுக்கடிதம் வந்தது முதல் நடந்தன யாவற்றையும் நினைத்தான். தனக்குத் தெரியாமல் எத்தனை விஷயங்கள் தனக்கே நடக்கின்றனவென நினைக்க அவனுடம்பு சிலிர்த்தது. இக்குறுகிய காலத்துக்குள் தன்னி டம் எவ்வளவு காரியங்கள் நிலைபெற்றனவென்றும், தான் எந்த எந்த நிலைமையை அப்போதைக்கப்போது அடைய நேரிட்டதென்றும், ஆச்சரியமும் ஒருவித மனத்தளர்ச்சியும் உற்றனன். தான் வனவிருந்தன்று மணிமங்கலத்துள்ளார் இடமிருந்து பிரிய நேரிட்டு, மீனுட்சி சுந்தரத்தால் காப்பாற் றப்பட்ட இவ் ஐந்து மாதங்களில் மணிமங்கலத்தில் நடந் திருக்கக் கூடிய விஷயங்களே மற்றெல்லாவற்றினும் அவனை அதிகமாய் வருத்தின. தன்னைப் பிரிவுற்ற காருண்யமும் தனது பிதாவும் எங்ஙனம் உயிர் வாழ்கிறுர் என்பதே அவன் மனதை விஷமெனத் துன்புறச்செய்தது:

‘‘அப்பா! நீங்கள் எவ்விதம் வருந்துகிறீர்களோ? என்னைப் பிரிந்து சுகித்து வாழ்ந்தறியா நீங்கள் நான் இறந்து பட்டேன் என்றபோது எங்ஙனம் துக்கித்தீர்களோ! தீமை ஒழித்து நன்மை கடைப்பிடிக்கும் உங்கள் மனம் எவ்வித கஷ்ட முறுகின்றதோ? அப் பெருந்தன்மையும், பேரறிவும், ஜீவகா ருண்ய சித்தமும் இவ் இடரை எவ்விதம் அநுபவிக்கின்றன வோ? அந்தோ! ஒரு நிமிஷமாயினும் தங்களிடம் சந்தேகங்கொ ண்ட நான் உய்வது எப்படி! என் கண்ணே என என்னை அன்று மார்போடணைத்து அன்பின் பெருக்கால் இன்பம் எய்துவித்த தங்கள் மாசற்ற மனத்தை நான் எங்ஙனம் போதுமானபடி. போற்றுவது?...கண்மணி! என் மணி! நீ எவ்வாறு தவிக்கின் றனையோ? இவ்வளவு இடர் தந்த நான் அவர்களுக்கு எவ்வ ளவு கடமைப்பட்டவன்!...

“என் காருண்யம் என்ன செய்கின்றனளோ? என் னென்ன நினைத்து வருந்தி அழிகின்றனளோ, என் செல்வி? ஐயோ அவளுக்கு வாய்ந்த என் பரிவின் ஏழைமை என்னே! என் ஆருயிரின் காதலுக்கு இவ் உலகத்தை ஈயினும் சரி யாமோ? விலையில்லாச் செம்பொன்னை விட்டு இங்கு உழல்

கின்றனன் இப்பாவி! இவ்வணம் பிரிந்து போவதற்கேயோ அன்று எனக்கு அவ்வெண்பட்டு அணிந்தனள். அந்தோ! அத் துணியும் இங்கிலது. இவ்உடம்பால் எத்தனை நல்லுயிர்களுக்கு இடர் கொடுத்தனன் யான்! எவ்வித கஷ்ட முறினும் தன்னைக் காப்பாற்றவேண்டும் என்று இரங்கிய அவள் பரிவை எப்படி நான் நினைக்கிறது! இவ் ஐந்து மாதங்களாகக் காருண்யத்தைப் பாதுகாப்பவன் நானே? இவ் ஏழை மதியின் நம்பிக்கையும் வலியும் எவ்வளவு பலமற்றன! எவ்வளவு செயலற்றன! அவள் மனதின் தூய்மையும், அறிவின் செம்மையும், உணர்ச்சித் திறமும், அழகின் மிகுதியும், எவ்விதம் தீங்குற்றனவோ? நான் இறந்தேனென்று நினைத்தே மனம் மாழ்குகின்றனளோ? அல்லது மறைந்திருந்து அவளிடம் விளையாடுகிறேனென்று பெருங்களிப்பு எய்த எதிர்ப்பார்க்கின்றனளோ? அந்தோ மற்றிரண்டு செயல்களுமற்று இருக்கின்றனளோ? என் மனம் ஒரு வகையும் தெரியாது உழல்கின்றதே. அந்தோ என் செயக் கடவன் யான். என் மனமாதிய அந்தக்கரணங்களையும், தேகமாதிய இந்திரியங்களையும், உனக்கே தத்தஞ்செய்த நான், இத்தேகம் முதலியவற்றிற்குச் சொந்தம் பாராட்டி உன்னிடத்தினின்றும் பிரிந்து, இங்கே தங்கி இவ்விதம் மன மயங்குவது சரியாமோ?...

"அந்தோ இதென்ன நினைப்பு! சீ. இதென்ன எண்ணம்! சிச்சீ. இக்கொடிய எண்ணம் எவ்விதம் தோன்றியது! ஓ ஓ இதினின்றும் நான் பிரிவுபடவேண்டியது. இது கொடிது; கொடிதே, பதின் மடங்கு கொடிதே. அந்தோ என்னைவிடாது போலும் இது! காருண்யம் அன்றோ இவ்விதம் புகன்றனள்? ஷண்முகநாதருக்கு நம் ஆழ்ந்த காதல் தெரியா தாகையால், 'நான் பெரிதும் பயப்படுகிறேன்.' என்றல்லவோ சொன்னாள்? ஐயோ இது உண்மையே, முற்றிலும் உண்மையே. பாவி நானிருந்தும் பயனில்லையே. சாகாது ஏனோ பிழைத்தனன் இக்கொடியன். அன்றே இறந்து பட்டிருக்கில் இவ்வளவு கொடிய விஷயத்தை நான் நினைத்தேயிருக்க மாட்டேனே. ஓ. ஓ. விஷத்தினும் கொடிது இவ்வெண்ணம். அந்தோ பிறகு காருண்யத்தின் கதி என்னே! என்னைநம்பிய அவள் கதி இதுவேயோ! அவளுக்கு அணையாய் நின்ற என் திறமும் விதியும் இவ்விதமாகவா இருந்தன!..." என்று மேலும் விஜ

யம் வருத்தமுறும் போது, அவன் கால் தளர் வெய்திற்று; மனம் மருண்டது; நிற்க வலியிலானுய் அடுத்த பெரும்பாறையின் மீது சாய்ந்து செயலற்றுச் சிறிது நேரம் தங்கினன்.

பிறகு சற்றே தன்னைத் திடப் படுத்திக்கொண்டு, "இதென்ன கொடிய நினைவு. இது என்மனமே கற்பிக்கும் ஒரு கெட்ட சிந்தையாய் இருக்கலாம். ஓ இதுமுற்றிலும் பொய்யே. மனமான மாய்கையாளன் உண்டாக்கும் மருள் இது. இதை நான் ஒரு கணமும் நம்பேன். இதைவிட காருண்யம் அன்றே இறந்தொழிந்தனள் என நம்புவேன். காருண்யம் இல்லை, காருண்யம் இருந்தாளில்லை என்று நினைப்பது இதனினும் கொடிதல்ல......ஓ பொய்யான வஞ்ச நெஞ்சமே! எனக்கு உண்மையே பகர்வாய். இவ்வளவு நேயமற்றுக் காருண்யத்தைத் துன்புறுத்தின உன்னை என்னவென நினைப்பது?... உன்னைவிட நான் நன்கு அறிவேன், அறிவேன்; காருண்யம் இருக்கின்றனள். இருந்து நான் வருவேனென்று எதிர்ப்பார்க்கின்றனள். அடக்கொணு மகிழ்ச்சி அடைவள். அடைவள். சந்தேகம் இலது...தடையிலது; காலமாயிற்று." என்று மறுபடியும் கரையிலாக் காதற் பெரு வாரியில் அமிழ்ந்து சிறிது மௌனம் சாதித்தனன்.

அப்படி ஒரு நாழிகை வரையிலும் இருந்து முற்றிய காதலின் வலியால் கொடிய எண்ணம் ஒவ்வொன்றையும் அடியோடே மறந்து "காருண்யத்தை இன்னும் சில நாட்களுக்குள் பார்ப்பேன். பார்த்து ஆநந்த சாகரத்தில் அமிழ்ந்து எழவகை அறியாது இருப்பேன்." என்று புளகமெய்தித் தன்னைச் சுற்றிலுமுள்ள இயற்கை விநோதத்தைக் கண்ணேக்கினன். சற்றே மெய் மறந்திருந்தனன். பிறகு உள்ளம் களிப்பெய்த "என்னே இயற்கையின் அமைதி! புண்பட்ட என் மனத்திற்கு இஃது எவ்வளவு ஆறுதலைக்கொடுக்கிறது. ஓ ஓ! என்னை இது தன் வயப்படுத்துகிறதே. இதன் வலியேவலி! இப்போது என் மனம் எவ்வளவு ஆநந்த முறுகிறது! இதோ சற்று நோக்கு.

"இன்று பௌர்ணமி போலும் அதோ பூர்ணசந்திரன் தன் காதற்குரியாளான உரோகிணியோடு இரகசியம் பேசுகின்றனன். திங்களின் திருநாள் இன்றே ஆகையால் அவன் தன் முழு அழகையும் காண்பித்துக் களிப்புறுகிறுன். அவன் ஆநந்தமுறும்போது உலகும் மகிழவேண்டும் என்னும் பேரவா

வினல், இவ்வணம் தன் கணக்கிறந்த கரங்களால் அமுதத்தை வாரி வாரி இடைவிடாது பெய்து, பூமியிலுள்ள துக்கத்தை நிவர்த்திக்க முயல்கின்றனன் போலும். எனில் இவன் காருண் யம் உள்ளவனே. . ஓ அதுவன்றோ அழல்மீன் என்னும் சிவ பிரான்? பிறை அணிந்த பெருமான் இவன் தன் பேரொளி என்னே! உமாவும் இதோ இருக்கின்றனள். கார்த்திகைகளால் வளர்க்கப்பட்ட காங்கேயனும் அதோ வீற்றிருக்கிறான். இவ ர்களின் நேர்மை இருந்தவாறு இதுவேயோ! அங்குத் தெரிகின் றதே தென் திசையில் அம்மீன் அகத்தியரே. உலகத்தின் ஒரு புறத்தை மேலெழாமல் காத்த இச்சிறுவனின் திறம் எவ்வளவு? ஏ ஏ பெரு நட்சத்திரங்கள் மட்டுமே இன்று வெளியேகு கின்றன. அந்தோ சந்திரிகையால் மாண்டனபோலும் மற்ற வை. எனில் இவனும் கொடியனே. வெளியுளார்க்கு நன்மை செய்து தன் இனத்தாரைக் கொல்லும் தன்மையரில் ஒருவன் போலும் இந்நிலா. ஆனல், கானில் கடுந்தவம் இயற்றிக் கரு ணைபெற்ற முனிவர்களைச் சிறிதும் அணுகான் போல் இருக் கிறது இச்சந்திரன்: இல்லையெனில், வடவானிலிருக்கும் அவ் எழுவரையும் மாய்க்காதிருப்பனே இவன். இன்று கிரகங் களில் சிலவே நிலவுகின்றன. அதோ வான் வரம்பிலுள்ள சுக் கிரன் எனக் கெப்போதும் ஆநந்தம் அளிக்கிறான். அவன் வை ரக்கல்லாய் மாறியதின் காரணம் யாதோ? இம்மீனை அசுரகுரு என்றார் தம் மன ஏழைமை என்னே? மோஹினி எனத்தோன்றி மனதை மயக்கி மகிழ்விக்கும் இதை மன்மதனின் மனதிற்கு இசைந்த இரதி என்ற கிரேக்கர்கள் எவ்வளவு உணர்ச்சித் திறம் வாய்ந்தவர்! இன்றைக்குச் சந்திரன் குருவைச் கூட அ ன்றோ அலட்சியம் செய்கிறான். இருள் வெளிச்சத்தை மறைப் பது இயற்கை; மற்று வெளிச்சமே வெளிச்சத்தை மறைக்கி றது. ஆ ஆ இவ்வானின் பெருமை என் கொல்!

"விண்ணே! விரிபெரும் விண்ணே! விமலன்
பண்ணிய யாவையும் பரிந்து தழுவும்
பாவாய்! என்நின் பசுநிறம்! என்னே
நின்னுடை! எரிகதிர் நிமலன் தன்னிலம்
என்கோ? இளநகை இயற்றுந் தாரகை
அலர்க்கும் அருநிலம் ஆவையோ? அன்றி

நீலக்கடல் தான் நீயோ? மன்பதை
ஞான்று மறைந்துந் தோன்றியும், மறையா(து)
உறையும் ஒருபெரும் நிறைவே! அதனுன்
அன்றே ஆகாய மென்றே அறிஞர்
மாட்டே அறைந்தனே? மீட்டும் மாந்தர்
கம்பளம் என்றும் கவின்குடை என்றும்
இயம்பா நிற்பர். எனின், இவ்அரும்
பெருங் குடையைப் பிறழாது
பிடிக்கும் பெம்மான் பித்தனுங் கொலோ!

''இவ்வானில் தோன்றும் இவர்களெல்லாம் உலகம் உதித்ததுமுதல் இவ்வணமே உலாவுகின்றனரோ? ஓய்வின்றித் திரியும் இவர்கள் சோர்வடையும் காலம் இல்லையோ? மனிதக்கடலில், ஓயாது எழும் அலைகளில், எத்தனை இவர்கள் கண்ணேயாது பார்த்திருக்கின்றனரோ? எவ்வெக்காலத்துள்ள எத்தனை ஜீவர்களின் மனக்கவலையை இவர்கள் மாற்றியிருப்பர்! விண்ணில் இறைந்து ஒழுங்கு இன்றிக் கிடக்கும் இவர் எவ்வளவு கணக்காய் ஓடுகின்றனர்! நீலக்கருங் கடலில் நீந்தும் இவர்களுக்குக் கை ஓய்தல் இல்லையோ? உலகத்துள்ளோர் உயிர் வாழ்க்கையிலும் இவர்களுக்கு அதிகாரமோ? இஃது உண்மையாயின், இவர்கள் எங்ஙனம் இச்செல்வம் பெற்றனர்? உலகத்தில் வாழ்ந்த புண்ணிய புருஷர்கள் இவர்கள் எனச்சொல்வதும் இதுபற்றியன்றே? . . .'' என்று இவ்விதமாய் இயற்கைத்தோற்றத்தின் வனப்பை வியந்தும், மனிதவாழ்வின் பெருமையையும் சிறுமையையும் உணர்ந்ததன் பயனுக, இயற்கைக்கும் மனிதனுக்கும் உள்ள ஒற்றுமை வேறுபாடுகளை விசாரித்தும், இயற்கையின் நினைப்பரும்தோற்றமே மனிதன் அறிவை ஓயாது தன்னிடம் திருப்பி, தன்னை அறிந்தவழி மனிதனைப் பெருங்குணங்களால் சிறப்பிப்பதை உணர்ந்தும் இருந்தான் விஜயம்.

இப்போது தன்சொந்த நிலைமையை ஒருவாறு மறந்து, உலகில்உள்ள இன்பதுன்பங்களை உணரவேண்டியவன்போல் தோன்றினன். அவனை இப்போது காதல் முதலியன முழுதும் பற்றின அல்லவாயினும், அவைகள் பின்தங்கி அவன் சிந்தித்து மகிழ்ந்தவற்றிற்கெல்லாம் தமது சாரத்தை ஈந்தே நின்றன. இச்சமயத்து மீனுட்சிசுந்தரம் உள்ளிருந்தும் வந்து விஜயத்தினிடம் சேர்ந்தனன். வந்ததும் மீனுட்சி

சுந்தரம் "என்ன விஜயம்! இம்மலைச் சிகரங்களும் காடுகளும் கற்பாறைகளும் இந்த நிலா வெளிச்சத்தில் எவ்வளவு அழகாயிருக்கின்றன. நான் முழுநிலா வருந்தோறும் இங்கு இவ்விதம் இவைகளைப் பார்த்து மகிழ்ந்தவனாயினும், இன்று உன்பக்கம் நின்று இவைகளை நோக்குவது எனக்கு அதிக இன்பம் தருகிறது. மஞ்சுமூடுவதே போல் தோன்றும் இந்நிலாவெளிச்சத்தில் நாம எவ்வளவு நம் தன்மை மாறி இருக்கிறோம்! இருள் இருப்பின் நம்மை யாரோ ஊர் பெயர் தெரியா எதிரி சூழ்ந்தது போல் இருக்கிறது. விஜயம்! நான் இதைப் பார்க்கப்பார்க்க, இந்த நிலாவை மேலுமேலும் உற்று நோக்க, எனக்கு அது ஒரு வெள்ளிக் குடம் கவிழ்ந்து ஏதோ கொட்டுண்டது எனத் தோற்றுகிறது. உனக்கப்படித் தோற்றவில்லையா?" என்றான்.

"ஆமாம் சுந்தரம். எனக்கும் அப்படியே தோற்றுகிறது. இதேமாதிரியே மணிமேகலையாரும் இன்றைக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் கற்பித்திருக்கிறார். 'வெள்ளி வெண்குடத்துப் பால் சொரிவதேபோல்.' இருக்கிறதென்றார் அவரும். இது எவ்வளவு ஆனந்தம் விளைவிக்கிறது!" என்று அக மகிழ்ந்தான் விஜயம்.

"பால் சொரிவது என்பது மிகவும் தகுதியானது விஜயம். ஆமாம் பால்போல்தான் இருக்கின்றன இவன் குளிர்ந்த கிரணங்கள். இது என்ன அழகு விஜயம்! மணிமேகலையார் என்பவர் யார் விஜயம்?" என்று தன் அறியாமைக்குப் பரிந்து கேட்டனன் மீனாட்சிசுந்தரம்.

"மணிமேகலை என்னும் நூலை இயற்றிய சிறந்த ஆசிரியர் அவர். அவரது இயற்கைப்பெயர் சாத்தனார் என்பர். இந்த நூல் தமிழிலுள்ள அரிய பெருங் காப்பியங்களில் ஒன்று. இதன் அழகுதான் அழகு. இதன் பெருமையும் அருமையும் நீ படித்து அறிந்தாலன்றி நான் சொல்வதால் விளங்கா. இது அரிய சொற்சுவையும் பொருட்சுவையும் உள்ளது. இதன் நடை செம்பாக மானது. கலப்பில்லாத பாலெனில் ஒருவாறு ஒக்கும்." என்று சொல்லி மகிழ்ந்தான் விஜயம்.

"விஜயம். எனக்கு நீ இவற்றை எல்லாம் கற்றுக்கொடு. எனக்கும் இவைகளில் ஆசை உண்டாகிறது. விஜயம் நீ என்னிடம் எவ்வளவு பட்சமாயிருக்கிறாய்! உனக்கும் கைம்மாறு

உண்டோ?" என்று விஜயத்தை மிக்க ஆர்வத்தோடும் அளவிறந்த அன்போடும் நோக்கினன் மீனாட்சிசுந்தரம்.

இடையே, மெய் அன்பு என்செயமாட்டாது என்று சிறிது யோசனையில் வீழ்ந்திருந்த விஜயம், திடுக்கிட்டு, "ஏன் சுந்தரம்! போனவர்கள் வரவில்லையே. இன்னும் என்ன செய்கிறார்கள்? மணிமங்கலம் இங்கிருந்து அவ்வளவு அதிக தூரமா?" என்றான்.

"சீக்கிரம் வருவார்களென்றே நம்புகிறேன். நாளைக்கு வந்துவிடவேண்டும். அதைப் பற்றி நீ கவலைப்படாதே! அதிகமும் நேரமாகிறது. நீ சற்றுப் படுத்து நித்திரைசெய்." என்று பரிந்தான் சுந்தரம்.

"எப்படி இருப்பினும் நாளைக்கு—" என்று விஜயம் சொல்லி முடிப்பதன் முன்னர் அவனுக்குப் பெருந் துக்கம் வந்தது. 'என் காருண்ய மணியை என்று காண்பனோ?" என்று நினைத்தபடியே உட்சென்றான். சுந்தரமும் அவனைச் சார்ந்தே சென்றான்.

## உஅ. மணம்.

பாரரசர் துணைவுரியப் பரிதவிக்கும் ஒரு தெரிவை
சேர்துவரை நகர்கருதிச் சிதை வொழிந்தாள் எனஉரைப்பர்;
ஆர் துணையும்அறஇருக்கும் அறிவிலி யான் அழைப்பதற்குன்
ஊர்தெரியேன் ஆயிடினும் உறுதிதரல் உனக்குரித்தே.—சுந்தரம்பிள்ளை.

குறிவலோன் வந்து விஜயம் இன்னும் ஒரு வாரத்தில் வருவான் என்று சொல்லி மூன்று நாட்கள் ஆகின்றன. இன்று காலையிலேயே சுந்தரநாதத்தின் கல்யாணம். ஷண்முகநாதர் தம் வீடு பந்தல் முதலியவைகளால் அலங்கரித்து அரசர் கொலு மண்டபம் என விளங்குகிறது. வாழை, கமுகு, தென்னை, பலா முதலிய மங்கல மரங்களை வரிசை வரிசையாகவும், கும்பல் கும்பலாயும் பந்தல்களின் பல வாயிற்களிலும் கட்டிக் கோட்டை வாயிலெனத் தோன்றும்படி உயரமாய் அமைந்திருந்தன. மாவிலை அசோகு முதலியவைகளாலாய நீண்ட மரகதத் தோரணங்கள் அத்தெரு முழுவதும், வீடுகளின் இடையிலும், ஆகாயத்தில் வீதியின் குறுக்கிலும், கட்டி மெல்லெனெ ஓசை எழுப்பும் இளங்காற்றிற்குச் சரியாக நடனம்செய்தன. வீட்டுவாயிலின் முன்னிருக்கும் நீண்டுயர்ந்த பந்தலின் உட்புறமெல்

லாம் பொன் வெள்ளி முதலிய சரிகைகளால் சித்திரவேலை செய்த பீதாம்பரங்களால் தைத்திருந்தன. இவைகளின் மத்தியிலிருந்து பெரிய பளிங்குத் தீபங்கள் சரஞ் சரமாகத் தொங்கவிட்டிருந்தன. பலவர்ண இரசகுண்டுகள் எங்கேபார்த்தாலும் பலவித உருவம் அமைக்குமாறு தாழ்த்தி இருந்தன. இப்பந்தலின் கீழே தரை தெரியாது விலையுயர்ந்த கம்பளங்களும் பாய்களும் விரித்திருந்தன. சுற்றிலும் எண்ணிறந்த பீடங்கள் அமைத்து, நல்லாடை உடுத்து நற்பூஷணம் அணிந்து மணத்திற்கு வந்திருந்த கணக்கற்ற ஆடவர் அவைகளில் வீற்றிருந்தனர். இப்பந்தலைச் சுற்றியும் எதிரிலும் மணிமங்கலத்துள்ள ஏழைச்சனங்களும் மற்றவரும் திரள் திரளாய் வந்து இடைவிடாது நின்றிருந்தனர். உட்புறமும் அநேகர் நின்றுகொண்டு அங்குள்ள காட்சிகளைப் பார்த்து அதிசயித்தனர். இப்பந்தலின் ஒருபுறம் பலவித வாத்தியங்கள் முழங்கின. காகிதத்திலும் இலைகளிலும் ஏனைய வஸ்துக்களிலும் சித்திரித்த பலவித புஷ்பங்களும் புஷ்பமாலைகளும் எப்பாங்கரும் அணி அணியாய்த் தொங்கின. வாசனை வீசும் மகரந்தங்களை எங்கணும் இறைத்து நிறைத்தனர் பலவித வாசனைத் திரவியங்களையும் சந்தனம் முதலியவைகளையும் வருபவர் யாவருக்கும் பலர் கொடுத்து உபசரித்தனர். விசிறிகொண்டு பலர் மணக்கோலம் பார்ப்பார் தமக்கு விசிறினர்.

இங்கிருந்து, பவழ மாலைகளாலும் முத்துச்சரங்களாலும் பலவித மணிகளாலும் அலங்கரித்து, புஷ்பச் செண்டுகளைப் பதுமைகள் கையிற்கொண்டு வீசும் வீட்டு வாயிற்படியைக் கடந்து உட்செல்வோமானால்; உள்வீடு முழுவதும் வாத்திய கோஷத்தால், தேனீக்கள் வசந்தகாலத்தில் பூவை மொய்த்து ஓயாது இரைச்சலிடுவது போல், நிறைந்திருந்தது. விலை உயர்ந்த வஸ்திரங்களையும், பூஷணாதிகளையும் அணிந்திருந்த அநேக ஆடவரும் பெண்டிரும் கீழ்விரித்த இரத்தினகம்பளங்களில் தங்கியிருந்தனர். எப்பக்கம் பார்க்கிலும் ரோஜா, மல்லிகை, சம்பங்கி, பாரிஜாதம், முதலிய புஷ்பவகைகளாலாகிய பலவித மாலைகளும் செண்டுகளும் நான்றன. அவற்றின் நறுமணம் அங்குத் தங்கும்மாந்தரின் மதியை மயக்கின. அதிக வாசனையில் ஆழ்ந்ததனால் வாசனையை அறியாதாரும் பலரே. சந்தனம், குங்குமம், பன்னீர் முதலியவைகளை அங்கு மேல்

13

ஊற்றுவதால் நனேந்து, பின்னும் சற்று உள் நுழைந்தால், அவ்வீட்டு நிலாமணி முற்றத்தில் இளமை வாய்ந்த பசும் வேய்கள் நாட்டி, பூந்தேர் எனச் சிங்காரித்து, படடு பீதாம் பரங்களால் ஆகிய சித்திர உருவங்கள் சித்திரிக்கப் பெற்ற தான மணப்பந்தல் மரகத விமானம்போல் தோன்றியது.

இம்மணப் பந்தர்க்கு எதிரே ஹோம குண்டங்களும், யக்கிய பாத்திரங்களும், மற்றும் மணக்கிரியைக்கு வேண்டிய பல வஸ்துக்களும், அதனதன் இடத்தில் அமைந்திருந்தன. இக்கிர்த்தியங்களே நடத்துவிக்கும் வேதோத்தமர் அங்கிட்ட பல ஆசனங்களில் அமர்ந்து, தீவளர்த்தல், மந்திரம்உச்சரித்தல் முதலியன செய்தே யிருந்தனர். தானம் வாங்குமாறு வந்தவர் நம் கணக்கில் அகப்படா விடினும், அவர்களெல்லாரும் இவர்களேச் சுற்றியே நெரிஞ்சி என நெருங்கினர். இவர்களனே வரையும் சுற்றி நாற்புறமும் மணமக்களின் பந்துக்களும் மித்திரர்களும் தங்கள் தங்கள் உயரிய வஸ்திரங்களிலும் ஆபரணங் களிலும தோன்றி இவைகளேக் கவனித்திருந்தனர். காருண்யமும் சுந்தரநாதமும் மணக்கோலம் பூண்டு. மணப்பந்தரின் மத்தியிலிருக்கும் நீண்ட அழகான ஆசனத்தில் ஒருவர் பக்கம் மற்றொருவராய் உட்கார்ந் திருந்தனர். இவர்களுக்குப் பின்னுளார் யாவரும் மணம்பார்த்து மகிழவந்த மகளிரே. இவர்கள் சிற்சில சமயம் இனிய பண்கள் பாடியும், மணப் பெண்ணுக்கும் மாப்பிள்ளேக்கும் சிற்சில சில்லறை விஷயங்களில் உபாத்தியாயராக அமர்ந்தும், அடிக்கடி மண மாந்தரில் யாரையாவது ஒருவரைப் பரிஹசித்தும் இருந்தனர். இக்கல்யாணக் கோலம் பார்க்கவந்தவர் அனேவரும் சந்தோஷமாகவும், உற்சாகமாகவும், கல்யாண அழகே அழகு என்று சொல்லிக் கொண்டு களிப்புற்றனர்.

ஆனல் களிப்புறுதார் சிலர் இம்மணக்கூட்டத்திலும் இருந்தனர். மணமகள் காருண்யம், 'அத்தான் வருவார்கள்.' 'அடுத்த மணிக்குள் வருவார்கள்.' 'அடுத்த நாழிகைக்குள் இவ்விடம் இருப்பார்கள். இதோவருகிற ஓசை அவர்கள் தான்.' என்று நம்பி, அவர்கள் வரும்வரை இவர்கள் சொல்லுகிறபடி செய்தலே சரியென்று, சுந்தரநாதம் பக்கத்தில் உட்காருவதற்கு மன அசங்கிய முற்று, "இது எப்படியாகுமோ? இம்மணம் எவ்வாறு முடியுமோ? அத்தான் வராவிடில் இத்தனே ஆடம்

பாங்களும் எங்ஙனம் முடியும்? மணம் போய் பிணக்கோல மாமோ?' என்று நினைத்து மெலிந்து வாடி வெளுப்புற்ற முகத்தில் விசனமும் பயமும் குடிகொள்ள இருந்தனள். தான் செய்ய வேண்டிய விஷயங்களைத் தான் ஒன்றும் கவனிக்காமலே தனக்குத்தானே இயந்திரம் என, சொன்னபடி இயற்றினள். வேகமாகக் காலடி சத்தங் கேட்கும்போதும், மற்றவர் விஜயம் என்று சொல்லும்போதும், இவள் மனமுழுவதும் அவ்வரிய ஓசையின் இனிப்பை அருந்தியிருந்தது. எதிரில் இருக்கும் தன் தந்தையையும் முகநோக்கினுள் அல்லள். அவள் ஒருவரையும் பார்க்கக்கூடவில்லை. அவள் மன முழுவதும் ஒரே எண்ணத்தாலும், ஒரே ஓசையாலும், ஒரே காட்சியாலும், ஒரே இனிப்பாலும் நிறைந்திருந்தது. அத்தான் என்ற ஒன்றே அவள் அப்போது அறிவள். மணக்கோலங்கொண்டு, இன்னுஞ் சில நிமிஷங்களுக்குள் சுந்தரநாதத்தினல் மாங்கல்யம் அணியப்படும் இவள், விஜயத்தை நினைத்து அவன் வந்து தன்னை மீட்பான் என்று தைரியங்கொள்வது என்னே! இவளுக்கு இந்த நம்பிக்கை எங்குண்டாயதோ? அடுத்த நிமிஷம் இராகுவால் பீடிக்கப்படும் சந்திரபிம்பம் இன்னும் மங்காதிருப்பதின் மாயம் என்னே? உண்மைக்காதலின் வலியை எவரே எடுத்துரைக்க வல்லார்? தெய்வத் தன்மை பொருந்திய அஃது நம்மால் வரையறுக்கப்படும் தன்மையதோ!

சுந்தரநாதமோ எனில் தன்மனங் குற்றமுள்ளது என்றும், எங்கு அக்குற்றம் வெளிவருமோ என்றும், இம்மணம் எப்போது முடியுமோ என்றும், இவ்வளவு கஷ்டமுடையதாகில் இம்மணத்திற்குத்தான் கலைப்பட்டிருப்பதே சரியல்லவென்றும் பலவித எண்ணங்கள் கொண்டு, காருண்யத்தின் முகத்தைப் பார்க்கும் வலியிலானுய், காரியதரிசியை அடிக்கடிப் பார்த்து, தைரியம் அப்போதைக் கப்போது தருவித்துக்கொண்டிருந்தான். காரியதரிசி, எதிரில், ஷண்முகநாதர் பக்கலில், ஓர் பெரிய ஆசனத்தில் விநாயகமூர்த்தி என வீற்றிருந்தனர். அவர் கறுத்த நிறமும், பருத்த தொந்தியும், பருத்து நீள மனம் வராக் கைகளும், சிறுத்தக் கனத்தமுகமும், துதிக்கை மாத்திரம் ஒன்றிருக்கில், ஊர்களில் குளக்கரைக்குப் போகும் வழியில் எழுந்தருளி இருக்கும் பிள்ளையார் அவர்களுக்கு ஒரு சிறிதும்

தாழ்ந்தவர் அல்லர் என்னலாம். அவர் அடிக்கடி சுந்தரநாதத்தோடு கண் சிமிட்டியும், சிற்சில சமயங்களில் ஜாடை காட்டியும் பேசுவது, ஷண்முகநாதருக்கே அருவருப்பாய் இருந்தது. இக்குற்றமுள்ள நெஞ்சு என்றைக்கு ஓய்ந்து கலப்பிலாக் களிப்புறும்?

ஷண்முக நாதரோ, தன்னருமைப் புதல்வி காருண்யத்தின் முகத்தைப் பார்த்துப் பார்த்து ஏங்குவர். இவருக்கும் காரணம் தெரியாது, ஒரு மணிக்கொருதரம் இவர் கண்களில் ஒரு துளி ஜலம் வந்து தங்கும். "என் மணி ஏன் இப்படி இருக்கிறுளோ? இதற்கேயோ என் ஆருயிரை இவ்வணம் வளர்த்தேன்?" என்று நினைத்து யாவும் மணமுடியில் சரியாய்விடும் என்று தன்னையே தேற்றுவர். ஆனுல் இவர் தன்னைத்தானே எவ்வளவு தேற்றிக்கொண்டாலும், எல்லாம் சரியாயில்லை, இம் மணம் குற்ற முடைத்து என்று மாத்திரம் உணராது உணர்ந்தார். காருண்யம் தன்னை நேரே நோக்காதிருப்பதே இவருக்குக் கழிபெரும் ஏக்கத்தை உண்டு பண்ணிற்று. எனினும், இவர், மண விஷயங்கள் பலவற்றுள் இம்மனக் குறையை மறைக்க முயன்றனரே அன்றித் தவிர்க்கமுடியும் என்று நினைத்தாரில்லை.

கண்ணகியோ எனில், அவள் சாதாரண உடை உடுத்துக் காருண்யத்தைச் சார்ந்து அவள் பின்புறம் அமர்ந்திருந்தனள். விஜயம் மறைந்த நாளாய், தன் தமையனின் பிரிவாற்ருமையின் துயர் ஒரு பக்கமும், தன் பிதா படும் துன்பத்துக்கு ஆற்ருத துயர் ஒருபாலும் அவளை வருத்த, அவள் தன் மான என இருந்த தோற்றம் போய், வெயிலின் கொடுமைக்கு ஆற்ருது பயந்து ஒதுங்கும் விலங்கே என்னத் தன்விதியின் வலி பொருது நைந்து, தனக்குத் துணையின்றித் தயங்கினள். அவள் சுந்தரநாதத்தின் மீது கொண்ட பிரியம் அவளை விட்டு ஒரு போதும் ஏகினதன்று. சுந்தரநாதம் முகமே 'சுந்தரநாதம்' என்பதின் முழு அர்த்தம் என்று நினைத்தவள் அவள். ஒருவனின் நாமம் ரூபம் என்னும் இரண்டனுள் நாமத்துக்கு இடந்தாராது ரூபமே எல்லாம் என்று நமது கண்ணகியைப்போல் நினைப்பவர் வெகு சிலரே. மேலும் இவள் ஒருதரமாவது சுந்தரநாதம் யாருக்காவது தீங்கியற்றப் பார்த்தனள் அல்லள். ஆகவே அவளுடைய அன்பு யாதொரு தடையும் கண்டிலது. இப்

போது இம்முகத்தன் காருண்யத்தை மணக்கும்போது, கண்ணகி விஜயத்தின் பொருட்டும், தன்பொருட்டும், காருண்யத்தின் பொருட்டும், ஆற்ருெணுத் துயரங்கொண்டாள். விஜயம் இன்னும் ஒருவாரத்தில் வந்து விடுவான் என்று நம்பினுள். ஆகவே காருண்யம் மணப்பது அவள் பேரிலும் பிசகு என்று நினைத்தாள். விஜயமும் காருண்யமும் எவ்வளவு அத்தியந்த காதலர் என்பதை இவள் அறியாதாள் அல்லள். ஆதலின் விஜயம் பிரிந்தும் காருண்யம் எவ்வளவு ஆர்வத்தோடு விஜயத்தை நேசிக்கிருள் என்பதைப் பலகால் இவள் நோக்கியபோது, தானும் அப்படியே சுந்தரநாதத்தைக் காதலிக்கிருள் என்று நினைத்தாள். ஆகவே இப்போது சுந்தரநாதம் காருண்யத்தை மணம் புரிவது அவளுக்கு எவ்வாற்ருலும் ஒத்தது அன்று. ஆயினும் அவள் சுந்தரநாதத்தைப் பெரிதும் குறைகூருள். புருஷர்கள் இங்ஙனந்தான் இருப்பர்போலும் என நினைத்தாள். விஜயம் காருண்யத்தை நேசிப்பது விஜயத்தின் பேறிவின் பயனுய் இருக்கலாம். ஆனுல் மற்ற ஆண்மக்கள் இப்படித்தான் இருப்பர் என்று நினைத்துத் தான் விசனப்பட்டும், சுந்தரநாதத்தைக் குறைகூறும் தன்மை இலாளாய் இருந்தனள்.

கண்ணகியின் பக்கல் அவள் முகநோக்கி அவள் அழகிற்கு வியப்புற்று ஆநந்தமுற்றவண்ணம் இருந்தனள், ஜமீன் இளவரசியாகிய கோகிலமும். இவளும் பெரிதும் வாடி மெலிந்த பசுங்கொடியே போன்று தோன்றினள். இவள் காருண்யத்திற்காகவும் விஜயத்திற்காகவும் கண்ணகிக்காகவும் அதிகமும் வருந்தினுள். கண்ணகியின் கண்களில் எழும் சிறு வெள்ளிய முத்துக்களை அடிக்கடி தனது அலர்ந்த செந்தாமரை இதழையே போன்ற மெதுவான கையால் துடைத்தாள். "கண்ணகி! என் செல்வி! வருந்தாதே. கண்ணகி! அழாதே அம்மா." என்று உபசரித்து வருந்தினள். கண்ணகி கோகிலத்திடம் காருண்யம் எவ்வளவு கஷ்டமுறுகிருள் என்று இரங்கியபோது, கோகிலத்திற்குத் தான் அறியாமல் கண்தகுப்பிற்று. பின்னர் "காருண்யத்தின் அறிவுக்கும் ஆழ்ந்த காதலுக்கும் கடவுள் இங்ஙனமா கருணைபுரிந்தனன்! ஐயோ விஜயம்.!" என்று கோகிலம் சொல்லும்போது, விஜயத்தையும் சந்திரவர்மாவையும் தான் முன்னொருதரம் பார்த்ததுவே போல் எதிர் நிற்பதாக எண்ணினள். அடுத்த நிமிஷத்திற்கெல்லாம் இவை

யாவையும் மறந்து, வழக்கம்போல் தன் நாயகன் எப்போது வருவானோ என்று ஏங்கினள். அவளுக்கு அணித்தாக உட்கார்ந்திருந்தாள் அவள் தோழி ருக்மணியும். இவள் கோகிலத்துடன் மெதுவான குரலில் "இந்தக் கண்ணகி எப்படி இருந்தாள் தெரியுமா அன்று வனவிருந்துக்குப் போயிருந்தபோது?" என்றாள். அதற்கு "ஐயோ பாவம்! அவள் தந்தைக்குப் பைத்தியம்; பின் எப்படி இருப்பாள் இவள்?" என்று வருந்தினாள் கோகிலம்.

இவர்கள் தவிர மணம்பார்த்து மகிழவந்தவருள் அதிகமும் கண்ணோட்டம் உள்ள சிலர் "என்ன இருந்தாலும் கல்யாணத்தன்று மணப்பெண்ணும் மணமகனும் இவ்வளவு மகிழ்வாயிருக்கலாகாது!" என்று பக்கத்துள்ள அவர்கள் நேயரிடம் சொல்லிச் சிரித்தார்கள். சிலர் "ஷண்முக நாதர் இன்றைக்கேன் சிரிப்பை இரவல் கொடுத்துவிட்டார்?" என்றார்கள். நெருங்கிய பந்துக்களில் சிலர், கண்ணகியைப் பார்தது, "முதலில் இந்தக் கண்ணகியைத்தான் சுந்தர நாதத்திற்கு என்றது. இவளும் முக விலாசத்தில் காருண்யத்திற்கு ஒன்றும் பின்வாங்கினவள் அல்லள். ஆனால் அவளுக்குக் காரணம் இருக்கிறது. ஐயோ பாவம்! அவள் தமையன இருந்தால் அவனல்லவோ இந்தக் காருண்யத்தை மணந்திருப்பான்!" என்றனர். இல்லாத சங்கதிகளை இருப்பதாகப் பாவனை பண்ணி, அப்படி இருந்தால் இப்போது இருக்கும் விஷயங்கள் எப்படி ருக்கும் என்று அவர் கேள்விகளிலும், அதற்கு அவரே சொல்லும் பதிலிலும் பெருமகிழ்ச்சி அடையும் சிலர் "நீ என்ன நினைக்கிறாய்? விஜயம் இப்போது இங்கு திடீரென்று வந்தால் இவர்கள் என்ன செய்வார்கள்? அல்லது விஜயம் இவர்களுக்குத் தெரியாமல் இப்போது இவைகளை எல்லாம் பார்த்துக்கொண்டிருந்தால் அவன் என்ன நினைப்பான்?" என்று ஒருவருக்கொருவர் கேட்டனர்.

எவரெவர் முகத்தை எவ்வணம் வைத்திருந்தாலும், எவரெவர்கள் என்ன என்ன எண்ணினாலும் கல்யாணத்தைச் செய்விக்கும் வேதவித்திகள் பந்தருக்குள் ஒரு தரம் நுழைந்ததும், தங்கள் கிருத்தியங்களை இடைவிடாது செய்தே தீர வேண்டும். அக்கினி வளர்த்து, அவன் சாட்சியாக பலவித கிரியைகளும் நடத்தியான பிறகு, தேவர்கள், ரிஷிகள், கந்தர்

வர், அச் சபையுள்ளார் இவர்கள் சாட்சியாக மாங்கல்யம் தரிக்கவேண்டிய காலம் அணுகிற்று. உதயாதி நாழிகை எட்டுக்குள், சிங்கலக்கினத்தில் முதல்பாதமே மாங்கல்யம் தரிப்பதற்கென அமைத்தநேரம். இப்போது அங்குள்ள பல கடிகாரங்களால் மணி ஒன்பது எனத் தெரிந்தது. இன்னும் அரைநாழிகைதான் இருக்கிறது. புரோகிதர்கள் 'லக்னம் ஆச்சு' 'லக்னம் ஆச்சு.' என்று வேதத்திற்குப் பதிலாய் முழங்கினர். புரோகிதர் சுந்தரநாதத்தைப் பார்த்து "இந்த மாங்கல்யத்தை இப்படிப் பிடியும். இதோ இப்பக்கம் அக்னியிடம் காண்பியும். காண்பித்தீரா? இந்த மந்திரத்தைச் சொல்லும்." என்று நீண்டு கனத்த மஞ்சள் நாணிலுள்ள பெரிய தாலியை அவர் கைகளில் ஈந்தனர். மேளவாத்தியக்காரர்களுக்குச் சைகை காட்டினர். அவர்கள் அப்போது தான் வாசித்த தன்யாசி இராகத்தினின்றும் வெறும் முடுகில் முழங்கினர். ஆசி கூறத் தகும் அனைவரிடமும் அட்சதை அளித்தனர். வேத பௌராணிகர் கிருஹ்ய சூத்திரத்தினின்றும் சில மந்திரங்களை வெகு வேகமாய்ச் சொல்ல ஆரம்பித்தனர். சுந்தரநாதம் 'எல்லாம் ஆய்விட்டது. இனி எதுவரினும் பார்த்துக் கொள்வோம்' என்று எண்ணி, மாங்கல்யத்தைக் கட்டத் தயாராய் இருந்தனன். ஷண்முகநாதர் ஒன்றும் நினைத்தார் அல்லர். கண்ணகிக்கு, சுந்தரநாதம் மாங்கல்யத்தை எடுத்துக் கட்டப் போகும்போது மின்னலென ஆத்திரம் வந்தது. காரியதரிசியார் எப்போதும் ஒரே மாதிரியே. கண்மாத்திரம் சிமிட்டுகிறார். ஜனங்கள் யாவரும் தாலி தரிக்கும் அந்த விநாடி எப்படி இருக்கும் என்று, தங்கள் கண்களை இதற்கு முன்னமே பலதரம் கொட்டிக்கொண்டு, அப்போது கொட்டாது காருண்யம் கழுத்தையே பார்த்தனர்.

அதே விநாடியில் காருண்யம், "அத்தான்! அதோ அத்தான்!!" என்று ஓங்கி இரைந்து எழுந்து ஓடுபவள்போல் ஒரு புறம் பார்த்தாள். அதற்குள் வெளிப்பந்தரினின்றும் பலரும் "வழி விடு. வழி விடு" என்றனர். காருண்யம் கதறி முடிவதற்குள், வழியில் உட்கார்ந்திருந்தவர்கள், காரியதரிசி, ஷண்முகநாதர், கார்ஹபத்யம் வளர்த்து உதவுபவர் யாவரையும் உந்து வந்து "காருண்யம்!" என அலறினன் விஜயம். இன்னும் ஒருவிநாடி: இருவரும் ஒருவரானார். ஒரு திசையாய்

நோக்கும் போது, அடுத்த திக்கில் மின்னும் மின்னல் அப் பக்கம் திரும்புவதற்குள் எங்ஙனம் மறைந்து தோன்றுமோ, அங்ஙனம் "அத்தான்" "காருண்யம்" என்ற குரல் கேட்டவர் எப்பக்கம் பார்க்கிறது என்று ஒருபுறம் திரும்புவதற்குள் விஜயனுடைய அகன்று கனத்த மார்பிடை வீழ்ந்திருந்த னள் காருண்யம். காருண்யத்தை அணைத்துக் கீழ் விழாது பிடிப்பதை விட மற்றென் செய்வனோ விஜயம்! விஜயத் திற்கு உதவிசெய்து நின்றான் அவனோடு வந்த மற்றொரு புருஷனும். இவனைப் பலரும் அவ் அவசரத்தினும் பார்த்த னர். சுந்தரநாதத்துக்கு முதலில் ஒரு விநாடி ஒன்றும் தோன்றவில்லை. கையில் எடுத்த தாலியை அங்ஙனமே நழுக விட்டான். அவனுக்கு அடுத்த விநாடியில், விஜயம், விஜயம் பக்கத்தில், காட்டில் தன் கட்டு அவிழ்த்த மனிதன் இவர்கள் இருவரும் செவ்வையாய்த் தோன்றினர். சுந்தரநாதத்தின் சுருங்கிய அறிவுகூட இவைகளின் அர்த்தத்தை உடனே அவ னுக்கு உரைத்தது. அவன் ஒன்றும் செய்யவில்லை. எழுந்து பக்கத்தில் நின்றான். காரியதரிசியைப் பார்க்கவில்லை. அவர் அநேகம் சைகை செய்தார். அநேகந்தரம் கண் சிமிட்டி னர். பிரயோஜனம் இல்லை. அவர் சுந்தரநாதம் அருகில் வந்து அவனைப் பிடித்து வலித்தார். சுந்தரநாதம் அசையவேயில்லை. உடனே அவர் சொல்லாது மறைந்தனர். அடுத்த விநாடியில் கண்ணகி வந்து 'அண்ணா! அண்ணா!! அண்ணா!!! என்று ஓடி வந்து அவனைப்பற்றி மகிழ்ந்து அழுதனள். ஷண்முகநாதர் பேசவில்லை. அவர் இவர்களை வெறிக்கப் பார்த்தனர். மற்ற யாவரும் விஜயத்தினிடமாவது சுந்தரநாதத்தினிடமாவது ஒன்றும் சொல்லவில்லை. புரோகிதர் தங்கள் சாமான் மூட் டையை இந்தச் சந்தர்ப்பத்தில் தான் அவிழாது கட்டலாம் என்று தங்கள் வேலையைக் கிரமமாக ஆரம்பித்தனர். ஜனங் கள் யாவரும் 'விஜயம் வந்து விட்டான்.' என்று இரைந்த தோடு ஏதேதோ பேசி, சமுத்திரம் சற்றுக் காருண்யம் கல் யாணத்தைப் பார்க்கவந்தது போல் பேரிரைச்சல் இட்டனர். இப்போது மற்றொரு குரல் வெளியில் கேட்டது. வழிவிடு என்றனர். ஒதுங்கு—நகர்—போ என்று எந்த மூலையிலும் கேட்டது. உடனே இளஞாயிறே போன்ற ஒரு புருஷன் 'விஜயா!' என்று அவனிடம் ஓடோடியும் வந்து அவனை

அணைத்தனன். அதே நிமிஷத்தில் அப்பந்தரின்கீழ் மற்றொரு இனிய மெல்லிய குரல் கேட்டது. உடனே கொடியே எனத் துவளும் ஓர் மெல்லிடையாள் மின்னென இவண் அடைந்து 'அத்தான்' என்று அவனைப் பற்றினள். அஞ்ஞான்று அம்மணப் பந்தர் மத்தியில் நின்ற அவ் அறுவரும் அமுதத்தை அதிகமும் உண்ட தேவர்களே போல் தோன்றினர்.

## உகூ. விஞ்ஞாபனம்.

This note of regret and of a curious longing for perfection were the chief mental impressions which I gathered from that new stage of my growth—impressions which imparted new principles to my view of myself, of men, and of God's world.—*Tolstoy.*

'விஜயம் வந்து விட்டான்.' என்கிற சத்தம் மணிமங் கலத்தின் எப்பாகத்திலும் கேட்டது. அன்று உதயாதி எட்டு நாழிகைக்குள் சிங்கலக்கினத்தில் இம்மகா மந்திரம் அவர் காதிற்படலும், மகாதேவர் "விஜயன் எங்கே? ஓ விஜயா!" என்று தம் படுக்கையை விட்டெழுந்து கேட்டார். இக் கேள்வி கேட்டு முடிவதற்கு முன் பந்தலின் நடுவண் நின் றிருந்த அறுவரும் மகாதேவர் முன்னிலையில் நின்றனர். மகாதேவர் 'அப்பா, விஜயா! என் முத்தே!' என்று தம் இளமகனை மார்போடணைத்து அங்ஙனமே திண்டில் சாய்ந் தனர். பிறகு அவர் என்னென்னவோ வாய்க்குள்ளேயே சொல்லிக் கொண்டிருந்தனர். உடனே கண்ணகி தந்தையை அணுகி "அப்பா! அண்ணா இப்போதுதான் ஓடிவந்தார்கள். இப்போது தானப்பா ஓடிவந்தார்கள்." என்று முணுமுணுத் தாள். காருண்யம் விஜயத்தை விடாது ஒரு செயலுமற இறுகிப் பார்த்தனள். சந்திரவர்மா இவர்களை ஒரே நோக்கில் பார்த் துத் தன் கோலத்தைச் சார்ந்தனர். இவர்கள் யாவரையும் முறையே பார்த்து ஆநந்தமடைந்தனன் மீனாட்சி சுந்தரம்.

காலஞ் சற்றுச் சென்றதும் ஷண்முக நாதரும் சுந்தரமும் அங்கு வந்து சேர்ந்தார்கள். இன்னும் இவர்களோடு மணப் பந்தரில் இருந்த உறவின் முறையார்களில் பெரியரும், ஏனைய சான்றோரும் மகாதேவரிடத்துக்கு வந்து சேர்ந்தனர். மகா தேவர் சற்று இளைப்பாறியதும் இவர்கள் யாவரையும் பார்

த்து "வாருங்கள், உட்காருங்கள், எனக்கு உடம்பு நல மாயிற்று. 'விஜயம் சென்றான்.' என்ற விஷத்திற்கு 'விஜ யன் வந்தனன்.' என்றதே சஞ்சீவி." என்றனர். என்றலும் விஜயம் எழுந்து, யாவரையும் உபசரித்து, கூடத்திலுள்ள பல ஆசனங்களில் அமர்த்தினன். முன்னொரு அத்தியாயத் தில் விவரித்த இக்கூடத்திலுள்ள பலவித ஆசனங்களில் வந்தவர் அனைவரும் அமர்ந்தனர். மகாதேவர் மத்தியிலும் அவர் பக்கல் ஷண்முகநாதரும் இருந்தனர். இவர்களுக்கு எதிரிலுள்ள இரு ஆசனங்களில் சுந்தரநாதமும் மீனாட்சி சுந்தரமும் உட்கார்ந்தனர். விஜயமும் சந்திரவர்மாவும் இவர் கள் பக்கத்துள்ள பீடங்களில் அமர்ந்தனர். காருண்யம், கண்ணகி, கோகிலம் ஆகிய இம்மூவரும் வலதுபுறத் துள்ள அறைப்பக்கம் சிறிது மறைவாய் நின்றனர். மற்றுள்ள யாவரும் இவர்களுக்கு இடையிலும் இவர்களைச் சுற்றிலும் அவரவர் நிலைமைக்குத் தக்கபடி வீற்றிருந்தனர். இவர் கள் பலருள்ளும் யாவர் மனமோ இந்நிமிஷத்தில் சிந்தனை அற்றிருந்தது?

அப்போது மகாதேவர் "விஜயா! உன்னைப் பார்க்க வந் திருக்கும் யாவருக்கும் வந்தனம் செய். நீ இவ்வளவு நாள் மறைந்திருந்ததற்குக் காரணமும் சொல் விஜயா!" என்று சொல்லி யாவருக்கும் தாம் மிக்க நன்றி பாராட்டுவதாக வும் சொன்னார். விஜயம் உடனே சுருக்கமாய், வனவிருந் தன்றைக்குத் தான் எப்படியோ மயக்கமுற்று உணர்ச்சி அற் றுப்போக, சுமார் ஐந்து மாதங்கள் கழிந்த நினைவு வந்த தென்றும், அதுவரையில் தான் தனக்கடுத்துள்ள இப்புருஷ னால் காக்கப்பட்டான் என்றும் சொல்லி, "இவர் பெருந் தன்மை என்னால் சொல்லும் திறமன்று." என்று வியந்து உட்கார்ந்தான். அப்பொழுது யாவருடைய கண்களும் மீனாட்சிசுந்தரம் பால் திரும்பின. காருண்யம் "எனக்கு மாங்கல்யபிச்சை அளித்த மகான் இவரோ!" என்று அவனை நோக்கிக் கைகூப்பி "அவர் நீடூழிவாழ்க" என்று மனதில் பிரார்த்தித்தனள் இதுவரை மீனாட்சி சுந்தரத்தை அறி யாதவர் போலிருந்த மகாதேவர், "சுந்தரம் உனக்கு நாங் கள் ஒரு கைம்மாறும் செய்ய வல்லோமல்லேம். கடவுள் உனக்கு அருள்புரிவாராக." என்று சொல்லி அந்தப் பரம்

பொருளை நோக்கிக் கைகூப்பினர். பிறகு ஒன்றும் பேசா தொழிந்தனர். 'சுந்தரம்' என்று மகாதேவர் கூப்பிட்டுச் சொன்னது விஜயம் தவிர மற்றவர்களுக்குச் சரி யென்று தெரியாததினால், மகா தேவருக்கு இன்னும மனம் தன் நிலைமையை அடையவில்லை யென்று கருதினர் அவர்கள்

பிறகு யாவரும் மீனாட்சிசுந்தரம் இப்போது என்ன சொல்லப் போகிறாரோ என்று எதிர்ப்பார்த்தனர். மீனாட்சியும் ஏதோ பேச முயன்றனன். ஆனால் அதற்குள் சுந்தரநாதம் எழுந்து நின்று மகாதேவரையும் மற்றுமுள்ள யாவரையும் நோக்கிக் கைகூப்பிய படியே, "நான பேதை; அறிவிலன் என் விஷயமுழுவதும கேட்டு என்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்." என்று வேண்டினன். (ஷண்முகநாதர், இங்கு, மறு டியும் சுந்தரன் காருண்யத்தைக் கேட்கிறான் என்று பயந்து கெட்டியாய் வாயை மூடினர்) அவன் கண் ததும்புதலைக் கண்ணகி கண்டு ஆற்றாது மனநொந்தாள். மகாதேவர் இருந்த வண்ணமே இருந்தனர். அவர் காருண்யத்தின கல்யாண விஷயம் ஒன்றையுமே அறியார் ஆதலால் என்ன சொல்லுகிறான் சுந்தரன் கவனிப்பேம என்றிருந்தார். சந்திரவர்மாவும் ஆச்சரிய முற்றனர். மற்ற யாவரும் இது என்ன இவர் இப்படி மனம் வருந்துகிறாரே ஐயோ பாவம்! என்று சுந்தரநாதத்திடம் பச்சாத்தாபங் கொண்டனர்.

உடனே சுந்தரநாதம் தன்னைத் திடப்படுத்திக்கொண்டு மெதுவான தனது புருஷக் குரலில்:—தான், எப்படி, மகாதேவர் வீட்டை விட்டுக் காரியதரிசி வீட்டை அடைந்த அளவில், தனக்கு அதற்கு முன் நல்லதென்று தோன்றியது எல்லாம் கெட்டதாக மாறியது என்றும்; எப்படி, தான் ஷண்முகநாதருடைய பொருளுக்காகவும் காருண்யத்தின் அழகுக்காகவும் ஆசைப்பட்டு, அவர்களிடம் அதிக உபகாரியாய்த் தோன்றி அவர்கள் அன்புக்குப் பாத்திரமாக வேண்டும் என்று எண்ணினான் என்றும்; எப்படி, அவ் எண்ணத்தை நிறைவேற்றத் தான் காரியதரிசியை யோசனை கேட்ட போது, அவர் பொய்க்களவாடலா மென்றதும், (இங்கு ஷண்முகநாதர் பாக்கத் தம் வாயைத்திறந்தார். சந்திரவர் ா திடுக்கிட்டனர்.) தான் களவுக் கடிதம் எழுதலாமென்று சொல்லி, அவ்வண்ணமே செய்தான் என்றும்; பின், எப்படி, குறி

தத தேதியில் போய்ச் சிலர் பொய்க் கொள்ளையிட, தான் சம யத்துக்கு வந்து உதவுபவன் போல் அதைத் தவிர்ப்பதாகப் பாவனை செய்ய விரும்பி எதிர்ப்பார்த்தான் என்றும்; ஆனால், எப்படி, காரியதரிசி தனக்குத் தெரியாமல் உண்மை யிலேயே திருடவேண்டும் என்று நோக்கம் வைத்திருந்ததாகப் பிறகு ஏற்பட்டது என்றும்; (இங்கு மகாதேவர், சுந்தரம், விஜ யம் தவிர மற்ற யாவரும் திடுக்கிட்டுக் கண்ணை விழித்துச் சரியாய் உட்கார்ந்து எப்பக்கமும் நோக்கினர்.) ஆனால், எங்ஙனம், தான் குறித்த தினம் களவாட வந்தபோது, தானும் காரியதரிசியின் கள்வரில் இருவரும் தனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் அவரால் பிடிக்கப்பட்டனர் என்றும்; (இப்போது சந்திரவர்மா ஷண்முகநாதர் முதலிய யாவரும் மீனாட்சி சுந்தரத்தை நன்கு பார்த்து, ஊர் பெயர் தெரியாத இவர் யாவரா இருப்பர் என்று ஐயமுற்றனர்.) எப்படி, தானும் தன்னைச் சேர்ந்த மற்றிருவரும் அவரால் அடுத்த காட் டிற்குக் கொண்டுபோய், தங்கள் உண்மையை அவர் உணர்ந் தார் என்றும்; எப்படி, அவர் உணர்ந்த அப்போதுதான் தனக்கு உண்மையில் காரியதரிசி திருட்டுத் தொழிலுடைய வர் என்றும், தன்னை ஏமாற்றி, உண்மையில் ஷண்முகநாதரை அவர் வெகுநாளாகக் கொண்ட எண்ணப்படி, அன்று திருட விருந்தார் என்றும் ஆட்களால் தெரியவந்தது என்றும்; எப்படி, தனக்கருகிலிருக்கும் அவரே இனிக் காரியதரிசியி னிடஞ் சேரக்கூடாதெனவும், மகாதேவர் ஷண்முகநாதர் முத லிய எவர்க்கும் ஒரு தீங்கும் இயற்றாமல் அவர்களைச் சார்ந்து வாழவேண்டுமெனவும், (ஷண்முகநாதர் இங்கு அவருக்கு எவ் வளவு வெகுமதி தாலாமென்று சிந்தித்தார்.) இல்லாவிடில், அவர் இக்களவு விஷயத்தை வெளிப்படுத்தி, மணிமங்கலத்தா ருக்கு என் மானமில் நடத்தையைச் சொல்லுவதாகப் பய முறுத்தினார் என்றும்; தனக்கு எப்படி, அவரை இன்னா ரென்று தெரியாதபோது. ஒருகால் காட்டுமயிலூர்க் காளி கூட் டத்தில் சம்பந்த முடையவராய் இருத்தல் கூடும் என்று தான் நினைத்தான் என்றும்; (யாவரும் திடீரென்று நடுங்கி மயிர்க்கூச் செறிய மீனாட்சிசுந்தரத்தை மிரண்டு பார்த்தனர். சிலர் தம் கால்கள் ஓடுவதே போன்று தோன்றின. வர்மா அவனைச் செவ்விதும் நோக்கினர். மீனாட்சி மனங் குன்றின

னேனும் சாதாரணமா யிருந்தனன்.) பிறகு, எவ்வணம், தான் சந்திரவர்மா சென்னையிலிருந்து பெரிய ஜமீனுக்கனுப்பிய கடிதவிஷயத்தைத் தனக்குத் தெரிந்தவரையில் அவருக்கு உரைத்தான் என்றும்; (கோகிலத்துக்கு இங்கு துக்கம் வந்து சந்திரவர்மாவையே நோக்கினள்.) மறுபடி, எப்படி, காரியதரிசி தான் சொன்னதை யெல்லாம் மறுத்துத் தப்பித்துக்கொண்டு, தன்னையே களவுக்குக் காரணமென்று வெளியிற் சொல்லி விடுவதாகப் பயமுறுத்தி, தன்னை அவர் வயப்படுத்தினரென்றும்; (சந்திரவர்மாவின் செவ்விய உதடுகள் "சண்டாளன்!" என்று சொல்வதுபோல் அசைந்தன)
மற்றும் தனக்கு, எங்ஙனம், விஜயம் தன் ஈன சம்பந்தத்தை அறிந்தானென்று அவனிடம் சந்தேகம் உண்டாயிற்று என்றும்; பிறகு, எப்படி, தான் விஜயத்திற்கும் காருண்யத்திற்கும் கல்யாணம் எனக் கண்ணகியால் அறிந்தான் என்றும்; (கண்ணகி ஐயோ! ஏன் அவனிடம் நான் பேசினேன் என்று தன்னையே வெறுத்துத் தானறியாமல் கைவிரலைச் சுந்தரம் பக்கல் நீட்டினள்.) அறிதலும், எப்படி, தான் எடுத்த காரியத்தை முடிக்கவேண்டுமென்று காரியதரிசி தூண்ட, தனக்குக் கறுப்பன் என்பவனால் தெரிந்த ஓர் தந்திரத்தைக் காரியதரிசியிடம் சொன்னான் என்றும்; அப்போது, எப்படி, காருண்யத்திற்கு வாங்கிவரும் கிண்ணத்தோடு விஜயத்திற்கும் வேறு வகைக் கிண்ணம் ஒன்று வாங்கி வரலாமென்று அவர் சொன்னார் என்றும்; பிறகு, தான், எப்படி, ஓர் நாள் நள்ளிரவில் மந்திரவாதியிடம் போய்க் கோரிய மருந்துகள் வாங்கி வந்தான் என்றும்; அவைகளை, எப்படி, தக்க சமயம் பார்த்து, வனபோஜனத்தன்று கண்ணகி மூலமாய் முறையே விஜயத்திற்கும் காருண்யத்திற்கும் கொடுப்பித்தான் என்றும்; (இங்கு கண்ணகியின் கரி விழியும் பெரிய நயனம் எரிந்து சிவந்தது. தான் புருஷனாயிருக்கில் என்னதான் இப்போது செயமாட்டாள் என அவள் நினைக்க மனங்கொதித்தது.)
பிறகு, எங்ஙனம், விஜயம் காணாமற்போனபோது, அவன் தான் கொடுத்த விஷமருந்தால் மாண்டு (இப்போது மகாதேவர் இருதயம் படபடத்து ஒரு விநாடி அவர் கண்களில் கோபம் பொறி பறந்தது.) வெள்ளத்தால் கொண்டுபோகப் பட்டிருப்பன் என்று நிச்சயம்செய்தான் என்றும்; பின்,

எப்படி, தான் காரியதரிசி சொன்னபடி விஜயம் காணுமற் போன விஷயத்தைக்குறித்துச் சந்திரவர்மாவுக்குச் சென்றிருக்கவேண்டிய கடிதங்களை யெல்லாம் பலவித சூழ்ச்சியால் அழித்துவிட்டான் என்றும்; (வர்மா, இந்த கண்கள் கொவ்வையெனச் சிவக்க, வெருண்டு அவனை நோக்கினர்.) அப்பால், எப்படி, காருண்யம் தன்னை நேசிக்கிருள் எனத் தான் நம்பினுன் என்றும்; அதற்கு, எவ்வணம், ஷண்முக நாதருக்குச் சொல்லி, அவரைக் கல்யாணத்திற்கு இணங்கச் செய்தான் என்றும்; பிறகு, எப்படி, கல்யாணம் முடியும் தறுவாயில் விஜயம் இன்னும் ஒரு வாரத்தில் வருவான் என்ற ஜோஸ்யம் தன்னை வருத்தியது என்றும்; பிறகு, எப்படி, தான் விஜயம் வனவிருந்தன்று அணிந்திருந்த பட்டுச் சவுக்கத்தை அந்த ஜோஸ்யனிடமிருந்து கைக்கொண்டு, அதையே காருண்யத்தினிடம் விஜயம் இறந்ததற்கு அத்தாட்சியாகக் காண்பித்தான் என்றும்; (காருண்யம் "எனக்கு உண்மை எப்படியோ தெரிந்துவிட்டது அப்போதே." என்று தன் விரலிலுள்ள மோதிரத்தைக் கண்ணில் ஒற்றினள்.) அப்போதே, எப்படி, அவனேடிருந்த மற்ருேர் ஆள் காரியதரிசியால் அவர் தம் இருட்டறையில் அடைபட்டிருக்கிருன் என்றும்; (விஜயம் மீனுட்சிசுந்தரமும் இங்கு ஒருவரை ஒருவர் நோக்கினர்.) பிறகே, தான், எவ்வணம், கல்யாணத்தைக் குறித்த நாளுக்கு முந்தியே வைத்துக்கொண்டான் என்றும்; அஃது, எப்படி, இன்று முடிந்ததென்றும்; சாங்கோபாங்கமாய்ச் சொல்லி சபையில் நிற்கச் சக்தியின்றி "என் தீமை மலை பெரிது. நான் முழு மூடன். இதுவே நான் காரியதரிசியை அடைந்ததன் பயனும். என்னை இப்போது மன்னிக்க முடியுமானல் மன்னியுங்கள்." என்று மேலும், பெரிதும் தளர்ந்து அசைவுள்ள அழுகுரலில் இரங்கி, நிமிர்ந்து பார்க்கும் சக்தி ஒழிந்து, கண்ணீர் வடிந்தோட மகாதேவர்க்கு எதிரில் விழுந்து வணங்கினுன்.

இப்போது எவரும் ஒன்றும் சிந்தித்திலர். இருவர் தவிர மகாதேவர் உட்பட்ட மற்ற யாவருக்கும் சுந்தரநாதம் இவ்வளவு வஞ்சகன், இத்துணைக் குணமிலாக் கொடியன், என்பது இப்போதுதான் தெரியவந்தது ஆனல் என் செயலாம்? குற்றம் எவ்வளவு பெரியதாயினும், குற்றவாளி எவ்வளவுஇழி

வானகுணமுள்ளவனுயினும், எதிர்த்தோன்றும் துன்பத்துக்கு மனிதப்பிறப்பு வருந்துவது வழக்கே. சுந்தரநாதம் பெருங் குற்றவாளி, கன்னெஞ்சுடையவன், துரோக சிந்தனை யுடையவன் என்று தெரிந்த அதே நிமிஷமே, அவன் முகம் அவனை அக்குற்றங்களுக்காக வருந்தும் நெஞ்சு உடைய னெனக்காட்டிற்று. அவன் குற்றங்களை முழுதும் உணர்ந்து அவற்றின் தீமைகளை அவர்கள் உணருமுன், சுந்தரநாதத்தின் கண்ணீர் ஆற்றுப்பெருக்கெனத் தோற்றியது. ஆகவே பலர் அவனிடம் கொடிய கோபம் கொண்டனர் ஆயினும் பொதுவாய் பச்சாத்தாபம் மேலிட்டது. சிறிதுநேரம் மௌனமாயிருந்து, பின் மகாதேவர் "எவ்வித குற்றத்திற்கும் இயற்கை அன்பினரான கடவுளிடம் மன்னிப்பு உண்டு. நீ உன் மனமார வருந்துவையேல் கடவுள் உன்னையும் மன்னிப்பார். செய்த குற்றங்களுக்காக நீ வருந்துவது மிகவும் சரியானதே. நீ விஜயத்திற்குச் செய்த துன்பத்தினை நான் மன்னித்தேன். ஷண்முகநாதரிடம் மன்னிப்புக் கேள் சுந்தரம்!" என்ருர். அங்கிருந்த பலரும் பலப்பல எண்ணினர். சந்திரவர்மா மட்டும் "ஆஹா என்ன குணம்! இஃதெவ்வளவு சிறப்புடைத்து!" என்று தம்முள்ளே சொல்லினர். உடனே ஷண்முகநாதர் "யாவும் மகாதேவரிடம் எனக்கென்ன தெரியும்!" என்று திரும்பிக் காருண்யத்தைப் பார்த்தனர்.

இது முடிவதற்குள், மீனுட்சிசுந்தரம், தன் இருக்கையினின்றும் எழுந்து நின்று, தனக்குத் தெரிந்த வரையில் தன் சரித்திர விவரத்தைச் சொல்லி, பின் மகாதேவரைச் சந்தித்துத் தனது உண்மைச் சம்பந்தத்தை உணர்ந்ததாகவும்; பிறகு விஜயம் ஒரு நாள் தனது கற்குகைக்கு வந்து களவுக் கடிதத்தைப் பற்றி விசாரித்ததாகவும்; மறுபடியே தான் இவ்விஷயத்தில் ஊக்கங்கொண்டு ஜமீன் கள்வரைப் பிடித்ததாகவும்; மேலும் தான் மணிமங்கலம் உடனே வாராததற்குத் தான் சுந்தரம் சொன்னதைக் காரணமாகக் கொண்டதாகவும்; பிறகே தான் முன்னரே மகாதேவர்க்கு வாக்களித்தவண்ணம் தன் கூட்டத்தாரைக் கலைத்ததாகவும்; அதற்குப் பிறகு தானும் விஜயனும் ஒன்றுசேர ஐந்து மாதம் குகையிலிருக்க நேர்ந்த தாகவும்; அப்புறம் அவர்கள் மாறுவேடம் பூண்ட தன் இரு ஆட்களை அங்குள்ள விஷயங்களை அறியவும், விஜயம் சீக்கிரத்தில்

வருவானென்பதை மாறுபாடாய்த் தெரிவிக்கவும் மணிமங்கலத்திற்கு அனுப்பினதாகவும்; ஒற்றுடையை அவர்களிடம் அனுப்பி அதன் மூலமாய்க் காருண்யத்தை அணுகிச் சமாசாரம் முழுவதும் தெரிய விரும்பினதாகவும்; பிறகு அந்த இருவரில் ஒருவனுன காரியதரிசியின் ஆள் அவரால் வயப்படுத்தப்பட்டு அவ்வொற்றுடை மறைபட்டதையும், கல்யாண விஷயத்தையும், கேட்டதும், ஓடோடியும் வந்து, தக்க சமயத்தில் அவ்விடம் வந்து சேர்ந்ததாகவும்; சொல்லி முடித்து, "நான் இழிதொழிலே வகித்திருந்தேனை. எனக்கும் மன்னிப்பு உண்டோ?" என்று வாய் குளறக் கேட்டான்.

எனவே, அங்குள்ள யாவருக்கும் அவனிடம் மரியாதையும் மரியாதையோடு கலந்த சிறு பயமும் உண்டாயின ஆயினும் அவன் விதி என்னேயென்று மனமயங்கிக் கூச்சலிடாதாரிலர். இவனிடம் சிநேகம் கொள்வது தமது முதற்கடமை என்று எண்ணுதார் அங்குள்ளவரில் வெகு சிலரே. விதியை மதியால் வென்ற இவனன்றே புருஷன் என்றனர் யாவரும்.

உடனே மகாதேவர், மீனுட்சி சுந்தரத்தின் வரலாறு முழுவதையும் விஜயத்திற்கு அறிவித்த மாதிரி அங்குள்ள யாவருக்கும் சுருக்கமாய்ச்சொல்லி, எப்படி சுந்தரநாதமும் சுந்தரமும் நெருங்கிய உறவினர்கள் என்றும் கூறினர்.

மகாதேவரால் யாவையும் சொல்லக் கேட்ட சண்ணகி காருண்யம் முதலானோரும், ஷண்முகநாதர் வர்மா முதலியவரும், மீனுட்சி சுந்தரத்தின் விதிக்கு ஆற்றாது நொந்து கண்ணீர் சொரிந்தனராயினும், அவனே அப்போது நேரிலிருப்பதால் என்றும் அறியா ஒருவித இன்பமும் மனக்கிளர்ச்சியும் அப்போது அநுபவித்தனர்.

உடனே சந்திரவர்மா எழுந்து, தமக்கு விஜயம் மறைந்த விஷயமும், மகாதேவர் அக்கால முதல் மனமிழந்த சங்கதியும், ஐந்து நாட்களுக்கு முன்னரே தான் சுந்தரத்தின் மணவினை சம்பந்தமான ஒரு கடிதத்தால் தெரிந்ததாகவும்; தாம், சில மாதங்களுக்கு முன் விஜயம் 'காளி விஷயம் என்னுடையது.' என்று எழுதியது முதல் அக்கவலையைவிட்டு,வேறு சில ஜமீன் அரசாட்சி காரியங்களைப் பற்றிய முயற்சியில் எங்கெங்கேயோ போயிருந்ததாகவும்; காருண்யத்தின் மண விஷயம் கேள்விப்

பட்டபோதுதான், தாம் ஓடோடியும் வந்ததாகவும்; வந்து விஜயம் அவன் காதலியோடு மணப்பந்தரில் இருக்க அளவில்லா ஆநந்தம் எய்தியதாகவும்;சொல்லி, "விஜயத்தினிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன். இனி நீங்களும் என்னைமன்—" என்பதற்குள் மகாதேவர் "என்ன!" என்று அதிசயித்தார். பிறகு வர்மா, மீனாட்சிசுந்தரத்துக்குத் தாம் தம் ஜமீனின் பாதுகாப்புத்தலைமை உத்தியோகம் அந்த நிமிஷமே தம் தந்தையின் அநுமதி கொண்டு அளிக்க விருப்புடையராய் இருக்கிறதாகத் தெரிவித்தார். மீனாட்சி சுந்தரம் மகாதேவரைப் பார்த்தான். விஜயம் மனமகிழ்ந்தான். உடனே மகாதேவர் "ஆஹா அப்படியே செய்யுங்கள்: உங்களுக்கு நாங்கள் அதிகக் கடமைப்பட்டிருக்கிறோம்." என்றார். அடுத்த விநாடியில், வர்மா, மீனாட்சி சுந்தரத்தை நோக்கி, "உம்முடைய முதல் வேலை உமக்கே தெரிந்திருக்கும். ஜமீன் காரியதரிசி வயமிருக்கும் உமது ஆளொருவனை விடுவிப்பதோடு, அவர் உள் ஆட்களையெல்லாம் பிடித்து அவர் கழிபெருங்குற்றத்தை அங்கை நெல்லியென நிரூபிக்கவேண்டியது உமது கடமை." என்றார்.

உடனே ஜமீன் பாதுகாப்புத் தலைவரும் "ஆஹா அப்படியே." உங்கள் கட்டளையை நிறைவேற்ற முயல்கிறேன். என்றார்.

வர்மாவும் "நான் ஆறுமாதத்திற்குமேல் சென்னையிலிருந்தாலும், துரைத்தன ஏற்பாட்டால் மட்டும் இது முடிவது அசாத்தியம் என்று முடிவுக்கு வந்த இக்காரியத்தை முடித்ததற்காக, விஜயத்திற்கும் மீனாட்சி சுந்தரத்துக்கும் ஜமீன் மிகவும் கடமைப்பட்டிருக்கிறது." என்றார். மீனாட்சி தலைவணங்கி உள்ளெழுந்த சிறு மனவாட்டத்தை அடக்கினன்.

உடனே மகாதேவர் சுந்தரநாதத்தை நோக்கி "கொலை, களவு, சூது, காமம், முதலியவற்றின் பயனை நாம் இதுவரையில் கேட்ட விவரம் எவ்வணம் நிரூபிக்கிறது! காரியதரிசி இவ்வளவு செய்வாரென்று கனவிலன்றிப் பிறிது நினைத்தேனல்லேன்." என்று மனம் முறிந்து மொழிந்தார்.

ஷண்முகநாதர் பேசினர் அல்லர்; மகிழாதாரும் அல்லர்; காருண்யத்தையும் விஜயத்தையும் முறை முறையே பார்த்து ஆநந்தியாதிருந்தாரும் அல்லர்.

உடனே விஜயம், சுந்தரநாதம், மீனாட்சிசுந்தரம், வர்மா இந்நால்வரும் ஒருவரை ஒருவர் எஞ்ஞான்றும் பிரியாப் பெற்

தியர் என வாய்குளறி ஆர்வத்தோடு ஒருவரை ஒருவர் தழு வினர். மகாதேவருக்கு இஃதொரு தெய்வக்காட்சி போன்றது. மகாதேவர் பிறகு காருண்யத்தைத் தம் அருகில் அழைத்து

"இன்றுணை மகளிர்க் கின்றியமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வமல்லது
பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்." *

என்று தமது செழுமைவாய்ந்த குரலில் உரைத்து நினைப்ப ரும் மகிழ்ச்சி அடைந்தார்.

பிறகு மீனாட்சியை அருகிலழைத்து "சுந்தரம்! நான் என் சோமுவோடு இப்போது பேசுவதுபோல் இருக்கிறது. அந்தோ எவ்வளவு அறிவு மண்ணில் மறைந்தது! கடவுள் உனக்கு அருள் புரிவாராக." என்று ஆசீர்வதித்தனர்.

கோகிலத்திற்கு இவ்விஷயங்கள் முழுதும் செவியேறு தனவாக "என் அத்தானிடம் யாவும் தெரிவேன். ஏனோ அவர் இன்னும் இங்கு இருக்கின்றனர்?" என்று வருந்தினள்.

சுந்தரநாதத்தின் வஞ்சனை அனைத்தும் ஒன்றும் விடாது கேட்ட கண்ணகி மனம் பொருது பொங்கினள். அமுதம் என நம்பிய ஒன்று படுநஞ்சாகில் மனிதப்பிறப்பு பொறுக் கும் வலியிலது.

"இம்முகமா இவ்வளவு வஞ்சனையை உள்ளடக்கியிருந் தது! இந்நரகமா சொர்க்கமெனக் காட்டிற்று! தேவனின் உருக்கொண்ட அரக்க ஜன்மமா இது! ஏ. ஏ. எவ்வளவு வஞ் சனை! எவ்வளவு சூது! எவ்வளவு கொடிய நெஞ்சம்! அந்தோ அண்ணு அன்றே அன்றே இறந்திருப்பார்கள்! இம்மான மிலான் எங்ஙனம் இது செயத் துணிந்தான்? ஓ ஓ இவன் பாவி. இவன் படுதுரோகி. சண்டாளன் இவனே. என்னைக் கொண்டே தீங்கியற்றினன் இக் கொலைமகன். இவனுக்கு எரிநரகன்றி மற்றியாது கதி? காருண்யத்தைக் கெடுக்க நினைத்த கயவன் இவன் என் செய்யான்! இவன் ஒருவர் அன்புக்கும் உரியனல்லன். என் அன்பை நஞ்சாக்கினனே! அந்தோ! அந்தோ! நான் அறிவிலி. ஒருவித ஆற்றலும் இல் லாதவள். நான் பேதைப்பெண்." என்று மனமிரங்கி வருந் தினள்.

---

* - சிலப்பதிகாரம்.

சிறிதுநேரங் கழித்து மகாதேவர் அவனை மன்னித்ததை யும் விஜயம் வர்மா முதலாயினோர் அவன் மாட்டு அன்பு பூண்டு ஒழுகுவதையும், மேலும் அவன் கண்களில் இன்னும் கண்ணீர் சொரிந்து முடிவுபெறாததையும் கவனிக்க அவள் மனம் மற்றோர் எண்ணக் கால்வாயில் இடர்ப்பட்டாயினும் ஓட ஆரம்பித்தது:

"நான் என்ன செய்தேன்? என்னைப் பார்க்க நானும் அவனது மனம் இப்போதும் குற்றமுடைத்தோ? சேர்க்கை யாலன்றோ அவன் கெட்டனன்? ஐயோ! நானே இவனை இப்படி நிந்தித்துத்தள்ளினல் மற்றவர் என் செயார்? இவன் செய்தது பொல்லாததாயினும் இப்போது உண்மை யாய் மனம் வருந்துகின்றனனே. இனி அப்படிச் செய்யான். இனிமேல் தான் இவன் முகத்தில் உண்மை அன்பு உண்டு. இப்போது அப்பாவும் மன்னித்தார்கள். அண்ணுவும் மன் னித்தார்கள். காருண்யமும் ஒன்றும் பேசவில்லை. யாவரும் மன்னித்தனர். பின் பேதையாகிய நானே மன்னிக்கமாட் டேன்? அவன் எது செய்யினும் அவன் பின்னன்றோ என் ஏழை மனம் போகிறது. என்னைச் சார்ந்தார்க்கு இவன் இவ்வளவு தீங்கிழைத்தும் என்மனம் அவனைக் கசந்த பாடில்லை. நானும் அவனைக் கசக்கமுடியுமா? ஐயோ! என் மூடமனத்திற்கு மறுபடியும் இச்சிறுவேளையில் அவன் வேலை பெறா அமுதம் எனத் தோன்றுகின்றனனே. என்ன அநியா யம்! ஓ ஓ காதல் என்பது இவ்வளவு மடமை ஆனதா? காத லின் இலக்கணம் இத்தன்மையதா? நான் இதற்குள்ள இவ்வ ளவு வலிமையை இதுகாறும் நேராக உணர்ந்து அறிந்தேனல் லேன். இன்று தான் உணர்ந்தேன். இன்று தான் அறிந்தேன். என் கொல் இதன் மாயம்! இப்போதன்றோ முன் ஒரு தவப்பெண் மனமருண்டு உரைத்ததின் முழு அர்த்தமும் தெரிந்தேன்: அஃதெப்படி மெள்ள மெள்ள என் ஞாபகத்திற்கு வருகிறது:

"கற்புத்தான் இலள்; நற்றவ உணர்விலள்
வருணக் காப்பிலள்; பொருள் விலையாட்டி யென்
றிகழ்ந்தனன் ஆகி, நயந்தோன் என்னது,
புதுவோன் பின்றைப் போன தென் னெஞ்சம்:
இதுவோ அன்னாய்! காமத் தியற்கை?"*

* மணிமேகலை.

# முடிவுரை.

யாண்டு பலவாக நரையில ஆகுதல்
யாங்காகியர்? என வினவுதிர் ஆயின்:
மாண்ட என் மனைவியொடு மக்களு நிரம்பினர்;
யான் கண்டனையர் என் இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும்; அதன்தலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர் யான் வாழும் ஊரே.—பிசிராந்தையார்.

மனிதன் சரிதம் அளவு கடந்த விரிவை உடையது. அஃது ஏறக்குறைய காலத்தோடு ஒத்த நித்திய முடையது. ஏககாலத்திலும் அதன் விரிவும், எண்ணிறந்த மாறுபாடும் மனந்தடுமாறி மயங்கச் செய்கின்றன. பூதங்களாலாய தேகம் அப்போதைக்கப்போது அழிவுறுதலால் ஒருவனுடைய சுவாநுபவம் அணுப்பிரமாணமேயாம். மற்றுச் சர்வாநு பூதியோ மேருக்கொப்பாம். ஆயினும் நமது மனமுதலிய அந்தக்கரணங்களால் உலக அநுபவத்தை ஒருவாறு நாம் உய்த்துணருகிறோம். மனோபாவமே இங்ஙனம் எல்லை கடந்து பரவும் சர்வாநுபவத்தை, நம் ஒருமையான அநுபவ அறிவோடு பெரிதும் இயைக்க உதவுகிறது. இல்லையெனில் மற்று மநேக கருமங்கள் முடியாததோடு இலக்கியங்கள் கற்பித்தலும், கற்பித்தபின் அவைகளோடு அநுதாபங்காட்டி மன மாறுபட்டுக் குணச் சிறப்படைவதும் முடியா. ஆகையின் ஒருவன் ஒரு சரிதத்தைச் சொல்லப் புகுந்தக்கால் அதை அவன் பாவித்து உணருகிறபடி முழுவதும் வெளியிட முடியாததுந் தவிர, அங்ஙனம் வெளியிடுவதும் அவசியம் இல்லாததாகிறது. இஃது இப்படி என்று தான் எடுத்துக்கொண்ட விஷயத்தை ஒருவாறு குறித்துச் சொல்லி, அதன் வழியாக வாசிப்பவரின் எண்ணத்தை எழுப்புவதே தான் அவனுடைய நோக்கம். இவ்வணம் இதை இயற்றுவனேல் அவ் இலக்கிய ஆசிரியன் தான் மேற்கொண்ட கருமத்தை இனிது முடித்தவனாவான்.

சந்திரவர்மா மணிமங்கலம் வந்து இருமாதங்களாகின்றன. இன்னும் ஷண்முகநாதர் வீட்டு மணப்பந்தர் பிரிக்கப்

படவில்லை. நாம் முற்பார்த்ததைவிட அது மிக அலங்காரம் பொருந்தியிருக்கிறது. ஷண்முகநாதர், மிக்க மன உறுதியோடு காருண்யத்திற்கு மணம் செய்துவிடவேண்டுமென்ன, மகா தேவரும் அப்படியே ஆகுக என்று ஒப்புக்கொண்டனர். மேலும் அவர் ஒரு நாள் சுந்தரத்தைத் தன் அறைக்குள் அழைத்து அவன் மணவினையைப்பற்றிச் சிறிது அறிய விரும்பினர். அவர்களுக்குள் எவ்வித பேச்சு நடந்ததோ நமக்குத் தெரியாது. அதெப்படி யிருப்பினும், சுந்தரநாதத்தின் மணத்தின் பொருட்டு, மதுரையிலிருந்து அவன் தமையன் வந்திருந்தார். அவர் தனக்கொரு அத்தை மகன் உளனென்றும் அவன் ஜமீனில் பெரிய உத்தியோகத்தில் இருக்கிறனென்றும் தெரிய அடக்க முடியா வியப்படைந்தனர். "நாமகள் குடிகொள்ளுமிடத்தில் பூமகளும் விருந்திற்காயினும் வருவாள் போல் இருக்கிறதே!" என்றனர் அவர். மணிமங்கலத்தில் நடந்த இருமணங்களுக்கும் அவர் தம் மனமார மிக்க அழகிய நடையில் செவ்விய கருத்துக்களைப் பெய்து வாழ்த்துப்பாக்கள் எழுதினர். மேலும் கல்யாண இறுதியில் இவர் சந்திரவர்மாவோடு மணிமங்கலத்தில் உறைவதற்கும் மதுரையில் வசிப்பதற்கு முள்ள தாரதம்மியங்களைப் பற்றி விரிவாகப் பேசிக்கொண்டிருந்தனர். ஈதெதற்காகவோ இப்போது நாமறியோம்

மீனாட்சிசுந்தரத்திற்கும் இப்போதே மணம் நடத்தவேண்டுமென்று பலர் வற்புறுத்தினர். ஆனால் மீனாட்சி "எனக்கென்னத்திற்கு இப்போது?" என்று மறுத்துவிட்டான். ஆனல் சந்திரவர்மா "அது என் விஷயம். நீங்கள் அதைப்பற்றிக் கவலைப் படுதல் மிகை." என்றனர். இதறிந்த மீனாட்சி சுந்தரம் தான் தன் நான்கு ஆட்களோடு (காரியதரிசியின் வயமிருந்தவன் பல நாளைக்கு முன்னேயே விடுவிக்கப்பட்டான்.) ஓர் பெரிதும் கஷ்டமான வேலையில் புகுந்திருந்தாலும், "வர்மா எனக்கு எந்தப் பெண்ணை உத்தேசித்திருக்கிறரோ?" என்று ஒரு தரம் சிந்தித்ததும் உண்டு

ஷண்முகநாதரை இப்போது எவர் எது கேட்கினும் முன்போல் மகாதேவரைக் குறிக்காமல் "எல்லாம் விஜயம்: எனக்கென்ன தெரியும்!" என்று மொழிவர்.

காருண்யம் ஒரு நாள் விஜயத்தைப் பார்த்து அடக்க முடியாப் பெருமகிழ்ச்சியில் உழன்று "அத்தான், நீங்கள் இன்

னம் ஒரு விஞடி வராதிருந்தால் நான் என்ன செய்திருப்பேன் தெரிவீர்களா? நீங்கள் எனக்குக் கற்பித்த ஒழுக்கம் அன்ரே என் எண்ணத்திற்குத் தடங்கலாய் நின்றது. இப்போதன்ரே, அத்தான், அதன் முழுப்பொருளும் எனக்கு அங்கை நெல்லியென விளங்குகிறது. இந்தக் கைகளைச் சொந்தமாக உடைய என்னைப்போல் பேறு பெற்றவர் உலகில் இன்னொருவர் உண்டோ அத்தான்?" என்று இனிய மெல்லிய குரலில் சொல்லிக் கண்ணீர்வார உடல் புளகிதம் கொள்ளச் செம்மாந்திருந்தனள்.

மற்றொரு நாள் சாயந்திரம் சுந்தரநாதம் கண்ணகியை நோக்கி "கண்ணகி, அதென்னமோ அன்றைக்குப் படிப்பதாய்ச் சொன்னையே. அதென்ன படி. இன்றைக்கு நேரமிருக்கிறது கேட்கிறேன்." என, கண்ணகி சிரித்துக்கொண்டே "இதை நன்ருய்க் கேட்டு இதன் பொருளை மனதில் பதிக்கவேண்டும்." என்று சொல்லிச் 'சிவகாமி சரிதத்தை'த் தனது இனிய குரலில் இசைத்தனள்.

அதேவேளையில் அரண்மனை அந்தப்புரத்தில் வர்மாவும் கோகிலமும் பூச்செண்டு விளையாடினர். அப்போது கோகிலம் பூச்செண்டை நோக்கி "அத்தான் முன்மாதிரி இனி எப்போதாவது என்னை விட்டுச் செல்வதாயிருந்தால், நீ அத்தானிடம் போகாதே." என்று அதை அவர்பால் எறிந்து எங்கே அவர்கையில் விழாமற்போகிறதோ என்று பயந்திருந்தாள். வர்மா அதைக் கையிற்பிடித்து "இப்போதென்ன சொல்லுகிருய் கோகிலம்?" என்ருர். கோகிலம் அவர் நீண்ட கையைப் பற்றிக் கண்ணில் ஒற்றினள். பின்னர் சிறிது நேரத்திற் கெல்லாம் ருக்மணி வந்து "காருண்யமும் கண்ணகியும் உன்னைப் பார்க்க வந்திருக்கிருர்கள்" என்ருள். ருக்மணி என்னவோ பார்வைக்கு இப்போது மணமகள்போல் இருக்கிருள்.

ஒரு நாள் காலைப்போது விஜயம், வர்மா, சுந்தாம், மீனுட்சி ஆகிய நால்வரும் பழைய கறுப்பன் உதவிகொண்டு மந்திரவாதி இருந்த இடத்திற்குப் போயினர். அவ்விட முழுதும் இப்போது ஒரே மணல்மேடாய் இருந்தது. கிழவி அங்ஙனமே புதைப்புண்டனளோ என்று ஐயுற்று, யாவரும் மணலைத் தோண்ட முயன்றனர். சிறிதுநேரத்திற்குள் மீனுட்சி பல மண்டை ஓடுகளையும் எலும்புகளையும் மற்றவைகளோடு

எடுத்து வெளியே எறிந்தான். அப்போது கறுப்பன் "இதோ மாரியாத்தா! அவதான்." என்று ஒருபுறம் சுட்டிக்காட்டினன். சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் வந்து சுந்தரநாதத்தின் முகத்தைப் பார்த்து மனம் சுளித்தாள். பிறகு விஜயத்தையும் உற்று நோக்கினள். இவர்கள் என்னென்னவோ கேட்டனர். ஒன்றுக்கும் அவள் பதில் சொல்லாது கீழே கிடந்த தன் பழைய மாந்திரீக கருவிகளைப் பொருக்கினள். உடனே சுந்தரம் "நீ விஷம் விற்றதற்காக உன்னைத் தண்டிக்கப் போகிறார்கள்—என்ன! ஞாபகம் இருக்கிதா?" என்று கேட்டான்.

"என்ன?—ஹ்ற-ஹ்ற-ஹ்ற எனச்சிரித்து, "அப்போ கொண்ணவங்களுக்கு ஒண்ணு மிருக்காதோ?" என்றாள்.

"ஆனால் ஒருவரும் கொல்லவில்லையே." என்றான் சுந்தரம்.

"ஹ்ற-ஹ்ற-ஹ்ற. நான் மருந்து போடாத போனு காளேயாட்டமா இந்த ஐயா" என்று விஜயத்தைக் காட்டி "இண்ணைக்கி இங்கே இருப்பாங்களா! க்ங்ஹ்ற." என்று ஒருதரம் இருமிவிட்டு "ஏயை சனங்கதான் பொய் சொல்றவங்களாம். ஹ்ற-ஹ்ற-ஹ்ற." என்று இழிவு சிரிப்பு சிரித்தனள்.

"என்ன! மருந்தா? என்ன சொல்லு." என்றார் வர்மா.

"ஆமா ஐயா! வெள்ளம் வந்தண்ணக்கி மத்தா நாள் காலமே பச்சரத்தங் கக்கிக்கிட்டு நினவில்லாத கிடந்தாங்க இந்த ஐயா. என்னே தண்ணி கொண்டுபோய் அங்கே ஒதுக்கிச்சி. பாத்ததுமே சங்கதி தெரிஞ்சிபோச்சி எனக்கு. சுத்திமுத்தும் பாத்து ஒரு மூலிவை கசக்கி மூக்கிலே வைச்சேன். நீங்கவேறென்ன மருந்து கொடுத்தாலும் உசுர் தப்பாது. அதுக்குள்ளே யாரோ ஆள் அரவங்கேட்டுது. அப்புறம் நான் பூட்டேன் பொயைச்சிக்கு மிண்ணு—க்ங்ஹ்ற. க்ங்ஹ்ற" என்று இருமிக்கொண்டு தொண்டை வறளப் பேசினாள். இதுவரை அவளுக்குப் பின்புறமிருந்த மீனாட்சி சுந்தரம் "என்ன பச்சிலே காட்டுகிறாயா கிழவி?" என்று கேட்டான்.

"ஹ்ற—ஹ்ற—ஹ்ற. ஆமாம் நீ தான். உங்கூட இன்னம் ரண்டு மூணுபேர் இருந்தாங்களே அவங்க எங்க? க்ங்ஹ்ற—க்ங்ஹ்ற" என்று அவனை நோக்கிக் கூறினாள்.

அப்பொழுது விஜயம் "அம்மா! சூனியம் என்றால் என்ன அம்மா?" என்று மெதுவாய்க் கேட்டான்.

"ஒங்களுக்கு அதெல்லாம் என்னத்துக்கு! பூ பூத்துக் கா காய்க்கிறவங்க. க்ங்ஹ—க்ங்ஹ—க்ங்ஹ. நீங்க ஒருத்தர் பொண்ணைக் கெடுக்காதியும், ஒருத்தரை ஒருத்தர் கொல்லாதியும், ஒருத்தர் பொருளைத் தெட்டாமலு மிருந்தா போதாதா! க்ங்ஹ—க்ங்ஹ இன்னுஞ் சூனியமும் ஒங்களுக்குத் தெரியணுமா! ஹ—ஹ—ஹ ஏயைகளுக்குத் தெரிஞ்சதொட்டு இம்மட்டாவது இருக்குது. ஏயையிண்ணு எங்களுக்குப் பை பணத்தைக் காட்றீங்க. க்ங்ஹ நாங்களும் பணக்காரரெண்ணுதான் நஞ்சைக் கொடுக்கிறோம். ஹ—ஹ—ஹ" என்று நகைத்துக்கொண்டே கறுப்பன் கூப்பிடுவதையும் கேளாது வந்த வழியே போய்விட்டாள். இவர்கள் ஒருவரும் அச்சமயம் ஒன்றும் பேச முன்வந்தார் அல்லர்.

அப்போது கறுப்பன் சுந்தரத்தைப் பார்த்து "சாமி! அண்ணக்கிப் பாத்தீங்களே—அந்த முனியன்வூட்டே—அண்ணக்கி அந்த சந்திலே—அவன் இப்போ பணக்காரனாப் பூட்டான் சாமி! அண்ணக்கி அவன் வூட்டிலே எலும்பு வியுந்தாப்போல, அப்புறம் ஒருநாள் ராத்திரி பணம் வுயுந்துதெண்ணு சொல்லிக்கிட்டாங்க. சாமி!" என்று கண்ணைச் சிமிட்டி மெதுவாகச் சொன்னான்.

பிறகு விஜயம் "உலகத்தில் எவ்வளவு விஷயம் நம்மால் அறிய முடியாவண்ணம் நிலவுகிறது. சந்திரா! இந்தப் படுகிழவிக்கு உன்னையும் என்னையும் விட எவ்வளவு அதிகம் தெரிந்திருக்கிறது. யோசித்துப் பார்க்கின் மனமயங்கித் திகைக்கவில்லையா சந்திரா!" என்று கேட்டுக்கொண்டிருந்தான். அதற்குள் "வெய்யில் அதிகமாகிறது. போகலாம்" என்றனர் மற்றவர்.

மற்றொரு நண்பகல் பெரிய ஜமீன் தலைவரும் மகாதேவரும் அரண்மனை உட்புறத்து ஒரு பெரிய கூடத்தில் பேசிக்கொண்டிருந்தனர்.

"என்ன அப்படிச் சொல்கிறீர்களே! விஜயம் வேலைக்கு வந்த கொஞ்ச நாட்களுக்குள் எத்தனையோ ஜமீன் விஷயங்களில் ஊக்கமெடுத்துக்கொண்டிருக்கிறானும். பழைய காரியதரிசியினால் மறைந்திருந்த அநேகம் ஊழல்கள் இப்போது

தெரியவருகின்றன. சந்திரன் இப்போது அநேக விஷயங்களைச்செய்ய முயன்றுகொண்டிருக்கிறுன். இவையாவற்றிற்கும் விஜயம் பேருதவியாக இருப்பான் என்கிறுன் சந்திரன்.யாவும் சந்திரன் சொன்னுன் எனக்கு." என்ருர் ஜமீன்தலைவர்.

"எல்லாம் தங்கள் ஆசிர்வாத பயன்தான். விஜயன் இன்னும் சிறியவன் தானே. அவ்வளவு உயரிய உத்தியோகத்தை வகிக்கத் திறமையும் குணமும் உயரியதாகவே இருக்கவேண்டும். சந்திர வர்மாவுக்கு அவன் இளமை முதற்கொண்டு நண்பன். ஆகையால் ஒரு கால் தன் தோழனைப் புகழ்ந்திருக்கலாம் . . . நேற்றுக் காரியதரிசி என்னிடம் வந்திருந்தார்—" என்று ஆரம்பித்தார் மகாதேவர்.

உடனே தலைவர் "அவர் இன்னும் ஒன்றையும் ஒப்புக்கொள்ளவில்லை. ஆட்களை எல்லாம் வெளிப்படுத்தி மற்ற விஷயம் யாவும் களங்கமறத் தெரிவித்தா லொழிய எவ்விதமான மன்னிப்பும் தகாதென நினைக்கிறேன் நான் . . . நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்ருர்.

"நான் என்ன தங்களுக்குச் சொல்லப் போகிறேன். மீனுட்சியை மன்னித்து ஆதரவு செய்த உங்களுக்கு நான் சொல்லுந் திறனே? அவர் உள் விஷயங்கள் பல மீனுட்சி அறிந்துகொண்டிருக்கிறுன் போல் இருக்கிறது . . . எல்லாம் தங்கள் கருணை." என்று இறைஞ்சினர் மகாதேவர்.

அப்போது அரசர் "அன்றைக்குச் சந்திரன் என்னிடம் மீனுட்சிசுந்தரத்தைக் கொணர்ந்து தெரிவித்தபோது, நான் நமது சோமுவைப் பார்ப்பதாகவே நினைத்தேன். நான் கடைசியாய்ப் பார்த்தபோது இவ்வளவு வயதுதான் சோமுக்கு. நம்மூவரில் சோமுதான் மிக்க அறிஞன் . . . எல்லாம் கடவுள்செயல். நம்மாலென்ன முடிகிறது." என்று சற்றே சிந்தனையில் ஆழ்ந்தனர் பிறகு இருவரும் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தனர்.

முற்றிற்று.

# உட்பிரிவு.



PRINTED AT THE S. P. C. K. PRESS, VEPERY, MADRAS.—1918.